# இளந் தமிழர்

ILAKKIYA VACA

# இலக்கிய வாசகம்

## ஆறும் வகுப்பு

உயர்தர ஆரம்பப் பாடசாலைகளுக் குரியது.

வித்வான் ஈ. பண்டார நம்பியார்



இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்

மதுரை :: :: சென்னை

பதிப்புரிமை] 1951 [விலை அணு 12.

# முன்னுரை.

'இளந்தமிழர் இலக்கிய வாசகம்' என்னும் இவ்வாசகத்தொடர், அரசியலார் 1939-ம் ஆண்டில் வெளியிட்ட பாடத்திட்ட முறையை பின்பற்றி அமைக்கப்பட்டுள்ளது. தாய்மொழிப் பற்றும், பயிற்சியும், நாட்டுப் பற்றும், நல்லோர் நடந்த வகையில் நாட்டமும், பண்பாடும் ஆகிய இயல்புகள் மாணவர் உள்ளத்துப் பதியும் முறையில் அமைந்துள்ள இத்தொடர் முறைகள் தமிழ்மொழி வழக்கத்தைப் பெரும்பாலும் கையாண்டிருப்பது, மாணவர்கட்கு பயிற்சிபெறத் தக்க துணையாய் நிற்கும். கட்டுரை யாக்கமும் படவிளக்கமும் மாணவர்களுக்கு ஆராய்ச்சி உள்ளத்தையும் கற்பனையாற்றலையும் உண்டாக்கும் தன்மையனவாய் இவற்றிற் சேர்க்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாட இறுதியிலும் வினாக்களும் பயிற்சியும் இலக்கணமும் சேர்க்கப்பட்டுள்ளன. செய்யுட் பகுதியும் அந்தந்த வகுப்புக்கு ஏற்றவாறு தொகுத்தமைக்கப் பெற்றுளது.

தமிழாசிரியர்களும், தலைமையாசிரியர்களும் இத்தொடர் முறைகளைத் தங்கள் தங்கள் கலாசாலைகளில் பாடமாக வைத்து என்னை ஆதரிப்பார்கள் என்று நம்புகிறேன்.

பதிப்பாசிரியன்.

எக்ஸெல்ஸியர் பவர் பிரஸ், மதுரை:—'51.

# உள்ளுறை

## செய்யுள்

# உரை நடை

# இளந் தமிழர்
# இலக்கிய வாசகம்
## ஆறும் வகுப்பு

## செய்யுள்

### I. கடவுள் வாழ்த்து

### 1. தேவாரம்

பண்ணி னேர்மொழி யாளுமை பங்கரோ,
மண்ணி னார்வலஞ் செய்மறைக் காடரோ,
கண்ணி னாலுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்குவீர்.

—திருநாவுக் கரசர்.

### 2. பெரிய திருமொழி

வந்தாய் ; என்மனம் புகுந்தாய் ; மன்னி நின்றாய் ;
நந்தாத கொழுஞ்சுடரே! எங்கள் நம்பீ!
சிந்தா மணியே திருவேங்கட மேய
எந்தாய்! அளியேன் உனை என்றும் விடேனே.

—திருமங்கையாழ்வார்.

# II. நீதிப் பகுதி

## 1. திருக்குறள்

கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். 1

எண்ணித் துணிக கருமம்; 'துணிந்தபின்
எண்ணுவம்' என்ப(து) இழுக்கு. 2

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 3

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்(கு), அருந்திய
தற்றது போற்றி உணின். 4

—திருவள்ளுவர்.

## 2. நல்வழி

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்,—கூடுவிட்டே
ஆவிதான் போயினபின், யாரே அனுபவிப்பார்
பாவிகாள்! அந்தப் பணம். 1

ஆறிடு மேடும் மடுவும்போ லாஞ்செல்வம்
மாறிடும் ஏறிடும், மாநிலத்தீர்!—சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து. 2

கல்லானே யானாலும் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங்(கு) எதிர்கொள்வர்;—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்.

தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென்(று) உணர். —ஔவையார். 4

## 3. நன்னெறி

இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே ;—பொன்செய்
அதிர்வளையாய்! பொங்கா(து) அழற்கதிரால் தண்ணென்
கதிர்வரவால் பொங்கும் கடல். 1

உள்ளங் கவர்ந்தெழுந்(து) ஓங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க ;—வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்தல் அரிதோ விளம்பு. 2

அறிவுடையார் அன்றி அதுபெறார் தம்பால்
செறிபழியை அஞ்சார் சிறிதும் ;—பிறைநுதால்!
வண்ணஞ்செய் வாள்விழியே அன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சு மோஇருளைக் கண்டு. 3

கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர்தாம் என்றும் மதியாரே;—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய்! வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். 4

—சிவப்பிரகாசர்.

## 4. நீதிநெறி விளக்கம்

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடைநல்லிசையும் நாட்டும்-உறுங்கவலொன்(று)
உற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியி னூஉங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை. 1

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென்(று) அகமகிழ்க ;—தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக 'கற்றவெல்லாம்
எற்றே இவர்க்குநாம்' என்று. 2

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். 3

வாங்கும் கவளத்(து) ஒருசிறிது வாய்தப்பின்
தூங்கும் களிறோ துயருறா ;—ஆங்கதுகொண்(டு)
ஊரும் எறும்பிங்(கு) ஒருகோடி உய்யுமால்
ஆரும் கிளையோ(டு) அயின்று.

—குமரகுருபரர்.

## 5. நீதிவெண்பா

சிற்றுணர்வோர் என்றுஞ் சிலுசிலுப்பர், ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே ;—வெற்றிபெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தின் உண்டோ ஒலி. 1

தன்னை யளித்தாள் தமயன் மனைகுருவின்
பன்னி யரசன் பயிறேவி—தன்மனையைப்
பெற்றாள் இவரைவர் பேசி லெவருக்கும்
நற்றாய ரென்றே நவில்.

தாமுங்கொ டார்கொடுப்போர் தம்மையுமீ யாதவகை
சேமஞ்செய் வாருஞ் சிலருண்டே—யேமகிழல்
இட்டுமலர் காய்கனிக ளீந்துதவு நன்மரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண். 3

யாலினீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலுநீர் கண்டமையு மேன்மைபோல்—நூலினெறி
உற்றோர் இடுக்கண் உயிர்கொடுத்து மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து. 4

## III. புதிய பகுதி

### 1. இளந் தமிழருக்கு

தமிழன் என்ற பெருமையோடு
தலைநி மிர்ந்து நில்லடா;
தரணி எங்கும் இணையி லாஉன்
சரிதை கொண்டு சொல்லடா;

அமிழ்தம் என்ற தமிழின் ஓசை
அண்ட முட்ட உலகெலாம்,
அகில தேச மக்களுங்கண்
டாசை கொள்ளச் செய்துமேல்

கமழ்ம ணத்தின் தமிழில் மற்ற
நாட்டில் உள்ள கலையெலாம்
கட்டி வந்து தமிழர் வீட்டில்
கதவி டித்துக் கொட்டியே

நமது சொந்தம் இந்த நாடு
நாணி லத்தில் மீளவும்
நல்ல வாழ்வு கொள்ளச் சேவை
செய்து வாழ்க நீண்ட நாள்.

—அரசவைப் புலவர், வெ. ராமலிங்கம் பிள்ளை.

## 2. இலக்கிய இன்பம்

வள்ளுவர் தந்த திருமறையைத்—தமிழ்
  மாதின் இனிய உயிர் நிலையை
உள்ளம் தெளிவுறப் போற்றுவமே—என்றும்
  உத்தம ராகி ஒழுகுவமே. 1
பாவின் சுவைக்கடல் உண்டெழுந்து—கம்பன்
  பாரிற் பொழிந்ததீம் பாற்கடலை
நாவின் இனிக்கப் பருகுவமே—நூலின்
  நன்னயம் முற்றும் தெளிகுவமே. 2
தேனிலே ஊறிய செந்தமிழின்—சுவை
  தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே எம்முயிர் உள்ளளவும்—நிதம்
  ஓதி யுணர்ந்தின் புறுவோமே. 3
கற்றவர் மெச்சும் கலித்தொகையாம்—இன்பக்
  கற்பனை சேருங் களஞ்சியத்தை
முற்ற அளந்து தெரிவோமோ—காதல்
  மூழ்கும் துறைகண்டு வாழ்வோமே. 4
பண்டை இயற்கை வளங்களெல்லாம் — பத்துப்
  பாட்டின் வளத்தினிற் கண்டறிந்து
மண்டல மெங்குங் கமழு மருந்—தமிழ்
  வாசம் நுகர்ந்து மகிழ்வோமே. 5

கவிமணி, தேசிகவிநாயகம் பிள்ளை.

## 3. வருகின்ற பாரதத்தை வாழ்த்துதல்

ஒளி படைத்த கண்ணினாய் வா வா வா
  உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா
களிபடைத்த மொழியினாய் வா வா வா
  கடுமை கொண்ட தோளினாய் வா வா வா

தெளிவு பெற்ற மதியினாய் வா வா வா
சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா
எளிமை கண்டிரங்குவாய் வா வா வா
ஏறு போல் நடையினாய் வா வா வா
நொய்ம்மை யற்ற சிந்தையாய் வா வா வா
நோய்களற்ற உடலினாய் வா வா வா
தெய்வ சாப நீங்கவே நாங்கள் சீர்த்
தேசமீது தோன்றுவாய் வா வா வா

—சி. சுப்பிரமணிய பாரதியார்.

## 4. எந்தாய் வாழ்க

எந்தாய் வாழ்க எனும் மந்திர நாதமே
இன்பத்தை ஊட்டுதம்மா—எங்கள்
இந்தியப் பாசுரத் தென்றல்வந் திதயத்தில்
தந்தியை மீட்டு தம்மா. 1

அன்னை இயற்கையின் புன்னகை அழகிலே
அமுதம் சுரக்கு தம்மா—அவள்
வன்ன மலை நதி வனங்களில் ஆனந்த
ஞானம் பிறக்கு தம்மா. 2

சாதி மத நிற பேத மிலாதொரு
சமரஸம் காணு தம்மா
ஆதவன் கதிர்கள் போல் ஆன்ம ஒருமையில்
ஆருயிர் சேருதம்மா 3

—கவி யோகி சுத்தானந்த பாரதியார்.

## 5. இரக்ஷணிய யாத்திரிகம்

வானமும் பூமியும் மகிழ்கொண்(டு) ஓங்கிட
ஞானமும் நன்மையும் நனி சிறந்திட
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தீன ரக்ஷகன் பதம் சிந்தித் தேத்துவாம்.

அன்பினுக் குருவ நல் லறத்துக் காலயம்
மன்பதைக் கருள் மழை வழங்கு பைம்புயல்,
நின்பரம் என்றினை வோர்க்கு நித்யபே
ரின்ப சஞ்சீவி தம்யேசு நாமமே.

—வித்வான் H. A. கிருஷ்ணபிள்ளை.

## IV. கதைப் பகுதி

### 1. கெடுவான் கேடு நினைப்பான்

(பஞ்சதந்திரம்)

வளமுறு மகத நாட்டில்,
 சண்பக வனத்தில் மன்னி,
உளமகிழ் கொடியும் மானும்
 உறவு கொண்டிருக்கும் காலைக்
கொளும் இளம் புல்லால் மான்மெய்
 கொழுத்திடும் இயல்பு நோக்கிக்
களமிகு நரியொன் றுள்ளிக்
 கபடத்தாற் கொல்ல எண்ணி, 1

துன்னிய மான்பாற் சென்(று), ‘ என்
 நண்ப ! நீ சுகமோ ? ’ என்ன
அன்னதைக் கேட்டு, ‘ நீ யார் ? ’
 என்றலும், ‘ அரியோய் ! யான் இக்

கொன்னுறு வனத்தில் வாழ்வேன்
குத்திர புத்தி என்பேர்
பன்னிய கிளையொன் றில்லாப்
பாவியாத் திரிந்து நின்றேன்; 2

இன்றுனைக் கண்டு நெஞ்சத்
தெய்தினேன் உவகை; இப்போ(து)
உன்றிருப் பணிசெய்(து) உன்பால்
உற்றிட விழைந்தேன்' என்ன
நன்றெனா இசைந் திரண்டும்
நண்ணு சண்பகத்தின் கீழே
துன்றின; அதன்மேல் உற்ற
சுபுத்தியாம் காகம் கண்டே; 3

"மித்திர மானே! நின்பால்
மேவினன் யாவன்?' என்னப்
"பத்தியிற் சிநேகம் செய்யப்
படர்ந்த சம்புகன்" என்றோத,
"அத்தகை யான்றன் செய்கை
குலத்தொடும் ஆரா யாமல்
மத்திய திடநாம் ஈகை
தகாதது வழங்கல் செய்யல்" 4

என்ன, அந்நரியும் அதுகேட்(டு)
"இவற்கு நீ நட்புச்செய்யும்
முன்னமே நின் இயல்பு
தெரியுமோ? மொழிதி" என்னப்
பின்னர் மான் காகத்தின்
மனம் ஒருமை பெறப்புரியத்

துன்னிய இம்மூன்றும் அருந்
தொடர்பு கொடு நின்றனவே. 5

(வேறு)

ஆயதினந் தனில், ஒருநாள்
மானைப் பார்த்(து) அந்தநரி
"மேயும் இளம்பயிர் உனக்கு
வேண்டு மட்டும் அருந்துமிடம்
நீ அறிதி!" எனக் காட்ட
அன்றுமுதல் நெடிய மான்
போய், அதனை மேய்ந்து பசி
போக்கி இருந்திட்டதுவே. 6

பயிரிட்டோன், இது கண்டு
வலை கட்டப் பாராது
செயிர் இட்ட மான் வழக்கப்
படி சென்று சிக்குண்(டு) "என்
உயிரிட்ட நண்பன் அலா(து)
உயச் செய்வார் யார்?" என்று
தயிரிட்ட மத்தென்னத்
தனது மனம் சுழல்காலை, 7

வன்பினொடு நரிகண்(டு), "இன்று
எண்ணம் எல்லாம் வாய்த்ததினித்
துன்புற இன்(று) இதன் எலும்பைத்
தசையினொடு சுவைத்துண்டே
இன்பினொடும் உறலாம்" என்(று)
எண்ணி வாளா விருப்ப,
அன்புறுமான் கண்(டு) "இங்கென்
தனைவிடுவி!" என அறைய, 8

நரியது கேட்டு, " இன்றைக்கோர்
விரத தினம்; நாளை எனில்
பரிகரிப்பன் நினது தளை
பகர்தரு தோல் ஆதலினால்;
பிரியம் உறு நட்பினர்க்கென்
பிராணனையும் விடவல்லேன்;
தெரிகிலையோ நீ?' என்றோர்
செடியின் மறைந் திருந்ததுவே, 9

காகமது மித்திரனைக்
காணாமல், அன்றிரவு
சோகமுற்றெங் கணுந்தேடித்
தோல் வலையில் பட்டதறிந்(து)
" ஊகமுடை மானே! இங்(கு)
உற்றுழல்வ(து) என்?' எனலும்,
" நீ கழறும் உரைகேளா
மையின் வந்த நிலை இதுவே" 10

" நண்பு கொண்ட நரிஎங்கே?"
என, 'எனது நல்லிறைச்சி
உண்பதற் கோர் செடியின்கீழ்
ஒளித்திருந்த(து)' எனப்புகல,
பண்புறு காகம் கேட்டுப்
"பயிர்க் கதிபன் உறுகின்றான்;
மண்படும் ஆருயிர் கழிந்த
வடிவம்போல் உறுக" என, 11

நண்ணிய அப்பயிர்க் கதிபன்
உயிர் கழிந்த நவ்வி என
எண்ணி அதை இழுத் தங்கு
வலை கட்டும் எல்லையினில்,

மண்ணின் விரைந் தோடுதலும்,
தண்டம் அவன் வலிந்தெறியத்
திண்ணியதோர் செடியின்கீழ்
இருந்தநரி சிதைந்ததுவே. 12

—வீரமார்த்தாண்ட தேவர்.

## 2. புத்தரும் ஏழைச் சிறுவனும்

[அரச பதவியைத் துறந்து அரண்மனையை விட்டு வெளியேறிய புத்தர், காடு மேடுகளை எல்லாம் கடந்துசென்ற களைப்பால் மயங்கி வீழ்ந்தார். அவரைக் கண்ட ஆடுமேய்க்கும் சிறுவன் ஒருவன், அவர் நிலைமையை நினைத்து இரங்குகிறான்; உயர்குலத்தவரான அந்த மகானுக்குத் தன் கையத்தில் பால் கறந்து கொடுத்தால் அவர் அருந்துவாரோ என்ற ஐயத்தால் தயங்குகின்றான். அவனுக்குப் புத்தர் பெருமான், 'பிறப்பினால் உயர்வு தாழ்வு கிடையா' என்று அறிவுறுத்துகிறார்.]

### மயங்கி வீழ்ந்து கிடக்கும் புத்தரைச் சிறுவன் காணுதல்

ஆடுகளை மேய்த்து வரும்—ஒருவன்
ஆயர் குலச் சிறுவன்
வாடிக் கிடந்தவனைச்—செல்லும்
வழியின்மீது கண்டான். 1

### அவன் செயல்

வையகம் வாழ்ந்திடவே—பிறந்த
மாதவச் செல்வன் முகம்
வெய்யிலில் வெந்திடாமல்—தழைகள்
வெட்டி யருகில் நட்டான். 2

தெய்வ குலத்திவனை—எளியேன்
தீண்டலும் ஆகாதினிச்
செய்வதும் யாதெனவே—சிறிது
சிந்தை தயங்கி நின்றான். 3

உள்ளந் தெளிந்துடனே—வெள்ளாடு
ஒன்றை யழைத்துவந்து
வள்ளல் மயக்கொழிய—மடுவை
வாயில் கறந்து விட்டான். 4

நட்ட தழைகளெல்லாம்—வளர்ந்து
நாற்புறமும் கவிய
கட்டிய மாளிகைபோல்—வனத்தில்
காட்சி அளித்த அம்மா! 5

பூவொடு காய்கனியும்—தளிரும்
பொலிந்து நிரம்பியங்கே
மேவு பலமணிகள்—இழைத்த
விதானமும் ஆன அம்மா! 6

ஐயனை இவ்வுலகம்—காணுதற்கு
அரியவோர் தெய்வமெனக்
கைகள் தொழுது நின்றான்—சிறுவன்
களங்கமிலா வுளத்தான். 7

## புத்தர் எழுந்து பால் கேட்டல்

நிலத்திற் கிடந்த ஐயன்,—மெல்ல
நிமிர்ந்து தலை தூக்கிக்
“கலத்தினிலே கொஞ்சம்—பாலைக்
கறந்து தருவாய்” என்றான். 8

## சிறுவன் மறுமொழி

"ஐயையோ! ஆகாது" என்றான்—சிறுவன்,
"அண்ணலே! யானும் உனைக்
கையினால் தீண்ட வொண்ணா—இடையன் ஓர்
காட்டு மனிதன்" என்றான். 9

## புத்தர் அறிவுரை

உலகம் புகழ் பெரியோன்—இந்த
உரையினைக் கேட்டந்நாள்
அலகில் கருணையினால்—சொன்ன
அமுத மொழி இதுவாம்: 10

"இடர் வரும் போதும்—உள்ளம்
இரங்கிடும் போதும்
உடன் பிறந்தவர் போல்—மாந்தர்
உறவுகொள்வா ரப்பா. 11

ஓடும் உதிரத்தில்—வடிந்து
ஒழுகும் கண்ணீரில்
தேடிப் பார்த்தாலும்—சாதி
தெரிவதுண்டோ அப்பா. 12

எவர் உடம்பினிலும்—சிவப்பே
இரத்த நிறமப்பா
எவர் விழி நீர்க்கும்—உவர்ப்பே
இயற்கைக் குணமப்பா. 13

நெற்றியில் நீறும்—மார்பில்
நீண்ட பூணூலும்
பெற்றிவ் வுலகுதனில்—எவரும்
பிறந்த துண்டோ அப்பா. 14

பிறப்பினால் எவர்க்கும்—உலகில்
பெருமை வாரா தப்பா
சிறப்பு வேண்டு மெனில்—நல்ல
செய்கை வேண்டு மப்பா. 15

நன்மை செய்பவரே—உலகம்
நாடும் மேற்குலத்தார்
தின்மை செய்பவரே—அண்டித்
தீண்ட ஒண்ணாதார்." 16

### சிறுவன் பால் தருதல்

நிலத்துயர் ஞானி—இவை
நிகழ்த்தி "என் தம்பீ!
கலத்தினிலே கொஞ்சம்—பாலைக்
கறந்து தா" என்றான். 17

ஆயர் சிறுவனும்—கலத்தில்
அளிக்க வாங்கி யுண்டு
தாயினும் இனியன் கொண்ட
தளர்ச்சி நீங்கினனே. 18

—கவிமணி சி. தேசிகவிநாயகம் பிள்ளை.

# V. பல்சுவைப் பகுதி

## 1. மோர்ப் பாட்டு

காரென்று பேர்படைத்தாய் ககனத்(து) உறும்போது;
நீரென்று பேர்படைத்தாய் நெடுந்தரையில் வந்ததற்பின்;
வாரொன்று மென்மயில்நேர் ஆய்ச்சியர்கை வந்ததற்பின்
மோரென்று பேர்படைத்தாய்; முப்பேரும் பெற்றாயே.

—காளமேகப் புலவர்.

## 2. பிறவிக்குணம்

சித்திரமும் கைப்பழக்கம் ; செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம் ;—நித்தம்
நடையும் நடைப்பழக்கம் ; நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம்.

—ஔவையார்.

## 3. ஆடம்பரம்

விரகர் இருவர் புகழ்ந்திடவே வேண்டும்,
விரல்நிறைய மோதிரங்கள் வேண்டும்,--அரையதனில்
பஞ்சேனும் பட்டேனும் வேண்டும், அவர்கவிதை
நஞ்சேனும் வேம்பேனும் நன்று. —ஔவையார்.

## 4. வண்டோ! பழமோ!

தேனுகர் வண்டு மதுதனை யுண்டு
தியங்கியே கிடப்பதைக் கண்டு
தானதை நாவற் கனியென மதித்துத்
தடக்கையால் எடுத்துமுன் பார்த்தாள்
வானுறு மதியம் வந்ததென் றெண்ணி
மலர்க்கரம் குவியும் என் றஞ்சிப்
போனது வண்டோ பறந்தது பழமோ
யாதென மருண்டு நின்றனளே.

—விவேக சிந்தாமணி.

## 5. தமிழ்நாடு

வேழம் உடைத்து மலைநாடு ; மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து ;—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர்வயல்தொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து. —ஔவையார்.

# இளந் தமிழர் இலக்கிய வாசகம்

## 1. உலக உத்தமர் (பகுதி 1)

[ வித்துவான் ஈ. பண்டார நம்பியார் ]

**உலக உத்தமர்** என்றவுடன் காந்தி அடிகளது எண்ணமே உங்கள் உள்ளங்களில் எழும் என்று நம்புகிறேன். காந்தி அடிகளை நாம் மட்டும் 'உலக உத்தமர்' என்று போற்றுவதாக எண்ணவேண்டாம்; உலக மக்கள் அனைவரும் அவர் பெரியார் என்பதை உணர்ந்து, அவரைப் போற்றுவதோடு, அவருக்கு நினைவுச் சின்னங்களும் நிறுவி இருக்கின்றனர்.

அமெரிக்க நாட்டிலுள்ள 'லைப்' என்ற புகழ் பெற்ற தினத்தாளின் ஆசிரியர், "காந்தி அடிகள் உலக வரலாற்றையே மாற்றினார்; இனி வருங்கால மெல்லாம், நாடுகள் அனைத்திலுமுள்ள மனிதர்கள் தங்கள் உள்ளங்களில் அவருடைய பெருமையை நினைவில் வைத்துப் போற்றுவார்கள்" என்று எழுதி இருக்கிறார். அந் நாட்டிலுள்ள **கார்னெல்** என்ற சர்வகலாசாலையில் அடிகளது திரு உருவச் சிலையை நிறுவி, அவர் பெயரால் ஒரு நூல் நிலையமும் ஏற் படுத்தவேண்டும் என்ற முயற்சி நடைபெற்று வருகின்றது. ஜப்பான் தேசத்தின் தலைநகரான **டோக்கியோ**வில், காந்தி அடிகளின் பெயரால் ஒரு சங்கம் இருக்கிறது. அச்சங்கத்தினர் 'உலக அமை திக்கு, காந்தி அடிகளின் அருள் நெறியே சிறந்த வழி' என்று சொற்பொழிவுகள் ஆற்றி வருகின்ற னர்; அந்நகரின் நடுவில் உள்ள ஹிபியா பார்க்கில்

அவரது உருவச் சிலையை நிறுவி உள்ளனர். சுவிட்ஸர் லாந்து தேசத்தில், மூன்று மாத காலத்திற்குள், இருபத்துநான்கு இடங்களில் காந்தி அடிகளைப் பற்றிய சொற்பொழிவுகள் நடந்திருக்கின்றன. இவ்வாறே இங்கிலாந்து முதலிய பிற நாட்டினரும் அவரை உலக உத்தமர் என்றே போற்றுகின்றார்கள்.



காந்தி அடிகளை உலகம் ஏன் 'பெரியார்' என்று போற்றுகின்றது? அதற்குக் காரணம் அவர் வாழ்க்கை ஒன்றேதான். அவர் ஒரு மனிதனுடைய வாழ்க்கை எத்தகையதாக இருக்க வேண்டும் என்பதை வாயாற் சொல்லவில்லை; ஆனால், அந்த வாழ்க்கையை வாழ்ந்து காட்டினார். ஏழைகள் மிகுந்த இந் நாட்டில் அவர் ஏழைக் கோலம் பூண்டு எளிய வாழ்வு நடத்தினார்; நாட்டு நலத்திலேயே தம்

வாழ்க்கையை ஈடுபடுத்தினர்; உலகம் அன்பு நெறியில் வாழ்ந்து அமைதி பெறவேண்டும் என்று ஆசை கொண்டு உழைத்தார். இத்தகைய தூயாரது வரலாற்றை அறிந்து கொள்வது நமது கடமையாகும்.

நமது இந்திய நாட்டின் வடமேற்குப் பகுதியில் குஜராத் என்று ஒரு மாகாணம் இருக்கிறது அம் மாகாணத்திலுள்ள கத்தியவாரில் **போர் பந்தர்** என்ற ஊரே, காந்தியடிகளைப் பெற்றெடுத்த பெருமை பெற்றது. அங்கு, கி.பி. 1869-ஆம் ஆண்டு **அக்டோபர்** மாதம் 2-ம் நாள் காந்தி அடிகள் பிறந்தார். பெற்றோர்கள் அவருக்கு **மோகனதாஸ் கரம்சந்திர காந்தி** என்று பிள்ளைத் திருநாமம் சூட்டினர்கள். அவர் தந்தையார் **காபா காந்தி** என்னும் பெயரினர். அவர் இராஜகோட்டைச் சிற்றரசரிடம் அமைச்சராக இருந்து நன்மதிப்புப் பெற்றவர்; உண்மை பேசுதல், இனியவை கூறல், ஏழைகளுக்கு இரங்குதல் முதலிய நற்குணங்கள் அமையப் பெற்றவர்; அவரது மனைவியார் **புத்தலிபாய்** என்னும் அம்மையார் அவர் பெண்ணிற்குரிய பெருந்தன்மைகள் அனைத்தும் வாய்க்கப் பெற்றவர்; கடவுள் பக்தியும், சமய நம்பிக்கையும் மிகவுடையவர். பெற்றோர் இயல்பே பிறந்தார் இயல்பும் என்றபடி கரம் சந்திரர் தந்தையின் தன்மையும், தாயின் பண்பும் பொருந்தியவராக விளங்கினர்.

காந்தி அடிகள் ஆரம்பப் பாடசாலையில் படித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள் **இன்ஸ்பெக்டர்** அவரது வகுப்பிற்கு வந்தார். அப்பொழுது ஆசிரியர் சொல்வதெழுதல் நடத்திக் கொண்டிருந்தார். சிறுவர் காந்தி ஒரு வார்த்தையைப் பிழையாக எழுதினர். அதைக் கண்ட ஆசிரியர் பக்கத்துப் பையனைப் பார்த்தெழுதுமாறு அவரைத் தூண்டினர். ஆனல், இள மாணவரான காந்தியின் உள்ளம்

அதற்கு இசையவில்லை. ஆசிரியரின் போக்குத் தவறானது என்று கூட அவருக்குப் பட்டது. இதனால், இளமையிலேயே உண்மை வழி நிற்கும் உயரிய வாழ்க்கை அவரிடம் உருவாகி இருந்ததைப் பார்க்கின்றோம் அல்லவா ?

காந்தி அடிகளுக்கு 13-ஆம் வயது நடக்கும் போது, பெற்றோர்கள் அவருக்குத் திருமணம் செய்து வைத்தனர். அவர் மனைவியார் **கஸ்தூரிபாய்** என்னும் அம்மையார். 'இந்த இளமணத்தால் எனக்கு நேர்ந்த இன்னல்கள் பல' என்று அடிகளே பிற்காலத்தில் கூறி இருக்கின்றார். மணம் நடைபெற்ற காலத்தில், காந்தி அடிகள் மாணவராக இருந்தார்.

அவர் தமது 14-ஆம் வயதில் வாழ்க்கைப் பாதையில் சிறிது வழுக்கி விழ நேர்ந்தது. தீய மாணவர் சிலரது சேர்க்கையால் புலால் உண்டார்; பீடி, சிகரெட் குடித்துப் பழகினார்.

> " தன்னெஞ் சறிவது பொய்யற்க ; பொய்த்தபின்
> தன்னெஞ்சே தன்னைச் சுடும் "

என்றவாறு, அவர்மனமே அவரைச் சுட்டது; அவர் அப்பழக்கங்களை வெறுத்துத் தள்ளினார். குற்றத்தை உணர்ந்து உள்ளம் வருந்தினார்; தந்தையாரிடம் மன்னிப்புக் கேட்கும் முறையில் கடிதம் மூலம் அவருக்குச் செய்தியை அறிவித்தார். நோய் வாய்ப்பட்டுப படுக்கையில் கிடந்த தந்தையார், தம் புதல்வனின் போக்கைக் கண்டு கண்ணீர் வடித்தார். காந்தி அடிகள், அன்று முதல், அத் தீய வழக்கங்களை அறவே ஒழித்து உண்மை வழி நின்றார்.

காந்தி அடிகள் தமது 19-ஆம் வயதில், பாரிஸ்டர்ப் படிப்பிற்காக இங்கிலாந்து சென்றார். அவர்

அங்கு நான்கு ஆண்டுகள் தங்கினர்; தாய் நாட்டுப் பண்பாட்டை இழக்காமலும், தாய் சொல்லைத் துற வாமலும் தூயவாழ்வு நடத்தினர்; ஆங்கில மக்கள் கல்வியையும், கைத்தொழிலையும் ஓம்புவதை நன்கு கவனித்தார். அவர்களது நாட்டுப் பற்றும், மொழிப் பற்றும் அடிகள் உள்ளத்தில் ஆர்வ மூட்டின.

அவர் 1894-ஆம் ஆண்டு பாரிஸ்டர் காந்தியாகத் தாய் நாடு திரும்பினர்; நாடு வந்தடைந்ததும், முத லில் தம் அன்னையாரைக் காண ஆசை கொண் டார். அன்னையார் காலஞ் சென்றுவிட்டார்கள் என்ற செய்தியை அறிந்ததும், அடிகள் கொண்ட கவலைக்கு அளவு முண்டோ? என்றாலும், கற்றறி வுடைய காந்தி அடிகள், தம் அன்னையார் கூறிய அறிவுரைப்படி நடப்பதே, தாம் அவர்க்குச் செய்யும் உதவி என்று உணர்ந்து ஆறுதல் அடைந்தார்.

பாரிஸ்டர் காந்தி பம்பாய் நகரில் தம் தொழிலைத் தொடங்கினர். பிறகு இராஜ கோட் டையை அடைந்து, அங்குத் தொழில் நடத்தினர்.

**அரும் பொருள் :—** உத்தமர் - நற்குணமுடையவர். எழும் - தோன்றும். போற்றுதல் - புகழுதல். சின்னம் - அடையாளம். திரு - மேன்மை. நெறி - வழி. ஈடுபடுத் தல் - வழங்கல். தூய - பரிசுத்தமான. அமைச்சர் - மந்திரி. திருமணம் - கலியாணம். இன்னல் - துன்பம். வழுக்கி - தவறி. புலால் - இறைச்சி. மனமாசு - மனக் குற்றம். ஓம்பும் - பாதுகாக்கும். அன்னை - தாய்.

## வினாக்கள்

1. காந்தி அடிகளைப் பிற நாட்டினர் எவ்வாறு போற்றுகின்றார்கள்?

2. அடிகளை உத்தமர் என்பது எதனால்?

3. அடிகளின் பெற்றோர்கள் யாவர்? அவர்கள் இயல் பென்ன?

4. இள மாணவராக இருக்கும்போதே அவர் உயர்ந்த வாழ்க்கையை மேற்கொண்டார் என்பதற்குச் சான்று கூறுக.

5. அன்னையார் காலஞ் சென்றமையை அறிந்த அடிகள் எவ்வாறு ஆறுதல் அடைந்தார்?

## பயிற்சி

1. அவர் தாய்நாட்டுப் பண்பாட்டை யிழக்காமலும், தாய் சொல்லைத் துறவாமலும் தூய வாழ்வு நடத்தினர்—இந்த மூன்று வாக்கியங்களாகப் பிரித்து எழுது.

2. எதிர்ப்பதம் தருக :—சிற்றரசர், பெற்றோர், தூய, உண்மை, பண்பு, நின்று, பொய்யற்க, சுடும்.

## இலக்கணம்

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் தருக :—

1. உலகம் அன்பு நெறியில் வாழ்ந்து அமைதிபெற வேண்டும்.

2. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

3. வாய்மை யறமே வெற்றி அடைந்தது.

## 2. உலக உத்தமர் (பகுதி 2)

காந்தி அடிகள், இராஜ கோட்டையில் வழக்கறிஞராய் வாழ்ந்து வந்த காலத்தில் அவர், தென் ஆப்பிரிக்கா நீதி மன்றத்தில் இந்திய வர்த்தகர் ஒருவரின் வழக்கை நடத்துவதற்காக ஆப்பிரிக்கா சென்றார். அங்கே ஆங்கிலேயர்கள் ஆட்சிபுரிந்து வந்தனர். அவர்கள், அங்குக் குடியேறி இருந்த இந்தியர்களை மிகவும் இழிவாக நடத்தினார்கள். காந்தி அடிகளைக்கூட, அந்த வெள்ளையர்கள் 'கூலி பாரிஸ்டர்' என்று கேலி செய்தார்கள் என்றால், வேறு கூறுவானேன்? காந்தி அடிகள் இந்திய மக்களின் உரிமைக்காகப் போராடத் துணிந்தனர். அதனால், அடிகளுக்கு நேர்ந்த இன்னல்கள் பல. அவர் அவற்றை எல்லாம் பொறுமையால் வென்றார்; அகிம்சை வழி நின்று அரசாங்கத்துடன் போராடினார். அப் போராட்டத்தால் சிற்சில நன்மைகள் ஏற்பட்டன. என்றாலும், இந்திய மக்களின் துயரம் முற்றிலும் நீங்கவில்லை.

இந்நிலையில், காந்தி அடிகள் இந்தியாவிற்குத் திரும்பிவந்து, மறுபடியும் தம் குடும்பத்தோடு சென்று ஆப்பிரிக்காவில் குடியேறினார். அப்போது ஆங்கிலேயர்களுக்கும், டச்சுக்காரர்களுக்கும் நடந்த போயர் யுத்தத்தில், அடிகள் ஆங்கிலேயர் பக்கம் நின்று உதவினார். இன்னா செய்தவர்க்கும் நன்மை செய்யும் ஏந்தல் அல்லவா அவர்! ஆனாலும், ஆங்கில அரசாங்கம் இந்தியர்களுக்கு ஆள்வரி முதலிய முறையற்ற வரிகளையிட்டுத் துன்புறுத்தியது. அவற்றைக் கண்டு மனம் கொதித்த அடிகள் அறப் போராட்டத்தை மேற்கொண்டனர். அரசாங்கம் காந்தி அடிகளைக் கைது செய்தது. தொண்டர்கள் பலர் சிறைசென்றனர். இறுதியில் காந்தி அடிகள் வெற்றி

பெற்றனர். முறையற்ற வரிகள் அகற்றப்பட்டன. இவ்வாறு காந்தி அடிகள் தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்காக, சுமார் இருபது ஆண்டுகள் உழைத்து, வெற்றி பெற்றுத் தாய்நாடு திரும்பி வந்துசேர்ந்தனர். இவ்வெற்றியே, அவர் பிற்காலத்தில் பெரியாராக விளங்குவதற்குக் காரணமாக இருந்தது என்று கூறலாம்.

இந்தியாவிற்கு வந்த அடிகள் பரத கண்டம் முழுவதும் சுற்றிப் பார்த்தார்; பல தலைவர்களைக் கண்டு பேசினார்; நாட்டு நிலையை நன்கு உணர்ந்தார். நாட்டு விடுதலையை அவர் உள்ளம் நாடியது. அப்பொழுது அவர் அஹமதாபாத்தில் சபர்மதி நதிக் கரையில், ஆசிரமம் ஒன்று அமைத்து அதில் அமர்ந்தார். பலர் அடிகளது சீடராயினர். இந்திய ராஜ குடும்பம் ஒன்றைச் சேர்ந்த **ராஜகுமாரி அமிருத கௌரி**, அடிகளுக்குச் சேவை செய்வதற்கென்றே 'உடைமை, பெருமை எல்லாவற்றையும் உதறிவிட்டு வந்து, அவருக்கு ஆங்கிலமொழிக் காரியதரிசியாக அமர்ந்து பணிபுரிந்தார். காந்தி அடிகள் சபர்மதி ஆசிரமத்தில் இருந்து கொண்டே, இந்திய விடுதலைக்கான திட்டங்களை வகுக்கலானார். ஏழைக் குடியானவர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் அவ்வப்போது உதவியாற்றி அவர்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டார்; அரிஜனங்களுக்கு அடைக்கலம் அளித்து அவர்கள் அன்பைப் பெற்றார். சுருங்கக் கூறினால், 'காந்தி அடிகளே இந்தியர்' என்ற நிலை ஏற்படலாயிற்று; எந்தத் திட்டத்தையும் 'இந்தியர்கள் ஒப்புக்கொள்கிறார்களா?' என்று கேட்கும் நிலை மாறி, 'காந்தி அடிகள் ஒப்புக்கொள்கின்றாரா?' என்று கேட்கின்ற நிலை ஏற்படலாயிற்று. உலகில் எந்த நாட்டிலுள்ள தலைவர்களுக்கும் இத்தகைய செல்வாக்கு இருந்ததில்லை. இதற்குக் காரணம்,

காந்தி அடிகளின் தன்னலமற்ற உயரிய வாழ்க்கையே யாகும்.

காந்தி அடிகள இந்திய விடுதலைக்காகப் பல போராட்டங்களை நடத்தினர். அவற்றுள் அவர் நடத்திய உப்புப் போர், வரலாற்று முதன்மை பெற்றுவிட்டது. அடிகள் அகிம்சை வழி நின்று அறப்போர் நடத்திய போதிலும், ஆங்கில அரசாங்கம் அவரைப் பலமுறை சிறையில் போட்டது. அடிகளைப் பின் பற்றி பண்டித நேரு, சர்தார் பட்டேல், இராஜாஜி முதலிய தலைவர்கள் பலரும் பணி புரிந்து சிறை சென்றனர். பல்லாயிரக் கணக்கான தொண்டர்களும் சிறை செய்யப் பட்டனர். இவ்வாறு பல ஆண்டுகளாக அகிம்சைப் போர் நடந்தது. இறுதியில் படைப்பலம் படைத்த அரசாங்கம், அடிகளின் ஆன்ம பலத்திற்கு அடி பணிந்தது. 1947 - ஆம் ஆண்டு ஆகஸ்டு 15 - ஆம் நாள் இந்திய நாடு விடுதலை பெற்றது. வெள்ளையர் வெளியேறினர். இவ்வாறு நாட்டிற்கு விடுதலை வாங்கித் தந்த காந்தி அடிகளை நாம் **மகாத்மா** என்று மதிக்கின்றோம்; சுதந்திர இந்தியாவின் தந்தை என்று போற்றுகின்றோம்.

நாடு விடுதலை பெற்ற பின்னரும் காந்தி அடிகள் அமைதி பெறவில்லை. நாடெங்கும் இந்து - முஸ்லிம் கலகம் தோன்றிற்று. அப்போது அடிகள், வாழ்க்கையில் 78 - ஆம் மைல் கல்லை அடைந்தவராக இருந்தும், கால் நடையாக ஊர் ஊராக நடந்து சென்றார்; அன்பு நெறியைப் பரப்பினர்; இந்துக்களும் முஸ்லிம்களும் நேசம் கொள்ளுமாறு உண்ணா நோன்பு மேற்கொண்டார். இவ்வாறு, அரும்பாடு பட்டு நாட்டில் அமைதியை உண்டு பண்ணினர் காந்தி அடிகள்.

அவர் 1948 - ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 30 - ஆம் நாள் வெள்ளிக்கிழமை யன்று, வழக்கம் போல், இறை வழிபாட்டிற்குப் புறப்பட்டார். மேடை யருகில் கும்பிட்ட கையுடன் நின்ற கொலைகாரன் ஒருவன், அடிகளின் ஆவி நீங்கச் சுட்டான். 'தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும்' என்றார் வள்ளுவர். அவன், தொழுத கையுள் துப்பாக்கியை ஒடுக்கிவைத்துச் சுட்டான். சுட்ட கொடியோனையும் கைகூப்பி வணங்கிய வண்ணம், 'ராம, ராம' என்று சொல்லிக் கொண்டே உயிர் விட்டார் உலக உத்தமர்.

"காந்தி அடிகள் இறந்துபோக வில்லை; இன்றும் வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றார்" என்றார் ஒரு பெரியார். உண்மைதான். அவர் அழிவற்றவர்; மன்பதைக் கெல்லாம் புதிய வாழ்வை நல்கிக்கொண் டிருக்கும் சாவா மருந்து ஆகிய அவர், உலக மனித உள்ளத்திற் குள்ளேயே நினைவுருவாக வாழ்கின்றார். இதுவரை நாம் அவரைப் போற்றினோம். இனி, பின்பற்றி நடக்கவேண்டும். "எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருள் ஒன்று உண்டு; அக் கடவுளின் கருவியே நாம்; இம்மையில் அமைதியையும் இன்பத்தையும், மறுமை யில் அவன் அருளையும் அடைய அன்பு கனிந்த அகிம்சையே சரியான வழி" என்பது உலக உத்தமரின் உயர்ந்த அருளுரையாகும். அதன்படி நடப்போமாக.

**அரும்பொருள்:—** இன்னா - துன்பம். அகிம்சை - துன்புறுத்தாமை. நேசம்-நட்பு. சாவா மருந்து - அமிர்தம். அழிவற்றவன் - நெடுங்காலம் வாழ்வோன். அருளுரை- உபதேசம், கட்டுரை, உறுதி. ஆன்மபலம் - மனவலிமை. உண்ணாநோன்பு - பட்டினி விரதம்.

## வினாக்கள்

1. அடிகள் தென்னாப்பிரிக்காவில் ஆற்றிய அரும் பணிகள் யாவை?

2. இந்திய நாட்டில் காந்தியடிகளுக்கு இருந்த செல்வாக்கை விளக்குக.

3. நாடு விடுதலை அடைந்தபின்னும் அடிகள் ஆற்றிய அரும்பணி யாது?

4. உலக உத்தமரின் உயர்ந்த அருளுரை யாது?

## பயிற்சி

1. சேர்த்தெழுதுக :—கவலைக்கு + அளவு. கொண்டு + இருந்தான். நாடு + பற்று.

2. பதம் பிரித்து எழுதுக :— வடமேற்கு, சொல்வதெழுதல், கண்ணுற்று.

3. எதிர்ப் பதம் கூறுக :— சில, முறையற்ற, தன்னலம், இன்று, பெரியார்.

4. வாக்கியங்களில் அமைத்தெழுதுக :—அறப்போர், நினைவுச் சின்னம்.

## இலக்கணம்

நிறுத்தற் குறிகள் :—

. முற்றுப்புள்ளி
? வினாக்குறி
! வியப்புக்குறி

ஒரு வாக்கியம் முடிந்ததும் முற்றுப்புள்ளி இடுதல் வேண்டும். கேள்வியாக இருந்தால் வினாக்குறி இட வேண்டும். ஆச்சரியத்தைக் குறிக்கும் இடங்களிலும், விளியிலும் வியப்புக்குறி இடவேண்டும்.

இப் பாடத்திலிருந்து இம்மூவகைக் குறிகளுக்கும் உதாரணம் கூறுக.

## 3. காவிரியாறு

[ வித்துவான் சி. சின்னத்தம்பி ]

'மக்களின் பண்பாடு ஆற்றங் கரையிலிருந்தே தொடங்கி இருக்க வேண்டும்' என்று அறிஞர்கள் ஆராய்ந்து முடிவு கட்டி இருக்கின்றார்கள். மக்களின் பண்பாட்டிற்குத் தண்ணீர் அடிப்படையாக அமைந்துள்ளதை நாம் நடைமுறையால் அறிகிறோம். "ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்" என்ற ஔவையார் பொன்மொழி இதற்குப் போதிய சான்றாகும். இம் முறையில், வட நாட்டிற்குக் கங்கையும், தென்னாட்டிற்குக் காவிரியும் அழகு செய்கின்றன என்று கூறலாம். இவ் விரு நதிகளாலேயே, இந்திய நாடு இணையற்ற நாடாக விளங்கி வருகின்றது.

இந்திய நாட்டில் எத்தனையோ நதிகள் இருக்கின்றன. என்றாலும், அவற்றுள் கங்கை, யமுனை, துங்கபத்திரை, கிருஷ்ணை, கோதாவரி, பெண்ணையாறுகள், பாலாறு, காவிரி, வைகை, பொருநை என்பனவே குறிக்கத் தகுந்தன. பாரதியார், தென்னாட்டிலுள்ள நதிகளைத் தனியே எடுத்து,

**" காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்**
**கண்டதோர் வையை பொருநை நதி "**

என்று வரிசைப்படுத்திக் காட்டுகிறார். தென்னாட்டு நதிகளில் காவிரியை முதலில் வைத்துப் பேசுவது, அதன் சிறப்புப்பற்றியேயாகும். ஔவையார், "**தண்ணீருங் காவிரியே**" என்று பாராட்டியுள்ளார். "**தெய்வக் காவிரி**" என்றார் இளங்கோவடிகள். "**கங்கையிற் புனிதமாய காவிரி**" என்று புகழ்ந்தார் கல்வியிற் பெரிய கம்பர்.

இக் காவிரியாறு, மேற்குத் தொடர்ச்சி மலையைச் சார்ந்த குடகு நாட்டில் **மெர்க்காரா** என்ற இடத்தில் பிறந்து, மைசூர் இராஜ்யத்தைக் கடந்து, சேலம், கோயம்புத்தூர் ஜில்லாக்கள் வழி நடந்து, திருச்சிராப்பள்ளி, தஞ்சை ஜில்லாக்களில் தங்கிக் கீழ்க்கடலில் கலக்கிறது. இந் நதி சுமார் 500 மைல் நீளமுடையது.

இந் நதிக்கு முதன் முதலில் கரை கட்டியவன், கரிகாற் சோழன் என்பவன். அவன் காவிரிக்குக் கரை கட்டுவதற்காக, சிங்கள நாட்டிலிருந்து ஆயிரக் கணக்கான தொழிலாளர்களை வரவழைத்திருந்தான் என்று வரலாறு கூறுகின்றது. அடுத்தபடியாக, நீர்ப்பாசன வசதிக்கு ஏற்றவாறு அணை கட்டிப் புகழ் பெற்றவன் இராஜ ராஜ சோழன்.

காவிரியாற்றில் 1902-ம் ஆண்டு புதியதோர் அணைக்கட்டு ஏற்பட்டது. இந் நதியின் நீரை நல்ல முறையில் பயன் படுத்தி நாட்டில் வளத்தைப் பெருக்க வேண்டுமென்று எண்ணிய மைசூர் அரசாங்கத்தார், கண்ணம்பாடி என்னும் இடத்திற்கருகில், காவிரியின் குறுக்கே அணை ஒன்று கட்டினார்கள்.



இவ்வணை 130 அடி உயரமும், 86,000 அடி நீளமும் உள்ளது. இந்த அணையினால் உண்டாக்கப்பட்ட நீர்த் தேக்கம் 50 சதுர மைல் பரப்புடையது. இது மைசூர் மன்னர் பெயரால் 'கிருஷ்ண ராஜ சாகரம்' என்று அழைக்கப்படுகிறது.

மைசூருக்குக் கிழக்கே 35 மைல் தூரத்தில் **சிவ சமுத்திரம்** என்று ஒரு இடம் இருக்கிறது. அங்குக் கண்ணம்பாடியிலிருந்து நீரைக் கொண்டு வந்து ஒரு நீர் வீழ்ச்சியை உண்டுபண்ணி மின்சாரம் எடுக்கிறார்கள். அங்கே தயாரிக்கும் மின்சார சக்தி மைசூருக்கும், பங்களூருக்கும், கோலார் தங்கச் சுரங்கங்களுக்கும் அனுப்பப்படுகிறது. அச் சக்தி, பல தொழிற் சாலைகளுக்கும் உதவியாக இருக்கின்றது.

காவிரி நதி சேலம் ஜில்லாவில் செல்லும் போது, சென்னை அரசாங்கத்தார் **மேட்டூர்** என்னும் இடத்தில் ஒரு அணைகட்டி இருக்கிறார்கள். அந்த அணை ஒரு மைல் இருபது அடி நீளமுடையது. அணையை அடுத்து 60 சதுர மைல் பரப்புள்ள ஏரி ஒன்றை அமைத்து, அதில் அவர்கள் நீரைத் தேக்கி வைத்திருக்கிறார்கள். அவ்வணையைக் கட்டுவதற்கு ஆறு வருடங்கள் சென்றன; ஆறு கோடியே எண்பது லட்சம் ரூபாய் செலவாயிற்று இந்த அணையில் தேக்கப்படும் நீர், தஞ்சாவூர் ஜில்லாவில் புதிய விளை நிலங்களுக்குப் பெரிதும் பயன் படுகிறது.

காவிரி நதி கோயம்புத்தூர் ஜில்லா வழியாகச் செல்லும்போது, இடை வழியில் **பவானி**, **அமராவதி**, முதலிய உபநதிகள் அதில் வந்து சேருகின்றன. ஆதலின், அந் நதி ஒரு மைல் அகலம் பெற்று, திருச்சிக்கு அருகில் செல்கிறது. திருச்சிக்கு மேற்கே பத்தாவது மைல் தூரத்தில் அந் நதி இரண்டாகப் பிரிகிறது. வட பகுதிக்குக் கொள்ளிடம் என்று பெயர் வழங்குகிறது. தென் பகுதி அகண்ட காவிரி என்று அழைக்கப்படுகிறது.

அகண்ட காவிரி, கொள்ளிடம் என்னும் இரண்டு ஆறுகளுக்கும் இடையில்தான், திருவரங்க நகர் இருக்கிறது. திருவரங்கத்தையும் அதிலுள்ள

திருவரங்க நாதரையும் கண்டு வணங்க எண்ணிறந்த மக்கள், ஆண்டு தோறும் திரண்டு வருகின்றனர். அது வைணவர்களுக்குப் பெரிய கோயிலாக விளங்குகிறது. அகண்ட காவிரியும், கொள்ளிடமும் 20 மைலுக்கு அப்பால் மிக நெருங்கி ஓடுகின்றன. அவ்விடத்தில் காவிரியில் ஒரு அணைகட்டியிருக்கிறார் கள். அது கல்லணை என்று வழங்கிவருகிறது. இவ்வணையின் வடிகால் கொள்ளிடத்தில் விழு கின்றது. இங்கு அந் நதி காவிரி, பெண்ணாறு, கல் லணைக் கால்வாய் என்னும் மூன்று பிரிவுகளாகச் செல்கிறது. இம் மூன்று நதிகளுமே, தஞ்சாவூர் ஜில்லாவைத் தமிழகத்தின் நெற் களஞ்சியமாக விளங்கச் செய்கின்றன.

காவிரியாற்றில் இன்னும் பல சிறிய அணைகளைக் கட்டியும், கால்வாய்களை வெட்டியும் நல்ல முறையில் நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுத்து வதால், இந் நதி கடலில் கலக்கும் போது சிற்றா றாகவே காணப்படுகிறது. இப்படி இந்த நதியானது எக்காலத்திலும் வற்றாது வளஞ் சுரத்தலால், இந் நதியை, '**வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரி**' என்று கவிஞர்கள் பாராட்டி யுள்ளார்கள்.

**அரும்பொருள்:**—புனிதம் - சுத்தம். பாழ் - வெறுமை. இணையற்ற - ஒப்பில்லாத. சாகரம் - கடல்.

### வினாக்கள்

1. ஆறுகளின் சிறப்பை விளக்குக.

2. இந்தியாவிலுள்ள முக்கிய நதிகள் பத்தின் பெயர் கூறுக.

3. காவிரியாற்றைக் கவிஞர்கள் எவ்வாறு புகழ்ந் துள்ளனர்?

4. காவிரியாறு எங்கே உற்பத்தியாகிறது? அதன் நீளம் என்ன?

5. முதலில் காவிரிக்குக் கரை கட்டியவன் யாவன்?

6. கிருஷ்ண ராஜ சாகரத்தைப் பற்றித் தெரிந்ததை எழுதுக.

7. சிவசமுத்திர நீர் வீழ்ச்சி எவ்வாறு பயன் படுகிறது?

8. மேட்டூர் அணையைப்பற்றிச் சில குறிப்புகள் எழுதுக.

## பயிற்சி

உன் ஊரிலுள்ள ஒரு நதியைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

எழுத்துக்கள் தனித்தாவது, சேர்ந்தாவது வந்து ஒரு பொருளைத் தெரிவித்தால், சொல் எனப்படும். அது பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என நான்கு வகைப்படும்.

1. ஒன்றன் பெயரைத் தெரிவிப்பது பெயர்ச் சொல். உ-ம். மனிதன், கை, அழகு, ஊர்.

2. ஒரு பொருளின் தொழிலைக் காட்டுவது வினைச் சொல்லாம். உ-ம். வந்தான், விளையாடினன், பாடினன்.

3. மற்று, ஆ, ஏ, ஓ, உம் முதலியவைகள் இடைச் சொற்கள் ஆகும். அவை பெயர்ச் சொற்களோடும், வினைச் சொற்களோடும் கலந்து வரும். உ-ம். நீயோ, வந்தாயா.

4. குணம் குறித்து வரும் சொற்கள் உரிச் சொற்களாம். உ-ம். சாலச் சிறந்தது. மிக நல்லது.

# 4. பருத்தி

[சு. பண்டார நம்பியார்.]

உலக வாழ்க்கையில் உணவுக்கு அடுத்தபடியாக, இடம் பெற்றுள்ளது உடை. "ஆடையுடையான் அவைக்கஞ்சான்." "ஆடையில்லாதவன் அரை மனிதன்" என்பன உடையின் உயர்வை விளக்க எழுந்த பழமொழிகள். உடைக்கு முக்கியமானது பருத்தியாகும். பட்டினலும், உரோமத்தினலும் உடை நெய்வதுமுண்டு. என்ருலும், அறுபது சதவிகிதம் பருத்தியிலிருந்தே தயாரிக்கப்படுகிறது. இன்று 'ரேயான்' என்ற செயற்கை இழைகள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. ஆனல், அவை பருத்தியுடன் போட்டியிட்டு வெற்றி பெறவில்லை. ஆதலின், இன்றுள்ள நிலையில் உலகம் ஆடைக்குப் பருத்தியையே எதிர்பார்த்து நிற்கின்றது.

பருத்தி, உலகில் பலவேறு பகுதிகளிலுமுள்ள அறுபத்தொரு நாடுகளில் விளைகின்றது. அவற்றுள், அமெரிக்க ஐக்கிய நாடுகள், இந்தியா, சோவியத் ருஷியா, சீன, பிரேசில், எகிப்து என்ற ஆறு நாடுகளும் முதன்மை பெற்று விளங்குவன. இவ் வாறு நாடுகளிலும், உலக உற்பத்தியில் 90 சதவீதம் பருத்தி விளைவிக்கப்படுகிறது.

உலகில் பருத்தி விளைவிக்கும் நாடுகளில், இந்தியா இரண்டாவது இடம் பெற்றிருக்கிறது. என்ருலும், பருத்தியின் தாயகம் இந்தியா என்று கூறினல், அது தவருகாது. நமது முன்னேர்கள் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே மெல்லிய ஆடைகள் நெய்தனர் என்பதையும், அவற்றைப் பிறநாடுகளுக்கு அனுப்பிவந்தனர் என்பதையும் நமது பழந்தமிழ் நூல்களால் நன்கு அறியலாம். சிந்து நதிக்

கரையில் மொஹஞ்சோதாரோ என்ற இடத்தில் நடத்திய ஆராய்ச்சியும் அதற்கு ஆதரவு தருகின்றது. அங்குப் பூமிக்கடியில் தோண்டி எடுக்கப்பட்ட மண் தாழிகளில் பருத்தியினால் நெய்த ஆடைகள் கண்டெடுக்கப்பட்டன. அவை எத்தனையோ ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே புதைபட்டிருக்க வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றார்கள். ஆகவே, அத்துணைப் பழங்காலத்திலேயே ஆடை நெய்தல் நமது நாட்டில் நடைபெற்றது என்று அறிகிறோம். மக்கள் பருத்தியின் பயனைக்கண்ட பிறகுதான் நெய்தல் தொழில் தொடங்கி இருக்க வேண்டும். ஆதலால், அதற்கும் எத்தனையோ ஆண்டுகளின் முன்னரே இந்தியாவில் பருத்தி பயிராகி இருக்கவேண்டும் என்பது உறுதி.

நம் நாட்டில் பஞ்சாப், பம்பாய், மத்திய மாகாணங்கள், நிஜாம், சென்னை, ஐக்கிய மாகாணங்கள் ஆகிய இடங்களில் பருத்தி பயிர் செய்யப்படுகிறது. சென்னை மாகாணத்தில், பல்லாரி, கர்நூல், அனந்தபூர், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, குண்டூர், கடப்பை ஆகிய ஜில்லாக்கள் பருத்தி விளையும் இடங்கள்.

பருத்தி நமது நாட்டில் நீர்வளமற்ற வெப்பமான இடங்களிலும், கரிசல் மண்ணிலும் மிகுதியாகப் பயிராகின்றது. செந்நிலத்திலும் செழித்து வளரும். இதற்கு மிகுந்த மழை வேண்டியதில்லை. நெற்பயிரைப்போல் நீர்கட்டி நிற்கவேண்டாம். மிகக் குறைந்த செலவில் இதைப் பயிர் செய்யலாம். 180 நாட்களில் பலன் எடுக்கலாம். ரஷியர்கள் பருத்தி விளைவு நாட்களை 120-ஆகக் குறைத்திருக்கிறார்கள்; அவர்கள் இன்னும் குறைக்க முயன்று வருகிறார்கள். பருத்திச் செடி நன்றாகக் காய்த்து, காய்கள் முற்றி வெடிக்கும்

காலங்களில் பெண்மக்கள் பஞ்சை எடுத்து ஒன்ருகச் சேர்த்துவிடுகிருர்கள். பறிக்கும் காலத்தில் நன்ருகச் சூரிய ஒளி வேண்டும். அப்பொழுதுதான் அது நன்ருக விரியும்.

பொதுவாகப் பருத்தியைத் தாவர அமைப்பை ஒட்டி, மேல்நிலத்து அமெரிக்கப்பருத்தி, தென் அமெரிக்கப்பருத்தி, சிறிய ஆசியாப் பருத்தி, இந்தியப்




பருத்தி என்று பிரிவு செய்திருக்கிருர்கள். இவற்றுள் மேல் நிலத்து அமெரிக்கப்பருத்தியே உலகில் அதிகமாகப் பயிராகிறது. இது அமெரிக்கா, ரஷியா, இந்தியா, சீனு, ஆப்பிரிக்கா ஆகிய இடங்களில் பயிராகிறது; அதிக உபயோகத்திலும் இருக்கிறது.

தென் அமெரிக்கப் பருத்தி எகிப்திலும், ரஷியாவில் சில இடங்களிலும் பயிராகிறது.

சிறிய ஆசியாப் பருத்தி முதலில் ஆப்பிரிக்காவில் பயிராகியது. தற்பொழுது பெர்ஸியா, துருக்கி, பம்பாய், குஜராத், தென் மகாராஷ்டிரம், பல்லாரி, அனந்தபூர், திருநெல்வேலி ஆகிய இடங்களில் பயிர் செய்யப்படுகிறது. இதைத் தமிழ் நாட்டில் உப்பன், உக்கன் என்று வழங்குகிறார்கள்.

உலகில் எகிப்து தான் பருத்தி உற்பத்தியில் முதலிடம் பெற்றுள்ளது. ஒரு ஏக்கர் நிலத்தில் 550 பவுண்டு பருத்தி விளைகிறது. சென்னை மாகாணத்தில் கோயம்புத்தூர், வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய இடங்களில் அமெரிக்க வகைப் பருத்தி ஒரு ஏக்கரில் 250 பவுண்டு விளைகிறது என்று கணக்கிடப்படுகிறது. மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய இடங்களில் திருநெல்வேலிப் பருத்தி, கருங்கண்ணிப்பருத்தி என்னும் இரண்டு வகைப் பருத்தி பயிராகின்றன. ஒரு ஏக்கரில் 100 பவுண்டுதான் விளைகிறது.

நமது தென்னாட்டுப் பருத்தியிலும் கும்ப்டாஸ், தார் ஸார், அமெரிக்கப் பருத்தி, மேற்குப் பருத்தி, வடக்குப் பருத்தி, திருநெல்வேலிப் பருத்தி, கருங்கண்ணிப் பருத்தி, சேலம் பருத்தி, காக்கிநாடாப் பருத்தி, கம்போடியப் பருத்தி, என்று பல வேறு வகைகள் உண்டென்று கூறுகிறார்கள்.

நம் நாட்டில் பருத்தி உற்பத்தியைப் பெருக்க வேண்டும். இயந்திரங்களின் உதவியால் ஆடை உற்பத்தியை அதிகப்படுத்தினால்தான் துணிப் பஞ்சம் நம்மைவிட்டு நீங்கும். மிகுந்த துணியைப் பிற நாட்டுக்கு ஏற்றுமதி செய்வதன் மூலம் நாம் செல்வத்திலும் சிறந்து வாழலாம்.

**அரும் பொருள் :—** அவை - சபை. இழை - நூல். தாயகம் - பிறப்பிடம்.

## வினாக்கள்

1. ஆடையின் சிறப்பை விளக்கும் பழமொழிகள் யாவை?

2. உலகில் பருத்தி உற்பத்தி செய்யும் முக்கிய நாடுகள் எவை?

3. இந்தியாவில் பருத்தி பயிராகும் முக்கிய இடங்களைக் கூறுக.

4. பருத்தி பயிர் செய்வதற்கு ஏற்ற இடம் எது?

5. உலகில் பருத்தி உற்பத்தியில் முதல் இடம் பெற்றுள்ள நாடு எது?

6. தென்னாட்டுப் பருத்தியின் வகைகள் யாவை?

## பயிற்சி

கோடிட்ட இடத்தில் தக்க சொற்களை அமைத்து எழுதுக.

1. இவ் ——— நாடுகளிலும் ——— உற்பத்தியில் ——— சதவீதம் ——— விளைவிக்கப்படுகிறது.

2. எத்தனையோ ——— முன்னரே ——— பருத்தி ——— இருக்கவேண்டும் ——— உறுதி.

## இலக்கணம்

பின்வரும் வாக்கியங்களில் ஒருமையைப் பன்மையாகவும், பன்மையை ஒருமையாகவும் மாற்றி எழுதுக:

1. அவர்கள் வந்தார்கள்.
2. நான் கற்றுக்கொண்டேன்.

பின்வரும் வாக்கியத்தில் உள்ள நால்வகைச் சொற்களையும் எடுத்து எழுதுக:

அவருக்கும் அந்தக் கொள்கை மிகவும் இருந்தது.

## படப் பயிற்சி

# பையனும், ஆபத்து நீக்குதலும்



படத்தைப் பார். பின்வரும் குறிப்புகளை வைத்துக் கொண்டு நான்கு பாராக்களில் கதையை எழுது.

1. நடுக் காட்டில் ஒரு பையன் ——. புகைவண்டிப் பாதை சிதைவுற்றதைக் ——

2. புகைவண்டி தூரத்தில் வருகிறது. அதிலுள்ள மக்களுக்கு —— நேரிடும் என்று ——

3. தன்னுடைய சிவப்பு —— கம்பில் கட்டினான். அதனைத் தூக்கிக் ——.

4. டிரைவர் அதைக் —— வண்டியை நிறுத்தினான். —— கண்டான். பையன் —— உதவிக்காக மகிழ்வுற்றான்.

## 5. சாரணர் இயக்கம்

மக்கள் சேர்ந்து வாழும் இயல்பினர். அவ்வாறு கூடி வாழும்போது, ஒருவர்க்கொருவர் உதவிபுரிந்து வாழவேண்டிய நிலை ஏற்படுகின்றது. ஆதலின், ஒவ்வொருவரிடமும் அன்பு, அருள், ஒப்புரவு, தியாகம் முதலிய பண்புகள் படிந்திருத்தல் அவசியமாகும். இளைஞர் உள்ளங்களில் இவ் வருங்குணங்கள் அமைந்துவிட்டால், உலக வாழ்க்கையே உயர்வு பெற்று விளங்கும் என்பது உறுதி.

இவ்வுண்மையை, **சர் ராபர்ட் பேடன் பவல்** (Sir Robert Baden Powel) என்னும் ஆங்கிலப் படைத்தலைவர் ஒருவர் கண்டறிந்தார். அவர் தென்னாப்பிரிக்காவில் 'மேவ்கிங்' என்னும் இடத்தில் நடந்த ஒரு போரில் ஈடுபட்டிருந்தார். அவர் படை தோல்வியுறும் நிலையை அடைந்தது. அப்போது அவர் சில சிறுவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு நாட்டுப்பற்று, தியாகம், ஊக்கம், உறுதி முதலியவற்றை ஊட்டி வீர உணர்ச்சியை உண்டு பண்ணினர்; அச் சிறுவர்களின் ஒத்துழைப்பால் அப்போரில் வெற்றி பெற்றார். 'மேவ்கிங்' என்னும் இடத்தைக் காத்தமையால, அவர் புகழ் எங்கும் பரந்தது. அப்பொழுது பேடன் பவல், இளைஞர்களின் பெருமை மகத்தானது என்றும், அவர்களை நல்ல முறையில் பழக்கினல், நாட்டிற்கு நன்மை ஏற்படும் என்றும் உறுதியாக நம்பினர்.

அந் நம்பிக்கையோடு இங்கிலாந்து வந்துசேர்ந்த பேடன் பவல், இளைஞர்களுக்கு நல்ல பயிற்சி அளித்தால் சமாதான காலத்தில் பெரு நன்மை விளையும் என்று எண்ணியவராய், 1908-ஆம் ஆண்டில், **சாரணர் இயக்கத்தை** ஏற்படுத்தினர்.

"சாரணர்கள் நாட்டுப்பற்று, தன்னடக்கம், தியாகம், ஒற்றுமை உணர்ச்சி, உடல் வலிமை, சமத்துவம், அன்பு முதலிய அரிய தன்மைகளைக் கைக்கொண்டு பெருந்தன்மை (Honesty) உடையவர்களாக விளங்க வேண்டும்" என்பதே அவரது நோக்கம். சாரணர் இயக்கத்திற்கு இங்கிலாந்தில் நல்ல மதிப்பிருந்தது. பல நாடுகளிலும் இவ்வியக்கம் பரவிற்று. உலகெங்கும், இதனை ஏற்படுத்திய பேடன் பவலின் புகழ் ஒளி வீசிற்று. அரசாங்கம் அவருக்கு 'லார்டு' பட்டம் கொடுத்துக் கௌரவித்தது.

சாரணர் இயக்கத்தில் எல்லா மாணவ மாணவிகளும் சேர்ந்துகொள்ளலாம். வயதுக்கேற்றபடி சாரணர்களை மூவகையாகப் பிரித்துள்ளனர். 7 வயது முதல் 12 வயதுவரையுள்ள இளைஞர்கள் சேரும் ஒரு பகுதி இதில் இருக்கிறது. அப்பகுதியினர், 'கப்ஸ்' அல்லது இளஞ்சாரணர் என்று அழைக்கப்படுவர். அவர்களைக் **குருளையர்** என்றும் கூறுவதுண்டு. 12 வயது முதல் 18 வயதுவரை யுள்ளவர்கள் 'பாய்ஸ் ஸ்கௌட்' அல்லது **சாரணச் சிறுவர்** என்று அழைக்கப்படுவர். 18 வயதுக்கு மேற்பட்டவர்கள் 'ரோவர்' அல்லது **திரிசாரணர்** என்று சொல்லப்படுவர். இவ் வியக்கத்தில் மாணவிகளும் சேரலாம் என்று கூறினோம் அல்லவா? அவ்வாறு சேர்ந்த மாணவிகளுக்கு, 'கேர்ல்கைட்ஸ்' அல்லது **சாரணச் சிறுமிகள்** என்று பெயர்.

சாரணரின் மூல மந்திரம், 'ஆயத்தமாயிரு' என்பதாகும். அதாவது 'தங்கள் நாட்டிற்கும், பிற நாட்டிற்கும் தம்மாலியன்ற உதவியைச் செய்ய எப்பொழுதும் தயாராய் இருக்கவேண்டும்' என்பதே அதன் கருத்தாகும். சாரணர்கள் மூன்று வாக்குறுதிகளைச் செய்யவேண்டும் அவை :—

1. கடவுளுக்கும், நாட்டுக்கும், அரசனுக்கும் என்னால் இயன்ற அளவு எனது கடமையைச் செய்வேன்.

2. எப்பொழுதும் பிறருக்கு உதவிபுரிவேன்.

3. சாரணச் சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பேன் என்பனவாம்.




'இந்த மூன்று வாக்குறுதிகளையும் நான் கடைப்பிடித்து ஒழுகுகின்றேன்' என்பதைக் காட்டுவதற்கு அறிகுறியாகவே, சாரணன் மூன்று விரல்களால் பிறரை வணங்குகின்றான்.

சாரணர்கள் பழகிவரப் பத்து விதிகள் ஏற் படுத்தி இருக்கின்றனர். அவை:—

1. சாரணன் எப்பொழுதும் வாய்மை பேசி, தீய செயல்களைச் செய்யாது, தனது வாக்குறுதி களில் தவறாது, எல்லோருடைய நம்பிக்கையையும் பெற்று, தன் கௌரவத்தைக் காத்து வருதல் வேண்டும்.

2. சாரணன் நாட்டின் மீதும், பெற்றோர், தேசத்தலைவர் முதலிய பெரியோர்களிடத்தும் பக்தியுடையவனாய் இருத்தல் வேண்டும்.

3. சாரணனுடைய கடமை, எப்போதும் பிறர்க்கு உதவி செய்து பயனுள்ளவனாய் இருப்பது.

4. சாரணன் எவ்வித வேற்றுமையும் பாராட்டாமல் எல்லோருக்கும் நண்பனாய் நடக்க வேண்டும்; எல்லாச் சாரணருக்கும் சகோதரனாய் ஒழுக வேண்டும்.

5. எல்லோரிடமும் சாரணன் மரியாதையாக நடந்து கொள்ள வேண்டும்.

6. சாரணன் தன்னுயிர் போல மன்னுயிரையும் மதிக்கும் மனப் பண்புடையவனாய் இருத்தல் வேண்டும்.

7. சாரணன் தன்னுடைய பெற்றோர், ஆசிரியர், சாரணத் தலைவர், பெரியோர், தெய்வம் ஆகிய எல்லோருடைய கட்டளையையும் மறுக்காமல் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்.

8. எவ்வித இடுக்கண் வந்துற்றாலும், மகிழ்ச்சியுடையவனாய் இருத்தல் வேண்டும்.

9. செட்டாகச் செலவு செய்தல் வேண்டும்.

10. திரிகரணங்களாலும் தூய்மை உடையவனாய் இருத்தல் வேண்டும் என்பனவாம்.

சுருங்கக் கூறினால், சாரணர்கள் மனித சமூக ஊழியர்களாக விளங்குகின்றார்கள் என்னலாம். வழியில் கண்ணாடித் துண்டு, முள் முதலியன கிடப்பதைக் கண்டால் சாரணர்கள் உடனே அவற்றை

அகற்றி விடுவார்கள்; காயமடைந்தவர்களையும் நோயுற்றவர்களையும் கண்டால், அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்வார்கள்; தண்ணீரிலோ, தீயிலோ அகப்பட்டவர்களை அந்த ஆபத்திலிருந்து காப்பாற்றி முதற் சிகிச்சைகளைச் செய்வார்கள். இன்னும், ஆபத்துக் காலங்களில் அவர்கள் செய்யும் உதவி பாராட்டத்தக்கதாக இருக்கும். "பிறர்க்கு உதவி செய்வதற்கு ஏற்றமுறையில், அவர்களுக்கு நல்ல விளையாட்டுக்களும், உடல் நலத்திற்கு ஏற்ற பயிற்சிகளும் அளித்து, உடல்வலி யுள்ளவர்களாகச் செய்து, தமக்கும் பிறர்க்கும் பயன் படும் தகுதியுள்ளவர்களாக்க வேண்டும்" என்பதே சாரணர் இயக்கத்தின் தலையாய நோக்கமாகும்.

இத்தகைய உயர்ந்த நோக்கம் கொண்டுள்ள இவ் வியக்கத்தைப் பல நாடுகளிலு முள்ள கல்வி நிலையங்கள் ஆதரித்து, மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்க முன் வந்தன. நமது இந்திய நாட்டிலும் பல்லாயிரக் கணக்கான மாணவர்கள் இவ் வியக்கத்தில் சேர்ந்து பயிற்சி பெற்றுப் பணிபுரிந்து வருகின்றனர். நம் நாட்டில் இவ் வியக்கம் சில திருத்தங்களோடு **ஹிந்துஸ்தான் சாரண ரியக்கம்** என்ற பெயருடன் நடந்து வருகிறது. மாணவ மாணவிகள் இவ்வியக்கத்தில் சேர்ந்து பணிபுரிந்து பயனடைதல் வேண்டும்.

## வினாக்கள்

1. பேடன்பவல் இளைஞர்களின் பெருமையை எப்பொழுது உணர்ந்தார்?

2. சாரணர் இயக்கம் எப்பொழுது, எதற்காகத் தோற்றுவிக்கப் பட்டது?

3. சாரணர்களின் பிரிவுகள் யாவை?

4. சாரணர்கள் மூன்று விரல்களால் பிறரை வணங்குவது ஏன்?

5. சாரணரின் பத்து விதிகள் யாவை?

6. சாரணர்கள் மனித சமூகத்திற்கு எவ்வாறு தொண்டு செய்கிறார்கள்?

## பயிற்சி

கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்து எழுதுக:

1. பேடன் பவலின் ——— வீசிற்று. அரசாங்கம் ——— லார்டு பட்டம் ——— கௌரவித்தது.

2. சாரணன் ——— விரல்களால் ——— வணங்குகின்றான்.

## இலக்கணம்

பெயர்ச் சொல் :—பொருட்பெயர், இடப்பெயர், காலப் பெயர், சினைப் பெயர், குணப் பெயர், தொழிற் பெயர் என ஆறு வகைப்படும்.

பொருட் பெயர் - மனிதன், மரம், கல், மண், குதிரை.

இடப் பெயர் - உலகம், ஊர், கடல்.

காலப் பெயர் - நாள், நாழிகை, ஆண்டு.

சினைப் பெயர் - கை, வால், பூ, வேர்.

குணப் பெயர் - நன்மை, தீமை, அன்பு, அழகு.

தொழிற் பெயர் - நடத்தல், வருகை, ஆட்டம்.

ஆறுவகைப் பெயர்கட்கும் இப் பாடத்திலிருந்து ஒவ்வோர் உதாரணம் தருக.

---

## 6. குதிரை பிடிக்கத் தூண்டில் போட்டது

[வீரமா முனிவர்]

குருவும் சீடரும் வெயிலுக்குப் பயந்து கோழி கூவினவுடனே எழுந்து, வழிநடைக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொண்டு புறப்பட்டார்கள். தளர்ந்த நடையாய் நடந்து போகிறதினாலே காதவழி கூட இன்னங் கடக்காததற்குள்ளே, வெயிலேறினதைக் கண்டு ஒரு குளிர்ச்சியான சோலையிற் றங்கினார்கள். அங்கே இளைப்பாறிக் கொண்டிருக்கையில், மிலேச்சன் என்பவன் அருகிலிருந்த ஏரியில் கால் கழுவப்போனான்.

கரையின் மேல் ஐயனார் கோயிலிருந்தது. அதிலே யாரோ ஐயனாரப்பனைக் குறித்து நேர்ந்து கொண்டு, மண்ணினாற் புதிதாய்ப் பண்ணிச் சுட்டு வர்ணந்தீர்ந்த ஒரு பெரிய குதிரையைக் கொண்டு வந்து செலுத்தி இருந்தார். அந்த மண் குதிரையின் நிழல், ஏரி நிறையத் தெளிந்திருந்த தண்ணீரிற் காணப்பட்டது. அதை ஏரியிற் காலலம்பப் போன மிலேச்சன் கண்டு, தண்ணீர்க்குள்ளே குதிரை நிற்கிறதென்று நினைத்து வியப்புக்கொண்டு, பின்பு கரையிலே நிற்கும் மண் குதிரைக்குச் சரியொத்த நிறமும் உயரமும், பருமனும், சாயலுமாயிருக்கக் கண்டதனால், தண்ணீரிலே தோன்றினது அதன் நிழலாயிருக்க வேண்டுமென்று சமுசயப்பட்டான்.

ஐயப்பட்டாலும் அப்போது அடித்த காற்றினால் தண்ணீ ரசைய, அதிலே காணப்பட்ட குதிரை நிழலும் அசையத் தலைப்பட்டது. அதைப் பார்த்துக் கரைமேலிருக்குங் குதிரையைப் பார்க்கும்பொழுது அஃது அசைவொன்றுமில்லா திருந்ததினால், நீருக்

குள் நிற்கும் குதிரை வேறென்றும், உயிருள்ள தென்றும் அவன் நிச்சயம் பண்ணினான்; பின்னும் அதை ஓட்டுகிறதற்கு முயன்று, வாயினால் கூச்சல் போட்டுக் கல்லைக்கொண் டெறிந்தான். எறிந்த மாத்திரத்தில் தண்ணீர் அதிகமாயாடி அலைந்தெழும்பக் குதிரையும் தலையெடுத்துக் காலுதறி உடல் துடித்துத் துள்ளினதாக அவன் கண்ணுக்குத் தோன்றினதனால் நடுங்கி, காலும் அலம்பாமல் மற்றவர்களிடத்தில் ஓடிவந்து, தான் கண்டதை யெல்லாஞ் சொன்னான்.

அந்தப் புதுமையைக் கேட்டு எல்லோரும் திடீரென்றெழுந்து, ஓடிப்போய் ஏரிக்குள் சுற்றிப் பார்க்குமிடத்தில் மிலேச்சன் சொன்னது மெய்யென்று நம்பிக்கொண்டு, 'தண்ணீரி லிறங்கினால் தவளை கடிக்கும்' என்பவர் போல, அவர்கள் ஏரி நீரிலிறங்க அஞ்சி, இறங்காமல் அதற்குள்ளிருக்கிற குதிரையைப் பிடிக்கும்படிக்கு ஒரு சூழ்ச்சி செய்யத் தொடங்கினார்கள். அவர்களில் ஒருவன், "கொள்ளைக் கண்டால் வாயைத் திறக்கிறது குதிரைக்கு இயற்கையாகையால் கொள்ளை வேவித்து வைத்தால் அந்த வாசனையைக் கண்டு, அதைக் குதிரை தின்னுகிறதற்கு மேலே வரும்; அப்பொழுது அதைப் பிடித்துக் கொள்ளலாம்" என்றான்; மற்றொருவன், "பசுமையாயிருக்கிற ஒரு பிடி அறுகம்புல்லைப் பிடுங்கிக் கொண்டு வந்து தண்ணீருக்கு மேலே காட்டினால் குதிரை அதைத் தின்னத் தாவி எழும்பும்; அந் நேரத்தில் அதைப் பற்றிக் கொள்ளலாம்" என்றான்.

பின்னொருவன், "குதிரை கனைக்கிறது போலக் கரைமேலிருந்தபடி கனைத்தாற் குதிரை இனத்தோடு கூடலாமென்று மேலே கிளம்பும்; அந்தச் சமயத்தில் தப்பாமல் அதைக் கைவசப்படுத்திக் கொள்ளலாம்"

என்றான். இன்னுமொருவன், "எருமை போய் ஏரி யில் விழுந்தால், தவளை தானே குதித்தோடு மென் பதனால், எருமைக் கடாவை ஓட்டிக்கொண்டு போய்த் தண்ணீரில் விட்டால் அது நாலு பக்கமும் ஓடியாடிக் கலக்கும்; அந்தத் தொந்தரவு பொறுக்கமாட்டாமல் குதிரை கரையேறி மேலே வரும்; அவ்வேளையில் வருத்தமில்லாமல் அதைப் பிடித்துக்கொள்ளலாம்" என்றான். இப்படி நாலு பேருஞ் சொன்ன வழிக ளெல்லாந் தனக்குப் பொருந்தாததினால் மிலேச்சன் சீ யென்று அவற்றை மறுத்துவிட்டு, "நானொரு வழி சொல்லுகிறேன், கேளுங்கள்; தூண்டில் போட்டு மீன் பிடிக்கிறது போல இதையும் பிடித்துக் கரை மேலிழுக்க வேண்டும்" என்றான். அதற்கு அவர்க ளெல்லாம் "ஆம், ஆம், இது நல்ல வழிதான்" என்று உடன்பட்டார்கள்.

தங்களுக்குள் ஒருவன் வைத்திருந்த கருக்கரி வாளைத் தூண்டில் முள்ளாகவும், வழியில் உண்ணு கிறதற்குத் தாங்கள் கொண்டுவந்த கட்டுச் சாதத் தைத் தூண்டிலின் இரையாகவும், குருவானவர் கட்டியிருந்த தலைப் பாகையைத் தூண்டிற் கயிறாகவும், அவர் கையிலே பிடிக்கிற காளை உரு வம் செய்து வைத்த, பித்தளைப் பூண் கட்டிய, தடி யைத் தூண்டிற் கோலாகவும் அமைத்துக் கொண்டு எப்படியாவது நினைத்த காரியத்தை முடிக்க வேண்டு மென்று தீர்மானித்து, அப்படியே கட்டுச் சோற்று மூட்டையைக் கருக்கரிவாளின் முனையிலே கோத்து, அடியிலே தலைப் பாகையைக் கட்டி, அதைத் தடி யிலே சுற்றி முடிந்து, தண்ணீர்க்குள் குதிரை காண் கிற இடத்தில் எறிந்தார்கள். அது தொப்பென்று விழுந்து விசை யோடு மிகவுந் தண்ணீர் ததும்பின தால், அங்கே தோன்றவே குதிரையும் துள்ளி யெழுந்து நெளிந்துக் குதித்துக் கிளம்பினது போல் தோன்றவே எல்லோரும் நடுங்கி ஓடினார்கள்.

மூண்டாசியைத் தொடுத்த தடியைப் பிடித் திருந்த ஒருவன் மாத்திரம் அதைக் கைவிட்டோடா மல் நின்றான். ஏரியின் அலை அமர்ந்த பின்பு அதி லுள்ள பெரிய மீன்கள் மெள்ள மெள்ள அணுகிக் கட்டுச்சாத மூட்டையைக் கடித்திழுத்த ஜாடையைக் கண்டு, கைச்சைகை செய்து மற்றவர்களை அழைத்துக் 'குதிரை இப்பொழுதுதான் இரையைக் கடிக்கிறது' என்றான். சற்று நேரம் போனபிறகு தலைப்



பாகையை இழுக்கச் சீலையும் சாதமும் போனதால், பாகையுடனே கட்டின கருக்கரிவாளானது அங்கே மூளைத்திருந்த ஏரிக்கோரையில் மாட்டிக்கொண்டது. அவன் அது குதிரையின் வாயில் மாட்டிக்கொண்ட தாக நினைத்துக் குதிரை வாயில் தூண்டில் மாட்டின போதே குதிரை நம்முடையதாய் விட்டதென்று மகிழ் வுடன் கூப்பிட, அனைவருங் கூடி வந்து தலைப்பாகை

யைப் பிடித்திழுக்க, பாகை பழைய தாகையால் அற்றுப் போயிற்று. எல்லோரும் ஒருமிக்க மல்லாக் காய்க் கீழே விழுந்தார்கள்.

இப்படியவர்கள் விழுந்த தறுவாயில் ஒரு வழிப் போக்கன் வந்து, "இஃதென்னே?" என்று கேட்க, எல்லாவற்றையும் ஒழுங்குபடச் சொன்னார்கள். அது கேட்டு, அவன் அவர்கள் பேதைமையைக் கண்டு, கரைமே விருந்த குதிரையை ஆடையால் மறைக்க, நீருட் குதிரை மறைந்தது. அதை அவன் அவர்களுக்குக் காட்டி அவர்களது மயக்கத்தை நீக்கினன்.

அப்போதவர்கள் தங்கள் குருவுக்குக் குதிரை தேடிப் பட்ட துன்பங்களை எல்லாம் அவனுக்குச் சொன்னார்கள். அவன் அவர்கள் கள்ளம் கபட மறியாத நல்ல மனிதர்களென்று கண்டு, மனதிரங்கி, "என்னிடத்தில் ஒரு நொண்டிக் கிழக் குதிரை உண்டு; அது உங்கள் வழிநடைக்கு உதவும்; நான் இலவசமாகத் தருகிறேன்" என்று அழைத்துக் கொண்டு போனன்.

**அரும்பொருள் :—** காதவழி - நாலுகூப்பீடு கொண்ட தூரம். கொள் - காணம். மல்லாக்காய் - முகம் மேலாய். பேதைமை - அறியாமை. கள்ளம் - வஞ்சனை. முண்டாசி - தலைப்பாகை. இலவசம் - விலையில்லாமை.

**வினுக்கள்**

1. மிலேச்சன் தண்ணீருக்குள் இருக்கும் குதிரை உயிருள்ளதென்று எதனுல் எண்ணினன்?

2. குதிரையைப் பிடிப்பதற்கு நால்வரும் கூறிய வழிகள் யாவை?

3. "ஆம், ஆம், இது நல்ல வழிதான்"—சந்தர்ப்பம் கூறுக.

4. நீருக்குள் குதிரை இருப்பதாகக் கொண்ட மயக்கத்தை வழிப்போக்கன் எவ்வாறு நீக்கினான்?

5. குதிரை பிடிக்கத் தூண்டில் போட்ட மடமையை விளக்குக.

## பயிற்சி

இக்கதையை உன் சொந்த நடையில் சுருக்கி எழுதுக.

## இலக்கணம்

**திணை** என்பது உயர்திணை, அஃறிணை என இருவகைப் படும். மனிதரும் தேவரும் உயர்திணை, மற்ற உயிருள்ள பொருள்களும், உயிரில்லாப் பொருள்களும் அஃறிணை.

அரசன், சூரியன், மகள் — உயர்திணை.

மரம், கல், மாடு — அஃறிணை.

**பால்**—ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என ஐந்து வகைப்படும். இவற்றுள் முதல் மூன்றும் உயர்திணைக் குரிய பால்கள். பின் இரண்டும் அஃறிணைக் குரிய பால்கள்.

**எண்**—ஒருமை, பன்மை என இரண்டு வகைப்படும்.

ஆண்பாலும், பெண்பாலும், ஒன்றன்பாலும் ஒருமை எண்ணிற் குரிய பால்களாம். பலர்பாலும், பலவின்பாலும் பன்மை எண்ணிற் குரிய பால்களாம்.

ஆணைக் குறிப்பது ஆண்பால். பெண்ணைக் குறிப்பது பெண்பால். ஆண்களில் பலரையோ, பெண்களில் பலரையோ, அவ்விருவரையுமோ குறிப்பது பலர்பால். அஃறிணையில் ஒன்றைக் குறிப்பது ஒன்றன்பால். ஒன்றுக்கு மேற்பட்ட பல பொருள்களைக் குறிப்பது பலவின்பால்.

இப் பாடத்திலிருந்து ஐவகைப் பால்களுக்கும் உதாரணங்கள் எடுத்தெழுதுக.

---

## 7. மண்புழு பேசுகிறது

[டி. ஜே. நேல்சன், B. A., L. T.]

மாணவர்களே! எனது பிறப்பு வளர்ப்பை நீங்கள் அறிந்துகொள்ள விரும்புகிறீர்கள் அல்லவா? நானும் எனது வரலாற்றை உங்களுக்குக் கூற ஆசைப்படுகிறேன். ஆனால், சிறிது அச்சமும் அடைகிறேன். ஏனென்றால், என்னைப் பற்றி யானே கூறும்போது, ஒருகால் தற்பெருமை பேசுகிற குற்றம் வந்து சேருமோ என்ற எண்ணம் ஏற்படுகிறது. அதற்காக நான் உண்மையைக் கூறாமல் இருக்க முடியுமா?

நான் ஈரமுள்ள செழிப்பான மண்ணிலும், கற்களின் இடைகளிலும், அழுகிய இலைகளின் அடியிலும் வாழ்ந்து வருகிறேன்; எப்பொழுதும் மண்ணையே தின்றுகொண் டிருப்பேன். ஏனெனில், என் உடலுக்குத் தகுந்த உணவு அம் மண்ணில் அடங்கி இருக்கின்றது. நான் பகல் வேளைகளில் என்னுடைய கூட்டில் இருந்துகொண்டு, இரவு வேளை களில் வெளிவந்து இரை தேடுவேன்; அங்குச் சிதறிக் கிடக்கின்ற உதிர்ந்த இலைகளையும், தழைத் திருக்கின்ற புற்களையும் உண்பேன்.

என்னுடைய சரீரம் நீண்டு ஒடுங்கி, ஈரமாயும் பளபளப்பாயு மிருக்கும்; ஏறக்குறைய ஏழு அங்குலம் வரையிலும் நீளமுடையது. என் உடலின் மேற் புறம், தவிட்டு நிறமுடையதாகவும், மெல்லியதாயு மிருக்கும். அடிப்புறம் மங்கிய நிறமுடையதாய், சுரசுரப்பா யிருக்கும். என் உடலில் 150 வளையங் கள் வரையிலும் இருக்கின்றன. முதல் வளையத்தில் வாயும், கடைசி வளையத்தில் எருவாயிலும் அமைந்துள்ளன. எனது உடலில் 14-வது முதல்

17-வது வளையங்கள் வரையுள்ள பகுதிகள் பருத்து மென்மையானவைகளா யிருக்கும். இப் பகுதி கிளைட்டல்லம் (Clittellum) எனப்படும். எனது உடம்பின் அடிப் பக்கத்தில் முன்னேக்கித் தடவினல் சுரசுரப்பா யிருக்கும். இதற்குக் காரணம் "ஸீடே" என்று சொல்லப்படும் பின்னேக்கி நீண்டு நிற்கிற எண்ணிறந்த மயிரிழை போன்ற உறுப்புக்களே யாகும். இவைகள் நான் ஊர்ந்து செல்வதற்கு



உதவிபுரிகின்றன. எனது உணவுக் குழாய், வாய்முதல் எருவாயில் வரை செல்லுகிறது. அதில் குடல்கள் போன்ற உறுப்புக்கள் உண்டு.

முதுகெலும் பில்லாத பிராணிகளுக்குச் சிவப்பு இரத்தம் கிடையாது. ஆனல், எனக்குச் சிவப்பு இரத்தம் உண்டு என்று பெருமையுடன் கூறுவேன். எனது முதுகுப் புறத்தில் ஒரு பெரிய இரத்தக் குழாயும், அடிப் புறத்தில் இன்னெரு பெரிய

இரத்தக் குழாயும் இருக்கின்றன. இவை பல இரத்தக் குழாய்களால் இணைக்கப்பட்டிருக்கும். அடிக்கடி இவைகள் சுருங்கி விரிவதால், இரத்தம் உடனே எல்லா இடங்களுக்கும் செல்லும். மேலுள்ள இரத்தக் குழாய் வழியாய் இரத்தம் முன்னேக்கியும், கீழுள்ள இரத்தக் குழாய் வழியாய் இரத்தம் பின்னேக்கியும் செல்கிறது.

எனக்குக் கண், காது, மூக்குப் போன்ற உறுப்புக்கள் இல்லை. மூளையும் நரம்புகளும் உண்டு. ஆனல், எனது தோல் உணர்ச்சி யுடையது. உடம்பின் முன் பகுதியில் பல நரம்புக ளிருப்பதால் அப் பகுதிக்கு, பின் பகுதியைவிடக் கூடுதலாக உணரும் ஆற்றல் உண்டு.

எனக்கு உணவுகளைப் பிரித்து அறிந்துகொள்ளும் வலிமையு மிருக்கிறது. உங்களைப்போல எனக்கு மூச்சுவாங்கவும், விடவும் தனிப்பட்ட உறுப்பு கிடையாது. என்றாலும், நான் மூச்சு வாங்கிக்கொண்டுதான் இருக்கிறேன்; எனது ஈரமான தோலின் வழியாய் கரியிருதீயதை வெளி விடுகிறேன்; தோல் ஈரமற்றுப் போனல் மூச்சு விடவும், வாங்கவும் முடியாமல் இறந்து விடுவேன். தோலிலுள்ள சிறு துளைகள் வழியாய் வெளிவரும் ஒரு வகை நீர் எனக்கு ஈரத்தைக் கொடுக்கிறது. வானத்திலுள்ள தீயகம், ஈரமான தோல் வழியாக இரத்தத்தோடு கலக்கும். அப்போது இரத்தம் சுத்தம் அடைகிறது. உடலில் உண்டாகும் கழிவுப் பொருட்களில் ஒன்றாகிய கரியிருதீயதை, தோலின் வழியாக வெளியே போய் விடுகிறது.

நான் வாயின் வழியாக இரையை உட்கொண்டு, தசைகளாலான தொண்டைக் குழி வழியாய் மண்ணை விழுங்குவேன். உணவு இரைப்பைக்குட்

செல்லும். அங்கே உணவு நன்றாய் அரைக்கப் படுகிறது. அங்குள்ள சிறிய கற்கள் இரையை அரைப்பதற்கு உதவி செய்கின்றன. சில வேளை களில் அழுகிய இலைகளை எனது கூட்டிற்கு எடுத்துச் சென்று, வாயிலிருந்து வரும் ஒருவித நீரால் மென்மையாக்கி உண்பேன். இரைப்பையில் அரைக்கப்பட்ட உணவு குடலுக்குச் சென்று, அங்கு, சுரக்கிற ஜீரண நீர்களோடு கலந்து உடலில் கலக்கிறது. மீதியிருக்கும் கழிவுப் பொருட்கள், மண் உருண்டைகளாக வெளியே தள்ளப்படும்.

நான் இடம் விட்டு இடம் செல்வதை நீங்கள் அறிய விரும்புவீர்கள். எனது உடலின் மேற்பக்கத் தில் வட்டத் தசைகளும், கீழ்ப்பக்கத்தில் நீளவாட்டில் செல்லும் தசைகளும் உண்டு. இந்தச் சதைகளை விரித்தும் சுருக்கியும், உடலின் அடிப்பக்கத்தி லுள்ள மயிர்போலிகளை நிலத்தில் ஊன்றி ஊர்ந்து செல் வேன். உடம்பின் பின் பாகத்திலுள்ள மயிர் போலிகளின் உதவியால் உடலை நிலத்தில் அழுத்தி ஊன்றி வட்டத் தசைகளைச்சுருக்குவேன். அப்போது உடம்பின் முன்பகுதி முன்னே தள்ளப்படும். அதன் பின் தேகத்தின் முன் பகுதியை நிலத்தில் ஊன்றி, நீளவாட்டில் செல்லும் தசைகளைச் சுருக்குவேன். அப்போது உடல் சுருங்கும். முன் பகுதி நிலத்தோடு பற்றி யிருப்பதால், பின்பகுதி முன்னே தள்ளப்படும். இவ்விதமாக உடலின் முன்பகுதியை முன் நோக்கித் தள்ளியும், பின் பகுதியை முன் நோக்கி இழுத்தும் நகர்ந்து செல்லுவேன், வழுவழுப்பான இடங்களில் என்னுடைய மயிர்போலிகளால் பிடிக்க முடியாத தால், அங்கே என்னால் ஊர்ந்து செல்லமுடியாது.

நான் அநேக உருண்டை வடிவமுள்ள வெண் மையான முட்டைகளை இடுவேன். முட்டையினுள் கருவும் அதன் வளர்ச்சிக்குள்ள இரையும்

உண்டு. முட்டையிலிருந்து வரும் என் குழந்தை அளவில் சிறியதாக இருந்தாலும், உருவத்தில் என்னைப்போலவே இருக்கும். என்னை நீங்கள் இரண்டு துண்டுகளாக வெட்டினாலும் நான் இறப்ப தில்லை. அது மட்டுமன்று, இரு துண்டுகளிலிருந்தும் இரண்டு புழுக்களாக மாறுவேன். தலையுள்ள துண்டி லிருந்து வாலும், வாலுள்ள துண்டிலிருந்து தலையும் முளைக்கின்றன.

என்னைக் குடியானவனின் தோழன் என்று கூறுவார்கள். ஏனெனில் நிலத்தின் வளத்தைக் கூட்டுவேன்; குடியானவன் நிலத்தை உழுவது போல் மேலுள்ள மண்ணைக் கீழும், கீழுள்ள மண்ணை மேலும் கொண்டு வருவேன்; நிலத்தினுள் காற்று எளிதில் செல்லுவதற்கு ஏற்ற வண்ணம், நிலத்தை மென்மைப்படுத்தி இடைவெளிகளை அதிகப்படுத்து வேன். ஆகையால், நிலத்தினுள் பயிர்களின் வேர் கள் எளிதில் செல்லும். நான் உட்கொள்ளும் மண் ஜீரண உறுப்புக்கள் வழிச் செல்லும்போது, காலகம் அல்லது உப்பு வாயு அடங்கியுள்ள கழிவுப் பொருள் கள் அதனோடு சேர்ந்து, மண் உருண்டைகளாக வெளியே வருகின்றன. மண் உருண்டைகளில் உப்பு வாயு இருப்பதனால், அவைகள் தாவரத்திற்கு நல்ல உரமாகும்.

எனக்கு உலகில் எத்தனையோ நண்பர்கள் இருந்தபோதிலும், பகைவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் நானும் என் சுற்றத் தாரும் எப்பொழுது வெளியே வருவோம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். பறவைகளும் எலிகளுமே எங்கள் பகைவர்களாவர்.

விஞ்ஞானிகள், நானும், என்னைச் சேர்ந்தவர் களும் ஏராளமான மண்ணை நிலத்தின் மேற்பரப்

பிற்குக் கொண்டு வருவதைக் கணக்கெடுத்திருக்கிறார்கள். டார்வின் என்னும் பேரறிஞர் தம் ஆராய்ச்சியில், நாங்கள் ஒரு ஏக்கர் நிலத்தில், சுமார் பத்து டன் மண்ணை மேலே கொண்டு வருவதாகக் கூறுகிறார்.

**அரும் பொருள்:**—ஆற்றல் - வல்லமை. கரிஇருதீயதை - கார்பன் - டை - ஆக்சைடு. சுற்றத்தார் - உறவினர்.

## வினாக்கள்

1. தன்வரலாறு கூறும்போது மண்புழுவிற்கு ஏன அச்சம் ஏற்படுகிறது?
2. மண் புழுவின் உடலமைப்பைப்பற்றிக் கூறுக.
3. மண்புழு இடம்விட்டு இடம்பெயர்வது எங்ஙனம்?
4. அதன் பகைவர் யாவர்? அதன் உணவு யாது?
5. எலும்பில்லாத பிராணிகளிலிருந்து அது எவ்வாறு வேறுபடுகிறது?

## பயிற்சி

மண் புழுவின் வரலாற்றை நீ கூறுகிற மாதிரியில் எழுது.

## இலக்கணம்

இடம் - **தன்மை, முன்னிலை, படர்க்கை** என மூன்று வகைப்படும்.

பேசுபவன் தன்மை. பேசுவதை முன்னே நின்று கேட்பவன் முன்னிலை, பேசப்படுவோன் படர்க்கை.

தன்மை - நான் - நாம் - நாங்கள்.

முன்னிலை, நீ - நீர் - நீங்கள்.

படர்க்கை, அவன் - அவள் - அவர் - அது - அவை.

இப் பாடப் பகுதியிலிருந்து மூவிடங்களுக்கும் உதாரணம் கூறுக.

# 8. மவுன வாசிப்பு I

## இக் கதையை மவுனமாக வாசி

முன்னாளில் நமது தமிழகம், மூன்றாகப் பிரிந்திருந்தது. அவை சேரநாடு, சோழநாடு, பாண்டிய நாடு என்பனவாம். அவற்றுள் சோழ நாட்டின் தலைநகராகக் காவிரிப்பூம் பட்டினம் விளங்கிற்று. அந் நகரத்தில் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கோவலன் என்னும் ஒரு வணிகன் இருந்தான். அவன் கண்ணகி என்னும் ஒரு பெண் மணியை மணந்து இல் வாழ்க்கை நடத்தி வந்தான்.

அப்போது ஒரு நாள், சோழ மன்னன் அரண்மனையில் ஒரு நடனக் கச்சேரி நடந்தது. அரசன் குறித்த சிலருக்கு அழைப்பு அனுப்பி இருந்தான். கோவலனுக்கு அழைப்பு வந்திருந்தமையால், அவனும் அங்குச் சென்றிருந்தான். அங்கு நடன மாடியவள் மாதவி என்னும் இளம் பெண். அவள் நடனத்தை எல்லோரும் மெச்சிப் புகழ்ந்தனர். அரசன் அவளுக்குச் சிறந்த பரிசளித்தான். கோவலன் மாதவியின் அழகில் மயங்கி, அவளை மனைவியாகக் கொண்டு அவளோடு வாழ்ந்து வரலானான்; தன் மனைவி கண்ணகியை அறவே மறந்தான்; மாதவிக்குத் தன் செல்வத்தை எல்லாம் கொடுத்து வறுமை யடைந்தான்.

ஒரு நாள் மாதவி நடந்துகொண்ட முறை, கோவலனுக்கு வெறுப்பை உண்டு பண்ணிற்று; ஆதலின், அவன் மாதவியை வெறுத்து வெளியேறித் தன் இல்லம் சென்று கண்ணகியைக் கண்டான். கணவன் வருகையைக் கண்ட கண்ணகி, மனம் மகிழ்ந்து அன்புடன் வரவேற்று உபசரித்தாள்; கண்ணகியின் அன்புள்ளத்தைக் கண்ட கோவலன்,

அவள் காற் சிலம்பை விற்று, அப்பொருளை மூலதனமாகக் கொண்டு வாணிபம் புரிந்து வாழ எண்ணினன்; அதற்கு மதுரையே ஏற்ற இடம் எனத் துணிந்து, கண்ணகியையும் அழைத்துக் கொண்டு, மறுநாள் காலையில் மதுரை நோக்கி வழி நடந்தான்.

அவர்களுக்குத் துணையாக வழியிடையில், கவுந்தி யடிகள் என்னும் ஒரு பெண் துறவி வந்து சேர்ந்தார். மூவரும் மதுரை நகரைச் சென்றடைந்தனர். கவுந்தியடிகள் கோவலனையும், கண்ணகியையும் மாதரி என்னும் ஆயர்குல முதுமகளிடம் அடைக்கலமாக ஒப்புவித்தார். மாதரி அவர்களைத் தன் மனைக்கு அழைத்துச் சென்று, உணவுக்கு வேண்டிய பொருள்களைக் கொடுத்து உபசரித்தாள்.

பின், கோவலன் சிலம்பை விற்று வரு வதற்காகச் சென்றான்; அவன் வழியில் பொற் கொல்லன் ஒருவனைக்கண்டு அரண்மனைத் தட்டான் என்று உணர்ந்து, சிலம்பை அவனிடம் காட்டினன். அவன் அரண்மனைச் சிலம் பொன்றை முன்னமே திருடி இருந்தானதலின், தன் களவைக் கோவலன் மீது சுமத்தத் திட்டமிட்டான்; கோவலனைத் தன் இல்லத்தில் இருக்கச் செய்து, அரண்மனையில் சிலம்பைக் காட்டி வருவதாகச் சொல்லிச் சென்றான்.

சென்ற பொற்கொல்லன் அரசனைக் கண்டு, "அரசே! அரண்மனைச் சிலம்பைத் திருடிய கள்வன் அகப்பட்டுக் கொண்டான்" என்றான். அரசன் அவன் சொல்லை நம்பி, கள்வனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருமாறு காவலாளர்களுக்குக் கட்டளை பிறப்பித்தான். அவர்கள், அரசன் கட்டளையை நிறைவேற்றினர்கள்.

இச் செய்தி நகரம் எங்கும் பரந்தது ; கண்ணகி யின் காதிற்கும் எட்டியது. அவள் அரசன் முன் சென்று, தன் கணவன் கள்வன் அல்லன் என்றும், அவன் விற்கக் கொண்டு வந்தது தன் சிலம்பே என் றும் வழக்காடினள். கோவலனிடம் இருந்து பெற்ற சிலம்பு உடனே அரண்மனையிலிருந்து எடுத்து வரப் பட்டது. கண்ணகி அச் சிலம்பைக் கையிலெடுத்து ஓங்கி எறிந்தாள். அது உடைந்தது. அதனுள்ளிருந்த



மாணிக்கக் கற்கள் மன்னன் முகத்தில் தெறித்தன. அதைக் கண்ட மன்னன், கோவலன் கள்வன் அல்லன் என்பதை உணர்ந்தான். அரண்மனைச் சிலம்பின் உள்ளிருப்பது முத்து என்பது அவனுக் குத் தெரியும். உடனே அரசன் அரியாசனத்தி லிருந்து அடியற்ற மரம்போல் சாய்ந்து விழுந்து மாண்டான். அரசமா தேவியும் உடன் உயிர் நீத்தாள்.

பின்னர், கண்ணகி, தன் கணவனை இழந்த சோகத்தால் கதிகலங்கி, மதுரையைவிட் டகன்று சேர நாடடைந்து, திருச்செங்குன்று என்னும் மலையில் ஒரு வேங்கைமர நிழலில் சென்று நின்றாள். கோவலன் தேவனாக விமானத்தில் வந்திறங்கி, கண்ணகியையும் வானுலகத்திற்கு அழைத்துச் சென்றான்.

தன் நாடு வந்து புகுந்த கற்புத் தெய்வமான கண்ணகிக்குச் சேரன் செங்குட்டுவன், கோவி லெடுத்து வழிபட்டான். செங்குட்டுவன் தம்பியாகிய இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் என்னும் கலைக் கோவில் செய்து கண்ணகிக்கு வாழ்வளித்தார்.

## வினாக்கள்

1. கோவலன் கைப்பொருளை இழக்கக் காரணம் என்ன?
2. அவன் மதுரை சென்றது ஏன்?
3. கண்ணகி வழக்காடியது எங்ஙனம்?
4. கண்ணகிக்குக் கோயிலெடுத்த அரசன் யார்?
5. கண்ணகி வரலாற்றைக் கூறும் நூல் யாது?

## பயிற்சி

1. இப் பாடத்தை மவுனமாக வாசித்து ஒவ்வொரு பாராவுக்கும் பொருத்தமான தலைப்புக்கொடு.

2. கீழ்வரும் குறிப்புக்களைக் கொண்டு ஒரு கட்டுரை எழுது:

கோவலன் - கண்ணகி-மாதவி - கவுந்தியடிகள் - மதுரையில் மாதரி வீடு - பொற்கொல்லன் வஞ்சம் - வழக்குரைத்தல் - மன்னன் மறைவு - சேரநாடு - முடிவு.

# 9. கொலம்பஸ்

[ வித்துவான் சி. சின்னத்தம்பி ]

குபேர நாட்டின் பெருமைகளைப் புராணங்களில் நாம் படித்திருக்கிறோம் அல்லவா? இந்த இருபதாம் நூற்றாண்டில் குபேர நாடாக விளங்குவது அமெரிக்காவாகும். பொதுவாக அமெரிக்கா என்று கூறினாலும், அந்நாட்டின் ஒரு பகுதியாகிய ஐக்கிய நாட்டிற்கே அப்பெயர் உரியதாகும். ஏனெனில், சுமார் ஒன்றரைக் கோடி சதுரமைல் பரப்பளவுடைய அமெரிக்காக் கண்டத்தில், ஐக்கிய நாட்டைத் தவிர, பிறபகுதிகள் காடுகளும், மலைகளும் நிறைந்து, பனிப் படலங்களால் மூடப்பட்டு, மக்கள் வாழ வசதியற்ற முறையிலேயே காணப்படுகின்றன. இந் நாடு சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்பு, மக்கள் அறிந்து கொள்ள முடியாத ஒரு பெரும் நிலப் பரப்பாக இருந்து வந்தது. அன்று, இந் நாடு ஒரு காலத்தில் குபேர நாடாக விளங்கும் என்று எண்ணக்கூட இயலாத நிலையில் இருந்தது. இவ்வளவு சுருங்கிய கால அளவில் இந் நாடு பிற நாடுகளுக்கு உணவும், உடையும், இயந்திர, மருத்துவப் பொருட்களும் உதவும் உயரிய நிலை பெற்றுக் குபேர நாடாக விளங்குவதற்கு வழி காட்டினார் ஒருவர். அவர்தான் **கொலம்பஸ்**. அவர் இந்நாட்டை முதலில் கண்டறிந்து, மக்களுக்குக் காட்டிக் கொடுத்தார். அறிவு மேம்பட்ட மக்கள் வந்து குடியேறியதாலேயே, இந் நாடு இன்று குபேர நாடாகத் திகழ்கிறது.

ஐரோப்பாக் கண்டத்தில் பழமையும், பெருமையும் வாய்ந்த தேசமாக விளங்கியது **இத்தாலி** தேசம். அத் தேசத்திலுள்ள துறைமுகமான **ஜினோவா** நகரில் ஒரு ஏழைக் குடும்பத்தில் 1435-ம் ஆண்டு தோன்றி

னர் கொலம்பஸ். அவரது தந்தை, ஒரு ஏழைத் தொழிலாளியாக இருந்தபடியால், அவருக்குப் போதிய கல்வி கொடுக்க முடியவில்லை. அவர் இளமையில் ஓரளவு எழுதவும், படிக்கவும் மட்டுமே கற்றுக் கொண்டார்; குடும்பம் இருந்த நிலையில் இளமையிலேயே, ஒரு தொழிலில் புகுந்து பொருள் ஈட்டி வாழ்க்கை நடத்த வேண்டியவரானர்.

கொலம்பஸ் முதலில் கப்பல் கட்டும் வேலையில் அமர்ந்தார். நாளடைவில் கப்பலை ஓட்டும் ஒரு மாலுமியானர். அவரது ஊக்கமும், உழைப்பும், அஞ்சா நெஞ்சமும் அவரை ஒரு ஒப்பற்ற மாலுமி யாக்கின. அவரது புகழ் எங்கும் பரந்தது. அப்பொழுது, அவர் ஸ்பெயின் தேசம் சென்று ஒரு மாலுமியாக வாழ்ந்துவந்தார். அக் காலத்தில், இந்திய நாட்டின் இணையற்ற வளம், ஐரோப்பாக் கண்டம் வரையில் எட்டி இருந்தது. ஆதலின், அந் நாட்டினர் இந்தியாவுக்குக் கடல் வழியைக் காணு கின்ற முயற்சியில் தலைப்பட்டார்கள். அவர்களில் பலர், புத்தம் புதிய இடங்கள் பலவற்றைக் கண்டு மீண்டனர். புதிய வழிகளைக் கண்டறிந்தவர்களுக்கு அரசாங்கம் பட்டம், பதவிகளைக் கொடுத்து ஊக்க மளித்தது. இந்நிலையில், அஞ்சா நெஞ்சு படைத்த கொலம்பஸ், கடற்பிரயாணத்திற்குத் துணிந்தெழுந் தார்.

அவர் தமக்கு இசைந்த ஒரு கூட்டத்தாரைத் திரட்டினர்; அரசாங்கத்தின் உதவியைப் பல தடவை நாடினர். அரசாங்கம் உதவி செய்ய மறுத் தது. அப்போது, ஸ்பெயின் தேசத்தை இஸபெல் லாள் என்ற பெண்ணரசி ஆட்சிபுரிந்து வந்தாள். கொலம்பஸ் அந்த அரசியாருடைய உதவியை வேண் டினர். அவ்வம்மையார் அவருடைய ஊக்கத்தை உள்ளவாறு அறிந்து, அவருக்கு வேண்டிய உதவி

செய்யுமாறு ஆணை பிறப்பித்தார். கொலம்பஸுடன் 120 பேர் புறப்பட்டனர். அவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவு உடைகளையும், பிற கருவிகளையும் சாந்த பீ, மேரி, கிராந்தா என்ற மூன்று கப்பல்களில் நிறைத்துக்கொண்டு புறப்பட்டனர். பலர் அவர்களின் முயற்சியை எள்ளி நகையாடினர்.

அவர்கள் ஸ்பெயினின் துறைமுகமான பாலோஸ் என்ற இடத்திலிருந்து, 1492-ஆம் ஆண்டு ஆகஸ்டு மூன்றாம் நாள் புறப்பட்டார்கள். கப்பல் அட்லாண்டிக் மகா சமுத்திரத்தில் மேற்காகச் சென்று கொண்டிருந்தது. அவர்கள் வழியில் பல அல்லல்களுக்கு ஆளாக நேர்ந்தது. திடீரென்று பெரும்புயல் தோன்றவே, கப்பல்கள் திசை மாறிச் சுற்றிச் சென்றன. தற்காலக் கப்பல்கள் போன்று இயந்திரத்தின் உதவியால் இயங்குவனவல்ல அக்காலக் கப்பல்கள். அவைகள் காற்றின் வழியே செல்லும் கப்பல்களாக விருந்தன. பெருமழையும் மின்னலும் தோன்றியமையால் கப்பலை நேர்வழியில் செலுத்த முடியாது, அவர்கள் நங்கூரமிட்டு ஒரே இடத்தில் நிறுத்திவைத்தனர். அப்போது பல பெரு மீன்கள் வந்து கப்பலைத் தாக்கின. இந்த இடையூறுகள் பிரயாணக் கூட்டத்திலுள்ள சிலருக்கு அச்சத்தை உண்டு பண்ணின. இடைவழியில் ஒரு தீவையோ, கப்பலையோ காணாதது அவர்களின் அச்சத்தை அதிகப்படுத்திற்று. என்றாலும், யாரும் வந்திராத இடம் வரையில் வந்துவிட்டோம் என்ற எண்ணம் அவர்களுக்கு ஆறுதலை அளித்தது.

ஆதலின், அவர்கள் மேலும் பிரயாணத்தைத் தொடங்கினர். 'இதுவரை எவ்வளவு தூரம் வந்துள்ளோம்' என்பதையும் அவர்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. பிரயாணம் ஆரம்பமாகி, ஏறக்குறைய இரண்டு மாதங்கள் சென்றமையால் சிலர் திரும்பி

விடுவதே நலம் என்று கருதினர். கொலம்பஸ், 'இன்னும் சில நாட்களில் நாம் எண்ணியதை முடித்துத் திரும்பலாம்' என்று அவர்களுக்கு ஊக்கம் ஊட்டினார்; எல்லோர் இசைவையும் பெற்று, அவர் பின்னும் சில நாட்கள் பிரயாணம் செய்தார். என்றாலும், கடலுக்கு எல்லை காண முடியவில்லை. எல்லையறியாப் பெருங் கடலுக்கு எல்லையறிவது எளிதான காரியமா?

ஆதலின், எல்லோரும் உள்ளம் தளர்ந்தனர். கொலம்பஸ் மட்டும் தைரியத்தைக் கைவிடவில்லை. கூட்டத்தார் திரும்பிவிட வேண்டுமென்று வற்புறுத்தினர். கொலம்பஸ் அதற்கு உடன் படாமையால், அக்கூட்டத்தார் கொலம்பஸைக் கொன்றுவிட வேண்டுமென்ற சூழ்ச்சியிலும் தலைப்பட்டனர். இந் நிலையிலும், பிரயாணம் தொடர்ந்துகொண்டே யிருந்தது. அப்பொழுது அவர்கள், வர வரக் கடலின் ஆழம் குறைந்து கொண்டே வருவதை அளந்தறிந்தனர். இதனை ஏதுவாகக் காட்டி, இன்னும் ஒரு வாரத்தில் கரையை அடையலாம் என்றும், இன்றெனில் திரும்பி விடலாம் என்றும் கொலம்பஸ் அவர்களுக்கு உறுதி கூறிப் பிரயாணத்தைத் தொடர்ந்தார்.

சிறிது தூரம் சென்றதும், தரைக் காற்று வீசுவதை அவர் தம் கூட்டத்தினருக்கு நிரூபித்துக் காட்டினார். அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படவே, அவர்கள் கொலம்பஸோடு ஒத்துழைக்கலாயினர். கப்பல் வேகமாகச் சென்றது. தரையிலுள்ள பொருட்கள் பல கடலில் மிதக்கக் கண்டனர். கடலில் நீரின் நிறமும் சிறிது மாறுபட்டிருப்பதைப் பார்த்தனர்; இவைகளெல்லாம் நிலப் பகுதியை நெருங்கி விட்டமைக்கு அறிகுறி என்று அவர்கள் நம்பினார்கள்.

சுமார் இரண்டரை மாதகாலம் முடிந்தது. அவர்கள் ஒருநாள், காலையில் வானத்தில் பறவைகள் வட்ட மிடுவதைக் கண்டு ஆரவாரித்தனர்; கப்பலைக் கடுகி ஓட்டினர். கரை தென்பட்டது. கரைகாணுது ஏக்கம் கொண்டிருந்த அவர்கள் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவுமுண்டோ? இழந்த உயிரை மீண்டும் பெற்றவர்களைப் போல எல்லையில்லா மகிழ்ச்சி கொண்டனர். துள்ளிக்குதித்துக் கரையை அடைந்தனர்; களி நடம் புரிந்தனர்; ஒருவர் முன் ஒருவர் ஓடி, நிலத்தில் நெஞ்சுறப் படுத்து நிலத்தை முத்தமிட்டுக்களிப்புக் கொண்டாடினர்.



இவ்வாறு அவர்கள் கண்டறிந்த இடம்தான் இன்று கியூபா என்று வழங்கும் தீவாகும். இதைத் தொடர்ந்தே பல தீவுகளும், அகன்ற அமெரிக்காவும் இருக்கின்றன. அப்போது அவர்கள் இதனை இந்தியா என்றே எண்ணினர்கள். வாஸ்கோடிகாமா என்பவர் இந்தியாவுக்கு வழிகாட்டிய பின்னர்,

இத்தீவுக் கூட்டத்துக்கு 'மேற்கு இந்தியத் தீவுகள்' என்று பெயர் ஏற்படலாயிற்று.

கொலம்பஸ் கரை கண்டதன் அடையாளமாக, அங்குள்ள பல பொருள்களை எடுத்துக்கொண்டும், பூர்வீக மக்களிற் சிலரை உடன் அழைத்துக் கொண்டும் தம் நாடு திரும்பினார்.

கொலம்பஸ் கூட்டத்தினர் வருகையைக் கண்ட மக்கள் பெருங் கூச்சலிட்டு, அவர்களை வரவேற்றனர்; அளவற்ற சிறப்புச் செய்தனர்; அவருக்கு உருவச் சிலை நாட்டிப் போற்றினார்கள். அவர் புகழ் எங்கும் பரவியது. கொலம்பஸ் காட்டிய வழியே, பின்னர் மக்கள் அமெரிக்கா சென்று குடியேறுவதற்குக் காரணமாயிற்று. இன்று அமெரிக்க நாடு குபேர நாடாக விளங்குவதற்கும் அதுவே காரண மாயிற்று.

**அரும்பொருள்:—** திகழ்கிறது - விளங்குகிறது. மாலுமி - கப்பலோட்டி. எள்ளி - இழிவாகப் பேசி. கடுகி - விரைந்து.

## வினாக்கள்

1. இன்று குபேர நாடாக விளங்குவது எது?

2. அமெரிக்கா என்ற பெயர் சிறப்பாக எதனைக் குறிக்கின்றது? ஏன்?

3. கொலம்பஸ் எப்பொழுது, எங்குப் பிறந்தார்?

4. ஐரோப்பியர் இந்தியாவிற்குக் கடல் வழி காண முயன்றது ஏன்?

5. கொலம்பஸின் கடற்பிரயாணத்திற்கு உதவி அளித்தவர் யார்?

6. கொலம்பஸோடு கடற்பிரயாணம் செய்தவர் சிலர் அச்சங்கொண்டது ஏன்?

7. கொலம்பஸ் அவர்களுக்கு எவ்வாறு ஊக்கமூட்டினார்?

8. அவர்கள் கரையை நெருங்கிவிட்டோம் என்பதை எவ்வாறு தெரிந்து கொண்டனர்?

9. புதிய உலகிற்கு வழிகாட்டிய கொலம்பஸை மக்கள் எவ்வாறு சிறப்பித்தனர்?

## பயிற்சி

முற்காலக் கடற் பிரயாணத்திற்கும், தற்காலக் கடற் பிரயாணத்திற்கும் உள்ள வேற்றுமையை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.

## இலக்கணம்

**வேற்றுமை** - பெயர்ச்சொல்லின் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமை யாகும். அது எட்டு வகைப்படும்.

வேற்றுமைப் பெயர்களும் உருபுகளும் :—

| பெயர் | உருபு |
|---|---|
| முதல் வேற்றுமை | திரிபில்லாத பெயர்ச் சொல் |
| இரண்டாம் வேற்றுமை | ஐ |
| மூன்றாம் வேற்றுமை | ஆல், ஆன், ஒடு - ஓடு - உடன் |
| நான்காம் வேற்றுமை | கு |
| ஐந்தாம் வேற்றுமை | இன் - இல் |
| ஆறாம் வேற்றுமை | அது - ஆது - அ - உடைய |
| ஏழாம் வேற்றுமை | இல் - இடத்தில் - கண் |
| எட்டாம் வேற்றுமை | ஆ - ஏ - ஓ என்பனவும் பிறவும். |

(உ-ம்.) 1. இராமன் வந்தான். 2. வீட்டைக் கட்டினான். 3. பொன்னாற் செய்த காப்பு. 4. எலிக்குப் பகை பூனை. 5. மதுரையின் தெற்குத் திருப்பரங்குன்றம். 6. இராமனது புத்தகம். 7. ஊரின்கண் மாளிகை. 8. தந்தையே!

## 10. கபிலர் அகவல்

மாரிதான் சிலரை வரைந்து பெய்யுமோ ?
காற்றுஞ் சிலரை நீக்கி வீசுமோ?
மா நிலஞ், 'சுமக்க மாட்டேன்' என்னுமோ ?
கதிரோன் சிலரைக் 'காயேன்' என்னுமோ ?
வாழ்நான்கு சாதிக் குணவு நாட்டிலும்,
கீழ் நான்கு சாதிக் குணவு காட்டிலுமோ ?
திருவும், வறுமையுஞ், செய்தவப் பேறும்,
சாவதும் வேறிலை தரணி யோர்க்கே;
குலமும் ஒன்றே; குடியும் ஒன்றே;
இறப்பும் ஒன்றே, பிறப்பும் ஒன்றே;
வழிபடும் தெய்வமும் ஒன்றே.

ஆதலால்,

முன்னோர் உரைத்த மொழிதவ றுமல்,
எந்நா ளாயினும் இரப்பவர்க் கிட்டுப்
புலையும், கொலையும், களவும் தவிர்ந்து
ஆணும், பெண்ணும் அல்லதை உணர்ந்து,
பேணி யுரைப்பது பிழையெனப் படாது ;
சிறப்புஞ் சீலமும் அல்லது
பிறப்பு நலந்தருமோ பேதையீரே !

—கபிலர்.

**அரும் பொருள் :**—மாரி - மழை. வரைந்து - நீக்கி. மாநிலம் - பெரிய பூமி. கதிரோன் - சூரியன். திரு - செல்வம். தரணி - பூமி. புலை - புன்குணம். சீலம் - ஒழுக்கம்.

## வினாக்கள்

1. பிறப்பினால் உயர்வு தாழ்வு இல்லை என்பதைக் கபிலர் எவ்வாறு விளக்குகின்றார்?

2. கபிலர், வாழும் முறையை எவ்வாறு வகுத்துரைக்கின்றார்.

3. ஒருவருக்கு நலந்தருவன யாவை?

## பயிற்சி

பாடலின் கருத்தை உன் சொந்த நடையில் எழுதுக.

## இலக்கணம்

வினைச்சொல் **குறிப்பு வினை, தெரிநிலை வினை** என இரு வகைப்படும்.

குறிப்பு வினை - **காலத்தைக்** குறிப்பாய்க் காட்டுவது. (உ-ம்) பொன்னன். கரியன். நல்லன்.

தெரி நிலைவினை - **தொழிலும் காலமும்** வெளிப்படையாய்த் தெரிவது. அது தன்வினை, பிறவினை, செயப்படு பொருள் குன்றிய வினை, செயப்படு பொருள் குன்றா வினை, செய்வினை, செயப்பாட்டு வினை எனப் பல பிரிவுகளையுடையது.

இப்பாடத்தில் வந்துள்ள தெரிநிலை வினைச் சொற்களைத் தனியே எடுத்தெழுதுக.

## 11. வீரபாண்டியக் கட்டபொம்மன்

[வித்வான் ஈ. பண்டார நம்பியார்]

நமது இந்திய நாடு சுமார் நூற்றைம்பது வருடங்களுக்கு மேலாக, அடிமை வாழ்வில் அகப்பட்டு அல்லற் பட்டது. கிழக் கிந்தியக் கம்பெனி என்ற பெயரால் வாணிபம் புரிந்து வாழ வந்த ஆங்கிலேயர்கள், நம்மை அடிமைகளாக்கி ஆண்டு வந்தார்கள். நாமும் அவர்களைத் தலைவர்களாக ஏற்றுக் கொண்டு, நாம் இருக்கும் நாடு நமதென்பதைக்கூட மறந்து வாழ்ந்தோம். அடிமை வாழ்வில் நேர்ந்த அரும்பழி இன்னும் நமது நெஞ்சை விட்டு அகலவில்லை. இத் தகைய நிலை இந்திய நாட்டிற்கு ஏற்படுதல் கூடாதே என்று எண்ணி, அடியிலேயே அதை அகற்ற முயன்ற முதல் வீரன் தான், **வீரபாண்டியக் கட்ட பொம்மன்** என்பவன்.

தமிழகத்தை ஒரு காலத்தில் முடி மன்னர் மூவர் ஆண்டு வந்தனர். அவர்களின் பின்னர், மதுரை நாயக்க மன்னர்கள் ஆட்சி நடைபெற்றது. அக் காலத்தில் தமிழ் நாடு பல பிரிவுகளாகப் பிரிக்கப் பட்டது. ஒவ்வொரு பிரிவையும் ஒவ்வொரு சிற்றரசர் ஆண்டனர். அவர்கள் பாளையக்காரர்கள் என்று அழைக்கப்பட்டார்கள். அவர்களில் நாற்பத் தேழாவது பாளையக்காரனாக வந்தவன் வீரபாண்டியக் கட்ட பொம்மன். அவன் திருநெல்வேலிச் சீமையிலுள்ள பாஞ்சாலங் குறிச்சியை ஆண்டு வந்தான். அவன் அஞ்சா நெஞ்சினன்; உரிமை உணர்ச்சி பிறவியிலேயே அமையப் பெற்ற பெரு வீரன்; அவ் வீரன் 1760-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் மூன்றும் நாள் பிறந்தான். அவன் தந்தை **ஜகவீரக் கட்ட பொம்மன்**; தாய் **ஆறுமுகத்தம்மாள்**.

பெற்றோர்கள் பிள்ளைக்கு வீரபாண்டியன் எனப் பெயரிட்டனர். இவனுக்குக் குமாரசுவாமி, துரை சிங்கம் என்ற இரு தம்பியர் இருந்தனர். குமார சுவாமியை ஊமைத்துரை என்று எல்லோரும் அழைத்து வந்தனர். "நான் அறிந்த எவரினும் இவர் மிகவும் புதுமை வாய்ந்த மனிதர்" என்று சேனைத் தலைவர் வெல்ஸ் துரை, அந் நாளில் இந்த ஊமைத்துரையைக் குறித்துக் கூறினாராம். அத்தகைய அரிய வீரனாக விளங்கினான் ஊமைத் துரை.

அக் காலத்தில் தமிழகத்தை ஆண்டு வந்த பாளையக்காரர்கள் எல்லோரும் அடிமை மனப் பான்மை யுடையவர்களாக இருந்தனர். யார் தங்கள் மீது ஆணை செலுத்தினாலும், அவர்களுக்கு அடி பணிவது என்பது அவர்கள் அரசியல் தந்திரமாக இருந்தது. இந் நிலையில், வாணிபம் என்ற பெய ரால் கொள்ளையடித்து வந்த வெள்ளைக்காரக் கம்பெனியார் நாடு பிடிக்கத் தலைப்பட்டனர். அப்போது தென்னாடு, ஆர்க்காட்டு நவாபின் ஆட்சியி லிருந்தது. கம்பெனியார் ஆர்க்காட்டு நவாபைக் கடன் கொடுத்து அடிமை கொண்டனர்; வரி வாங்கும் உரிமையையும் பெற்றனர். இதனையறிந்த பாளையக்காரர்களில் பலர், அவர்களைத் தலைவர்களாக ஏற்றுக் கொண்டு கைகட்டி, வாய் புதைத்துக் கப்பம் கட்டவும் முற்பட்டனர்.

இந்த அடிமைக் கூட்டத்தின் நடுவில், ஆண்மை யாளனாக விளங்கினான் கட்ட பொம்மன். அவன் 1790-ஆம் ஆண்டு பாஞ்சாலங் குறிச்சி அரசனானான். அவன் யாருக்கும் அடிமையாக விரும்பவில்லை; 'சுதந்திரம் பிறப்புரிமை' என்று கொண்டு வாழ்ந் தான்; மானமே பெரிது என்னும் வீரனாக விளங்கி னான்; வெள்ளையர்களைப் பொருட்படுத்த வில்லை.

ஆதலின், வெள்ளையரின் பார்வை பாஞ்சாலங் குறிச்சியின் மீது விழுந்தது. அவர்கள் கட்ட பொம்மனையும் அடிமைத் தளையால் கட்ட முயன்றனர்.

அப்பொழுது ஆங்கிலேயர்களுக்குத் தளகர்த்த னாக இருந்தவன் மாக்ஸ்வெல் என்பவன். அவன் அதற்கான முயற்சியில் தலைப்பட்டான்; முயற்சி வெற்றிபெற வில்லை. அடுத்தாற்போல் ஆங்கிலக் கம்பெனியார் ஜாக்ஸன் என்பவனைக் கலெக்டராக நிறுவினர். அவன், பாஞ்சாலங் குறிச்சி வீரனை அடக்குவதற்கு அல்லும் பகலும் முயன்றான்; முடியவில்லை. அவன், தன்னைத் தனியாக வந்து பார்க்கும்படி வீரபாண்டியனுக்கு அழைப்பு அனுப்பி னான். அவனைத் தனியே வரவழைத்துத் தந்திர மாகச் சிறை செய்து விடலாம் என்பது துரையின் எண்ணம். அதற்கு அகப்படுபவனா கட்டபொம்மன்? துரை பல தடவை அழைத்தும் பயன்படவில்லை. திடீரென்று ஒரு நாள், கட்டபொம்மன் பரிவாரங்க ளோடு துரையைப் பார்க்கத் திருநெல்வேலிக்குப் புறப்பட்டான்.

வீரன் வருகையைக் கண்ட துரை அஞ்சி நடுங்கினான்; தனக்குப் பாதுகாவலான இடத்தைத் தேடினான்; இராமநாதபுரம் சென்று சேதுபதிக்குச் சொந்தமான மாளிகையில் தங்கினான்; கட்டபொம் மன் அங்குச் சென்று அவனைக் கண்டான். கலெக்டர் அவனைச் சிறைபிடிக்க முயன்றான். பாண்டியன் உடைவாளை உருவி ஓச்சினான். அவன் வீரவாளுக்குப் பலர் இரையாயினர். அப்போது, கலெக்டர் இருந்த மாளிகையை விட்டுத் தான் வெளியேறிவிட வேண்டும் என்று வீரபாண்டியன் முயன்றான். அவனைக் கட்டிப் பிடித்து விடலாம் என்ற எண்ணத்தால் அவன் மீது பாய்ந்தான்

ஆங்கிலத் தளபதி கிளார்க் என்பவன்! அவன் கணப் பொழுதில் கட்டபொம்மன் வீர வாளால் துண்டுபட்டு வீழ்ந்தான். கலெக்டர் குடல் நடுங்கினன். இப் போரில் வீரபாண்டியனுக்கு உடன் நின்று உதவியவர், தம்பி ஊமைத்துரையும், வெள்ளையத் தேவன் என்பவனுமாவர். வெற்றி பெற்ற கட்டபொம்மன், வீர முழக்கம் செய்து கொண்டு பாஞ்சாலங்குறிச்சி வந்து சேர்ந்தான்.

இந் நிகழ்ச்சிக்குப் பிறகு, கிழக்கிந்தியக் கம்பெனியார் ஜாக்ஸனுக்குப் பதில், லூஷிங்டன் என்பவனைக் கலெக்டராக நியமித்தனர். அவன் பார்வையும் பாஞ்சாலங்குறிச்சியின்மீது விழுந்தது. அவனும், வீரபாண்டியனைத் தந்திரமாக அடக்கிவிட வேண்டுமென்றுதான் முதலில் எண்ணினன்; வீரபாண்டியனைத் தனியாக வந்து, தன்னைப் பார்க்குமாறு பல முறை கடிதங்கள் எழுதினன். வீரபாண்டியன் வந்தானில்லை. அதனல் லூஷிங்டன் பெரும் படையைத் திரட்டி, அவனை முறியடிப்பதற்குத் திட்டமிட்டான்; சென்னைக் கவர்னருக்கு எழுதி ஒரு பெரும் படையை வருவித்தான்; துப்பாக்கி, பீரங்கி எல்லாம் தயார் செய்தான்; தளபதி பானர்மென் என்பவன் சர்வாதிகாரம் பெற்று, ஒரு பெரும் படையோடு பாஞ்சாலங்குறிச்சிக்குச் சென்றுன். அவன் பாஞ்சாலங்குறிச்சியை அடைந்து அதை முற்றுகையிட்டான்.

ஆங்கிலப் படையின் வருகையைக் கண்ட பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் அஞ்சவில்லை. ஊமைத்துரை ஒரு புல்லை எடுத்துக் கையில் வைத்து ஊதிப் பறக்க விட்டுக் காட்டினனும். பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள், ஆங்கிலப் படையைப் புல்லெனவே மதித்து வேலும், வாளும் தாங்கிப் போருக்குத் திரண்டனர். பகைவர் தலைகள் பூமி

யில் உருண்டன. பாஞ்சாலங்குறிச்சி மண்ணின் வீரத்தைக் கண்ட வெள்ளையர் பயந்தனர்: துப்பாக்கிகளையும் பீரங்கிகளையும் முழக்கிப் பார்த்தனர். என்றாலும், பெருங் காற்றுக்கு எதிர் சிறு மரம் என் செய்யும்? பல நாட்போராட்டத்தின் பின், மண்கோட்டை வெள்ளையர்க்கு இடம் கொடுத்துத் தகர்ந்தது. இனி வேறு வழி இல்லை என்று கோட்டைக்குள் இருந்த வீரர் வெளியேறிப் போராடத் துணிந்தனர். அக் காலையில் திறந்த வாயிலினுள்ளே புகவும் வேற்றுவன் படைஞர் அஞ்சி மலைத்து நின்றனர்.




லெப்டினண்ட் காலின்ஸ் என்பவன், கோட்டை வாயிலின் உள்ளே நுழைந்தான். வெள்ளையத் தேவனின் ஈட்டி அவன் மார்பில் பாய்ந்து வரவேற்றது. அவன் குதிரையிலிருந்து கீழே விழுந்தான். இந்தக் கோரக் காட்சியைக் கண்ட தளபதி பானர்மென் மனங்கலங்கினான்; தன் படைகளில் பெரும் பகுதி அழிந்து விட்டமையால் தளர்வடைந்தான்; தந்திர

மாகப் போரை நிறுத்திவைத்து, படைகளை அனுப்பி வைக்குமாறு பாளையங்கோட்டைக்குச் செய்தி அனுப்பினன்.

ஆங்கிலேயரின் தந்திரத்தை ஒற்றர் மூலம் அறிந்த கட்டபொம்மன், பாளையங்கோட்டையி லிருந்து படை வந்தால் அதனைத் தடுத்து நிறுத்துவ தற்குப் போதுமான படை தன்னிடம் இல்லையென்று எண்ணினன்; தமிழ் நாடு முழுவதும் சென்று உரிமைப்போர் புரிவதற்கு மக்களைத் தட்டி எழுப்ப வேண்டுமென்று திட்டமிட்டுக் கோட்டையை விட்டு வெளியேறினன். ஊமைத்துரைபோன்ற உண்மை வீரர்கள் பலர் அவனைத் தொடர்ந்தனர். அவன் திட்டத்தை அறிந்த சில சிற்றரசர்கள், ஆங்கிலேய ரின் உதவியைப் பெறவேண்டும் என்ற அடிமைப் பண்பினல் கட்டபொம்மனைக் காட்டிக்கொடுத் தனர், இறுதியாக அவன் புதுக்கோட்டை மன்னர் விருந்தினனாக இருந்தபோது, நயவஞ்சகரால் காட்டிக்கொடுக்கப்பட்டுக் கைது செய்யப்பட்டான்.

வாணிபம் புரிந்து வாழவந்த ஆங்கிலக் கம்பெனி யார் ஆட்சி புரியும் சூழ்ச்சியைக் கண்டு, அதற்கு முடிவுகட்ட முயன்றான் வீர பாண்டியன். தமிழ்த் திருநாட்டின் மானங்காக்கத் துணிந்த பெரு வீரனை யும் காட்டிக்கொடுத்தனர் நயவஞ்சகர் சிலர். அதன் பயன்தான் ஒரு நூற்றாண்டுக்கு மேலாக அடிமைப் பட்டு அல்லலடைந்தோம். இன்று சுதந்திர இந்தி யாவில் வாழுகின்ற நமக்கு இந்த இறந்தகால வரலாறு ஒரு நல்ல படிப்பினையாகும். நாம் நம்மிடம் உள்ள சின்னஞ்சிறு பூசல்களை எல்லாம் ஒழித்து, ஒன்றுபட்டு வாழவேண்டும். அன்னி யர்க்கு இடங்கொடாது, அடிமை மனப்பான்மையை அகற்றி வாழவேண்டும்.

கிழக்கிந்தியக் கம்பெனியார் வீரபாண்டியனுக்கு விசாரணை நடத்தினர்கள். 'சொந்த நாட்டில் பிறர்க்கு அடிமை செய்ய மாட்டோம்' என்ற குற்றத்திற்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. தூக்கு மரத்தைக் கண்டு வீரபாண்டியன் துடிதுடிக்கவில்லை; தானுகவே கழுத்தில் கயிற்றை மாட்டிக்கொண்டான்; அவனைச் சூழநின்ற அடிமைகளை வெறுப்புடன் நோக்கி, வீரக் கனல் பறக்கச் சிரித்தான்; இந்த அடிமை யுலகிலிருந்து சுதந்திர உலகம் செல்பவனைப்போல், தூக்கு மரத்தில் தொங்கினன். அவன் ஆவி விடுதலையைப் பெற்றது. சுதந்திரத் தெய்வத்தை வழிபட்டு, வீரசுவர்க்கம் புகுந்த வீரபாண்டியன், இன்றும் தமிழ் மக்கள் உள்ளங்களில் வீர விளக்காக விளங்குகிருன்; அவன் என்றும் விளங்குவான்.

**அரும் பொருள்:—** அல்லல் - துன்பம். வாணிபம் - வியாபாரம். சீமை - தேசம். தளகர்த்தன் - சேனைத் தலைவன். பிறர் - அன்னியர்; பகைவர். ஆவி - உயிர்.

## வினக்கள்

1. சுதந்திரப் போரைத் தொடங்கிவைத்த முதல் வீரன் யாவன்?

2. பாளையக்காரர் என்போர் யாவர்?

3. ஊமைத்துரை என்பவனைக் குறித்து வெல்ஸ் துரை கூறியது என்ன?

4. கலெக்டர் ஜாக்ஸன் வீரபாண்டியனை அடக்குவதற்குச் செய்த முயற்சி யாது? அதன் முடிவென்ன?

5. லூஷிங்டன் வீரபாண்டியனை எவ்வாறு சிறை பிடித்தான்?

6. வீரபாண்டியன் வரலாற்றிலிருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டுவன யாவை?

## பயிற்சி

வீரபாண்டியன் துடிதுடிக்கவில்லை; தானாகவே கழுத்தில் கயிற்றை மாட்டிக்கொண்டான்; சூழ நின்ற அடிமைகளை நோக்கி வீரக் கனல் பறக்கச் சிரித்தான்; தூக்கு மரத்தில் தொங்கினான்—இந்த வாக்கியங்களைச் சேர்த்து ஒரு வாக்கியமாக எழுதுக.

## இலக்கணம்

**தன் வினை** - ஒருவன் தானே செய்கின்ற வினை. (உ-ம்) நடந்தேன். நடந்தாய். நடந்தான்.

**பிற வினை** - ஒருவன் வேறொருவனைக் கொண்டு செய்விக்கும் வினை. (உ-ம்) நடப்பித்தேன். நடப்பித்தாய். நடப்பித்தான்.

**செயப்படு பொருள் குன்றிய வினை** - செயப்படுபொருள் இல்லாத வினை.. (உ-ம்) போனான். வந்தான்.

**செயப்படு பொருள் குன்றா வினை** - செயப்படு பொருள் உள்ள வினை. (உ-ம்) பாடத்தைப் படித்தான். பழத்தைத் தின்றான்.

**செய்வினை** - கருத்தாவின் தொழிலை நேரே உணர்த்தும் வினைக்குச் செய் வினை என்று பெயர்.

(உ-ம்) இராமன் பாம்பைக் கொன்றான்.

**செயப்பாட்டு வினை** - கருத்தா செய்யும் தொழிலைச் செயப்படு பொருள் அடைவதை உணர்த்தும் வினைக்குச் செயப்பாட்டு வினை என்று பெயர்.

(உ-ம்) பாம்பு இராமனால் கொல்லப்பட்டது.

இப் பாடத்திலிருந்து செய்வினை வாக்கியங்கள் இரண்டினை எழுதி, அவற்றைச் செயப்பாட்டு வினை வாக்கியங்களாக மாற்றி எழுதுக.

## 12. இயேசு கிறிஸ்து நாதர்

ஆசியாக் கண்டமே மகான்களை ஈன்றெடுத்து உலகிற்கு அளித்த பெருமையை உடையது. அக் கண்டத்தின் மேற்குப் பகுதியிலுள்ள பாலஸ்தீன் நாட்டில், **பெத்லகேம்** என்னும் நகரில் கிறிஸ்து நாதர் தோன்றினர்.

அவர் அன்னையார், **கன்னி மரியாள்** என்னும் அம்மையார். அவர் தமது புதல்வரின் மகிமையை உணர்ந்து, அவரை மிக அருமையாகப் போற்றி வளர்த்து வந்தார். கிறிஸ்து நாதரிடம் இளமையிலேயே அன்பு, அறிவு, உண்மை, ஊக்கம், பணிவு முதலிய அருங் குணங்கள் அமைந்திருந்தன. அவர் இறைவனிடம் இடையறாத அன்புடையவராக இருந்தார்.

கிறிஸ்து நாதர் தமது முப்பதாவது வயதில், உலகிற்கு உயர்ந்த உண்மைகளை எடுத்துரைக்கத் தொடங்கினர். பன்னிருவர் அவரது உண்மைச் சீடர்களானர்கள். கிறிஸ்து நாதர் தம் சீடர்களுடன் பற்பல இடங்களுக்கும் சென்று, இறுதியில் ஒரு ஊரில் வந்து தங்கி இருந்தார். அவரது அறவுரைகளைக் கேட்பதற்கு எண்ணிறந்த மக்கள் அங்குவந்து கூடினார்கள். கிறிஸ்து நாதர் அவர்களுக்குத் தாம் கண்டறிந்த உண்மைகளை எடுத்துரைக்கத் தொடங்கினர். அப்போது அவர் ஒரு உவமை கூறினர்:

"ஒரு உழவன் தன் வயலில் விதை விதைக்கப் புறப்பட்டான். அவன் விதைக்கும்போது சில விதைகள், வயலின் அருகேயுள்ள பாதையில் விழுந்தன. அவை அவ் வழியே சென்றவர்களால் மிதியுண்டன. வானத்தில் பறந்துகொண்டிருந்த பறவைகள், அவ் விதைகளைத் தின்றுவிட்டன.

"வேறு சில விதைகள் பக்கத்திலுள்ள பாறையின் மேல் விழுந்தன. அவை முளைத்தனவாயினும், போதிய ஈரமில்லாமையால் வாடிப் போயின.

"மற்றுஞ் சில விதைகள் அருகேயுள்ள முட்களின் நடுவில் விழுந்தன. அவைகள் முளைத்த போதிலும், முட் செடிகள் அவைகளை அழித்து விட்டமையால், அவைகளும் பயனற்றுப் போயின.



"இன்னுஞ் சில விதைகள் நன்கு பண் படுத்தப்பட்ட நிலத்தில் விழுந்தமையால், நன்றாய் முளைத்துச் செழித்து வளர்ந்து பெரும் பலனைக் கொடுத்தன" என்று கிறிஸ்துநாதர் கூறி முடித்தார்.

அங்குக் கூடி இருந்த மக்கள், இதன் பொருளை உணர முடியாது திகைத்தார்கள். அவர் சீடர்களுக்கும் அதன் பொருள் விளங்கவில்லை.

அப்போது, அவரது சீடர்கள் கிறிஸ்து நாதரை நோக்கி, "அண்ணலே, நீவிர் கூறிய உவமையின் பொருளை உணர முடியாது திகைக்கின்றோம். விளக்கியருள வேண்டும்" என்று பணிந்து நின்றார்கள்.

அப்போது கிறிஸ்து நாதர், பின்வருமாறு விளக்கி அருளினார்:

"விதைகள் என்று குறித்தவை தந்தையாகிய கடவுளினுடைய வாக்கியங்கள். அவை விழும் இடங்கள் மக்களின் உள்ளங்கள். இறைவனுடைய அறவுரைகளைக் காதால் மட்டும் கேட்டு, அவற்றில் நிலைத்து நில்லாதவர்களின் உள்ளங்கள், மக்கள் வழி நடக்கும் பாதைக்கு ஒப்பானவை. பசாசு என்னும் பறவையானது, இறைவனுடைய அருள் மொழிகள் அவர்களது உள்ளங்களில் ஊன்றி நிற்காதபடி கவர்ந்து செல்கின்றது.

"இறைவனுடைய கட்டுரைகளைச் சிலர் களிப்புடன் ஏற்றுக்கொள்வர். ஆனால், அம்மொழிகள் அவர்கள் உள்ளங்களில் ஊன்றி நிற்பதற்குப் போதிய தகுதி அங்கு இருப்பதில்லை. அத்தகைய பண்பாடற்ற நெஞ்சங்கள் பாறை நிலத்திற்கு ஒப்பாகும். அவர்கள், சிலகாலம் நம்பிக்கையுடன் இருப்பினும், சோதனைக் காலத்தில் தங்களது நம்பிக்கையை இழந்து விடுவார்கள்.

"மற்றுஞ் சிலர் ஆண்டவன் மொழிகளை அன்புடன் ஏற்றுக்கொள்வர். ஆனால், அவை அவர்களின் உள்ளங்களில் நிலைத்து நின்று பயன்தர வொட்டாதபடி உலகக் கவலைகளும், அவா, வெகுளி, மயக்கம் முதலிய தீய குணங்களும் செய்து விடுகின்றன. இத்தகைய உள்ளங்களே முட்செடிகள் நிறைந்த நிலத்தை நிகர்ப்பன.

குறை சிறிதும் இல்லாதவர்களுடைய உள்ளங்களை, நல்ல நிலத்திற்கு ஒப்பிடலாம். அவர்கள் உள்ளங்களில் கடவுளுடைய கட்டுரைகள் ஆழப் பதிந்து பெரும் பலனைக் கொடுக்கும்" என்று கிறிஸ்து நாதர் உவமையை விளக்கிக் காட்டியதும், எல்லோரும் அறிவு விளக்கம் பெற்றனர்.

கிறிஸ்து நாதர் இம் மாதிரியான அரிய அறவுரைகளைச் சொல்லியதுமட்டு மன்றி, அவற்றை நடத்தியும் காட்டினார். ஆதலாற்றான், இன்றும் உலகம் அவரை மறவாது, பெரியோர்கள் வரிசையில் வைத்துப் போற்றி வணங்குகின்றது. அவர் அருள் மொழிகளை மறவாது போற்றி நடக்கும் கோடிக் கணக்கான மக்கள் உலக மெங்கும் காணப்படுகின்றனர்.

கிறிஸ்து நாதர், இறுதியில் தம்மை அநியாயமாகச் சிலுவையில் ஏற்றிய பாதகர்களுக்காகவும் இரங்கினார்: "பெருமை பெற்ற தந்தையே! இவர்களை மன்னியுங்கள். இவர்கள், தாம் செய்வது இன்னது என்பதை அறியாமல் செய்கிறார்கள்" என்றார். அந்தப் பெரியாரை உலகம் மறவாது போற்றுவதில் வியப்பில்லை அல்லவா?

**அரும்பொருள்:**—தோன்றினார்-பிறந்தார். ஈன்றெடுத்து-பெற்றெடுத்து. அன்னை - தாய். நெஞ்சம் - உள்ளம், இதயம், மனம். வியப்பு - ஆச்சரியம். நிகரான - ஒப்பான. அருள்மொழி - உபதேசம், கட்டுரை, அறவுரை.

## வினாக்கள்

1. கிறிஸ்து நாதர் எங்கே அவதரித்தார்?
2. அவர் கூறிய உவமை யாது?

3. 'பாறையில் விதைக்கப்பட்ட விதைகள்' என்ற உவமையை விளக்குக.

4. நல்ல நிலத்திற்கு நிகரானவர் யார்?

## பயிற்சி

இயேசு கிறிஸ்து நாதரைப் பற்றி ஒரு கட்டுரை எழுது.

## இலக்கணம்

செய்தான், உண்டான், சென்றான், ஓடினான். இந் நான்கும் இறந்த காலம் காட்டும் வினைச்சொற்கள். இவற்றின் நடுவில் நிற்கும் **த் - ட் - ற் - இன்** என்ற நான்குமே இறந்த காலத்தைக் காட்டுகின்றன. இவற்றை இறந்த கால இடைநிலைகள் என்று கூறுவார்கள். இவற்றைப் போலவே **கிறு, கின்று** என்ற இரண்டும் நிகழ்கால இடை நிலைகளாம்.

ஓடுகின்றான் — கின்று
ஓடுகிறான் — கிறு

**ப் - வ்** என்ற இரண்டும் எதிர்கால இடை நிலைகளாம்.

படிப்பான் — ப்
செய்வான் — வ்

இப் பாடத்திலிருந்து காலங்காட்டும் வினைச் சொற்களை எடுத்தெழுதி, காலங்காட்டும் இடைநிலைகளைக் கண்டறிக.

# 13. எங்கள் இன்பச் செலவு

'எங்கள் இன்பச் செலவு' என்றதும், இன்ப வாழ்க்கைக்காகச் செலவு செய்த ரூபாய், அணு, பைசாக் கணக்கைக் கூறப்போகிறேன் என்று எண்ணுகின்றீர்களா? இல்லை; இல்லை. நானும், எங்கள் கலாசாலைச் சாரணர்களும், சென்ற ஆனி மாதம் குற்றாலம் சென்று வந்த உல்லாசப் பிரயாணத்தைப் பற்றியே கூறப் போகின்றேன்.

25—6—51 மாலையில் நாங்கள் நெல்லை நகரிலிருந்து ரயில் வண்டியில் புறப்பட்டுத் தென்காசியைச் சென்றடைந்தோம்; அங்கிருந்து 'பஸ்' ஏறிக் குற்றாலம் போனோம்; அங்கு, எங்கள் ஆசிரியர் ஒருவருடைய முன்னேற்பாட்டின்படி ஒரு பங்களாவில் தங்கினோம். அன்று இரவாகிவிட்டமையால் குற்றாலக் காட்சியைக் கண்டு களிக்க முடியவில்லை.

மறுநாள் காலையில், அருவியில் சென்று நீராடினோம். அருவியில் நீராடுவதற்கு வசதியாக இரும்பு வேலிகள் அமைத்திருக்கின்றார்கள். யாரும் அச்சமின்றி அதில் நீராடலாம். ஆனால் நீராடும்போது பலத்த அடிகள் உடம்பில் விழுவதுபோல் தோன்றும். என்றாலும், அதில் நீராடுவது உடம்புக்கும் உள்ளத்திற்கும் ஒருங்கே இன்பம் பயக்கும் என்பதைச் சிறிது நேரத்தில் உணர்ந்துகொள்ளலாம். சுமார் ஒரு மணி நேரம் நீராடியும்கூட, பின்னும் எங்கள் ஆசை அடங்கவில்லை. ஆதலின், ஒவ்வொரு நாளும் மூன்று வேளை நீராடினோம்.

நாங்கள் காலையில் நீராடி முடிந்ததும், திருக்கோவிலைத் தரிசிப்பதற்குச் சென்றோம். அங்கு எழுந்தருளியிருக்கும் சுவாமியின் பெயர் திருக்குற்றாலநாதர்; அம்மையின் பெயர் குழல் வாய்மொழி

அம்மையார். இந்த ஆலயம் ஒருகாலத்தில் திருமால் ஆலயமாக இருந்ததாம். "அகத்திய முனிவர் சைவத் திருக் கோலத்துடன் ஆலயத்திற்குள் சென்றார். அங்கிருந்த வைணவப் பெரியார்கள் அவரைத் தடுத்து நிறுத்தினார்கள். ஆதலால், அகத்திய முனிவர் திரும்பிச் சென்றார். பின் அவர் வைணவக் கோலம் புனைந்து வந்து ஆலயத்தை வணங்கினார். அப்பொழுது "குறுக, குறுக, குற்றாலா" என்று கூறி நெடிய மாலைக் குறுகச் செய்து சிவலிங்கமாக்கி விட்டார். அன்றுமுதல் இவ் வாலயம் சிவாலயமாக இருந்து வருகின்றது; ஊருக்கும் குற்றாலம் என்று பெயர் உண்டா யிற்று" என்ற புராணக் கதையை எங்கள் ஆசிரியர் கூறினார். நாங்கள் குற்றால நாத ரையும், அம்மையாரையும் தரிசித்தோம்; அங்குச் சித்திர சபை என்னும் இடத்தில் வீற்றிருக்கும் நடராஜ மூர்த்தியையும் வணங்கினோம்.

பின்னர் ஆலயத்தின் வெளியே வந்து, வாயில் பக்கம் தெற்கு முகமாக நோக்கினோம். விண் ணளாவி நிற்கும் திருக்குற்றால மலை கண்ணுக் கினிய காட்சி அளித்தது. அம் மலையில் வளர்ந்தோங்கி நின்ற மரங்களும், பச்சைப் பசேலெனச் செழித்து வளர்ந்த செடி கொடிகளும், நன்மணங் கமழும் பன்னிறப் பூக்களும் எங்களைப் பரவசப்படுத்தின. மரக் கிளைகளில் தாவி விளையாடும் வானரங்களும், பாட்டிசைத்துத் திரியும் வானம்பாடிகளும், மலை யோடு இறங்கிவரும் கரு மேகங்களும் கண் கொள் ளாக் காட்சிகளாக அமைந்தன. இத்தகைய காட்சிகளில் மனத்தைப் பறிகொடுத்த நாங்கள், மலையின் பல பகுதிகளிலும் சிரமமின்றி ஏறிப் பார்த்தோம். 'இம்மலை மேற்குத் தொடர்ச்சி மலை யின் ஒரு பகுதியாகும்' என்று எங்கள் ஆசிரியர் அறிவித்தார்.

இந்த மலையில் இருந்து விழும் அருவி வடவருவி எனப்படும். இது சுமார் 180 அடி உயரத்தில் இருந்து விழுகின்றது. இந்த அருவி நீர், சித்திரா நதி என்ற பெயருடன் தாம்பிரபர்ணி நதியில் கலக்கிறது. இந்த அருவிதான் குற்றாலத்தின் பெருமைக்குக் காரணமாகும். நாங்கள் காலையில் நீராடியது இந்த அருவியில்தான்.



இன்னும் சண்பக அருவி, தேன்அருவி, ஐந் தருவி என்ற வேறு சில அருவிகளும் அங்கு உண்டு. அவற்றில் எல்லோரும் சென்று நீராடுவதில்லை. நாங்

கள் அந்த அருவிகளையும் சென்று கண்டோம். அவற்றுள் தேனருவி 200 அடி உயரத்திலிருந்து விழுகின்றது. சுமார் மூன்று மைல் சென்றால்தான் இந்த அருவியைப் பார்க்க முடியும். எல்லோரும் அங்குச் செல்வதில்லை.

குற்றாலத்தில் இளந் தென்றல் எப்பொழுதும் சாரல் மழையை இன்பமாகத் தெளித்துக்கொண்டிருக்கும். அங்கு வெப்பம் என்பதே இல்லை. ஆதலின் மூன்று நாட்கள் "வையம் தன்னில் ஈதன்றி வாழும் சுவர்க்கம் வேறுண்டோ" என்று எண்ணிக்கொண்டே அங்குத் தங்கி இருந்தோம்.

ஒவ்வொரு நாளும் மாலையில், சாரணர்க்குரிய விளையாட்டுக்களை எங்கள் ஆசிரியர் தலைமையில் செய்து வந்தோம். பல்வேறிடங்களிலுமிருந்து அங்கு வந்து சுகத்திற்காகத் தங்கி இருந்த பலர், எங்கள் விளையாட்டைக் கண்டு களித்தனர். நாங்கள் இரவு 10 மணி வரை, 'கேம்ப் பயர்' (Camp Fire) நடத்தி மகிழ்ந்தோம்.

மூன்றாம் நாள் ஊர் வரும்போது, ரயில் வண்டியில் இருந்துகொண்டே, குற்றாலக் காட்சிகளைப் பற்றித் திரிகூட ராசப்பக் கவிராயர் என்பார் பாடியுள்ள பாடல் ஒன்றைப் பாடிக்கொண்டே வந்தோம். அப் பாடலை நீங்களும் பாடி மகிழலாம்.

"வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்

கானவர்கள் விழியெறிந்து வானவரை அழைப்பர்
கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பர்

தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்

கூனல் இளம் பிறைமுடித்த வேணி யலங் காரர்
குற்றால த் திரிகூட மலையெங்கள் மலையே."

**அரும்பொருள்:**—செலவு - பிரயாணம். திருக்கோலம் - வேடம். பரவசம் - இன்பம். அருவி - நீர் வீழ்ச்சி. தென்றல் - தென் காற்று. கவி - குரங்கு.

## வினாக்கள்

1. குற்றாலமென்று பெயர் வரக் காரணம் என்ன?
2. குற்றால மலை வளத்தைப்பற்றிக் கூறுக.
3. அருவியில் நீராடுவதால் விளையும் பயன் யாது?
4. குற்றாலம் எங்குள்ளது?
5. ஆலயத்தைப்பற்றி வழங்கும் கதை யாது?

## பயிற்சி

நீ கண்ட குற்றாலக் காட்சியைப்பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

## இலக்கணம்

1. வந்தது, மலை, சென்றேன், ஓடிற்று, அருவி—பன்மை யாக்குக.

2. வந்தான், சென்றன, காண்பாய், வருவீர்—எதிர் மறை யாக்குக.

3. வெப்பம், நன்மை, வாழ்வு—எதிர்ப்பதம் கூறுக.

4. அவன், மகன், தந்தை, மாமா, தேவன், செல்வன்—பெண்பால் கூறுக.

# 14. ரேடியோ

[சி. ஜே. கமலம் B. A., L. T.]

இந்த இருபதாம் நூற்றாண்டில் வாழ்கின்ற நாம் பெரும்பேறு பெற்றவர்களே யாவோம். நம் முன்னோர்கள் கண்டிராத எத்தனையோ புதுமை களைக் கண்டு களித்து வருகின்றோம்; விஞ்ஞான ஆராய்ச்சியின் பயனைத் துய்க்கின்றோம்; விஞ்ஞானி கள் பட்ட பெரும் பாட்டின் விளைவாக எத்தனையோ இன்பக் காட்சிகளை நுகர்கின்றோம். விஞ்ஞானம் தன்னைநோக்கித் தவங் கிடக்கின்றவர்களுக்குப் பல வரங்களை வாரி வழங்கி வருகிறது. நுண்ணறிவு படைத்த மக்கள், விஞ்ஞான விந்தைகள் பல வற்றைக் கண்டு வெளிப்படுத்தி யுள்ளார்கள். அவற்றுள் **ரேடியோ** என்னும் வானொலி புதிய தோர் விந்தையாகும். அதைப் பற்றி ஒவ்வொரு வரும் அறிந்திருக்க வேண்டுவது அவசியம்.

நாம் பேசும்போது பேச்சொலி நமது வாயி னின்று வெளிப்பட்டு, பல திசைகளிலும் பரவிச் சென்று அங்குள்ளோர் காதுகளில் விழுவதால், அவர்கள் நாம் பேசுவதை அறிந்து கொள்கின்றனர். ஒலி பல திசைகளிலும் பரவிச் செல்வது எங்ஙனம்? ஒரு குளத்தில் ஒரு கல்லைப் போட்டால், தண்ணீர் அசைகிறது. இவ் வசைவு, தண்ணீரில் பல அலைகளை உண்டு பண்ணுகிறது. இவ் வலைகள் வட்ட வடிவில் ஒன்றன் பின் ஒன்றாக நாற்புறமும் பரவுகின்றன. இவ்வண்ணமே பேசும்போது உண்டாகும் ஒலியும், ஒலி அலைகளாக ஆகாயத்தில் பரவி, கேட்போர் காதுகளில் விழுகின்றது. தண்ணீரில் அலைகள் தோன்றிய இடத்திலிருந்து சேய்மையில் செல்லச் செல்லச் சிறிதாகிக் கடைசியில் குளக்கரையை

அடைந்ததும் இல்லாமல் போய்விடும். அது போல ஒலி அலைகளும் தூரத்தில் செல்லச் செல்லச் சக்தி குறைந்து, கடைசியில் இல்லாமல் போய்விடும். ஆதலாற்றான் அண்மையி லுள்ளவர்களுக்கு ஒலி நன்றாகக் கேட்கிறது. ஆனால் சேய்மையிலுள்ளவர் களுக்கு ஒலி குறைந்தே கேட்கும். அதற்கும் அப்பா லுள்ளவர்கட்குக் கேட்பதே இல்லை.



ஆனால், தற்காலத்தில் பல ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ளவர்கள் பேசுகிற ஒலி யையும் கேட்கும்படியான அதிசயக் கருவி கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இக் கருவிதான் ரேடியோ அல்லது வானொலி என்று கூறப்படுவது.

நாம் அயலூரில் உள்ளவர்களுக்குச் செய்தி அவ சரமாக அனுப்பும் போது, தந்தி மூலம் அனுப்பு கிறோம். தந்தி நிலையத்திலிருந்து ஒலிக் குறிகள், கம்பி வழியாக மற்றொரு தந்தி நிலையத்திற்கு மின்

சாரத்தின் உதவியால் அனுப்பப்படும். இக் கருவி **மோர்ஸ்** என்னும் அமெரிக்க நாட்டு விஞ்ஞானி ஒருவரால் கண்டு பிடிக்கப் பட்டது. அதற்கு ஐம்பது ஆண்டுகளின் பின்னர், ஒருவர் பேசும் குரலையே கம்பியின் மூலமாக, தொலைவிலுள்ள மற்றொருவர் கேட்கக் கூடிய முறையில் அனுப்பும் இன்னொரு கருவி கண்டு பிடிக்கப்பட்டது. அதற்கும் சில ஆண்டுகளின் பின் வேறொரு புதிய கருவி தோன்றிற்று. அது தான் முன் கூறிய ரேடியோ வாகும்.

ரேடியோவின் மூலம், ஆயிரக்கணக்கான மைல் களுக்கு அப்பாலுள்ள ஒருவர் பேசும் பேச்சையும், பாடும் பாட்டையும் கம்பியின் உதவி இல்லாமலே நாம் கேட்டு மகிழலாம். இத்தகைய வியக்கத்தக்க ஏற்பாட்டிற்கு வேண்டிய கருவிகளை நுட்பமாக ஆராய்ந்து அமைத்தவர் கலைஞர் **மார்க்கோனி** என்பவர். அவர் இத்தாலி தேசத்தில் **பொலோனு** என்னும் இடத்தில் 1874- ஆம் ஆண்டில் பிறந்தார். குக்லில்மோ மார்க்கோனி என்பது அவர் முழுப் பெயர்.

இக் கருவி எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது? எவ்வாறு இயங்குகின்றது? என்பனவற்றைப் பற்றி நாம் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். மின்சாரத் தைப் பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள். அது சூரியனிலிருந்து கிடைக்கும் ஒளியும், உஷ்ணமும் போன்ற ஒரு அற்புதமான சக்தி. மின்சாரத்தின் உதவியால், ரேடியோப் பொறியில் பேசும் ஒலி மின்சார அலைகளாக மாற்றப்படுகிறது. இந்த மின் சார அலைகள், இருநூறு அடி உயரமுள்ள கம்பங் களின் உச்சியிலிருந்து எல்லாத் திசைகளிலும் செலுத்தப்படுகின்றன. மின்சார அலைகள் ஒரு செக்கண்டிற்கு 1,86,000-மைல் வேகத்தில் பாய்ந்து

செல்வதால், ஒரு நொடிப் பொழுதில் எல்லா இடங்களிலும் பரப்பப்படுகின்றன. இங்ஙனம் ஒலியைப் பரப்புதலுக்குப் **பிராட்காஸ்டிங்** என்று பெயர். அதை ஒலி பரப்புதல் என்று தமிழிற் கூறலாம். இந்தியாவில் பெரிய நகரங்களில் அரசாங்கத்தாரால் ஒலி பரப்பு நிலையங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

மின்சார ஒலி அலைகளை இழுப்பதற்கும், மீண்டும் ஒலி அலைகளாக மாற்றி நம் காதில் விழுமாறு செய்வதற்கும் உள்ள கருவிக்கு, **ரிசீவிங் செட்** என்று பெயர். இதன் உதவியால் பல்லாயிர மைல்களுக்கு அப்பால் பேசும் பேச்சையும், பாடும் பாட்டையும் நாம் கேட்கலாம்.

வானொலியால் நாம் அடையும் நன்மைகள் பல. உலகில் பல வேறு பகுதிகளில் நடை பெறும் நிகழ்ச்சிகளை உடனுக்குடன் அறியலாம். சிறந்த அறிஞர்களது சொற்பொழிவுகளை நம் இல்லில் இருந்தவாறே கேட்டு அறிவு பெறலாம். வானொலி அவ்வப்போதுள்ள கால நிலையை அறிவிப்பதால் விமானங்களும், விமான நிலையங்களும் பெரு நன்மை அடைகின்றன. நடுக்கடலில் செல்லும் கப்பலில் உள்ளோரும், மற்ற இடங்களில் உள்ள செய்திகளை அறிந்து கொள்ளலாம்; தங்கள் செய்திகளையும் தரைப் பகுதியில் இருப்போருக்கு அறிவிக்கலாம். கிராமங்கள் முன்னேற்ற மடைவதற்கான திட்டங்களை வகுக்கும் அரசியலார், கிராமங்கள் தோறும் இக் கருவியை அமைக்க ஏற்பாடு செய்து வருகின்றனர். கிராம மக்கள் அறிவொளி பெறுவதற்கு, ரேடியோ பெருந்துணை புரியும் என்பது உறுதி.

**அரும்பொருள்:**—விந்தை - ஆச்சரியம். அண்மை - பக்கம் - சேய்மை - தூரம். வியக்கத்தக்க - ஆச்சரியப்படத்தக்க. பொறி - இயந்திரம்.

## வினாக்கள்

1. இருபதாம் நூற்றாண்டில் வாழ்கின்ற மக்கள் பேறு பெற்றவர்கள் ; எப்படி?

2. ஒலி பல திசைகளிலும் பரவுவது எங்ஙனம்?

3. தந்தி மூலம் செய்தி அனுப்புவதைக் கண்டறிந்தவர் யார்?

4. ரேடியோமூலம் எவ்வாறு ஒலி பரப்பப்படுகிறது?

5. ரேடியோவினால் விளையும் நன்மைகள் யாவை?

## பயிற்சி

கிராம மக்கள் முன்னேற்றத்திற்கு ரேடியோ பெருந்துணைபுரியும் - ஒரு கட்டுரை வரைக.

## இலக்கணம்

### பகுபதம் - பகாப்பதம்

பொன்னன் என்ற சொல்லை, பொன் + அன் என்று பிரிக்கலாம். 'பொன்' என்ற சொல்லைப் பிரிக்க முடியாது. இவ்வாறு பகுக்கக் கூடிய பதம் பகுபதம். பகுக்க முடியாத பதம் பகாப்பதம்.

பகுபதத்திற்குப் **பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம்,** என்ற ஆறு உறுப்புக்கள் உண்டு. இவற்றுள் பகுதியும், விகுதியும் எல்லாப் பகுபதங்களிலும் உண்டு. ஒரு பகுபதத்தின் முதலில் நிற்கும் உறுப்பு பகுதி, ஈற்றில் நிற்கும் உறுப்பு விகுதி. பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் வருவது இடைநிலை. வினைச்சொற்களில் இடை நிலை காலம் காட்டும். கூனன் - கூன் + அன் - கூன் பகுதி. அன் விகுதி. உண்டான் - உண் + ட் + ஆன். உண் பகுதி. ஆன் விகுதி. ட் இறந்த கால இடை நிலை.

# 15. ஜஹாங்கீர்

[ஜஹாங்கீர் என்னும் அரசன் ஆக்ரா நகரில் அமர்ந்து ஆட்சி புரிந்து வந்தான். அவன் மனைவி நூர்ஜஹான். அவள் அரசனுக்கு நீதி செலுத்துவதில் உறுதுணையாக இருந்து உதவி புரிந்து வந்தாள். அவள் சகோதரன் ஆஸிப்ஜா, லாகூர் கவர்னராக நியமிக்கப்பட்டிருந்தான். ஒருநாள் ஆக்ரா நகரில் அரண்மனை ஆராய்ச்சி மணி அடிக்கப்பட்டது. ஒரு ஏழையும் அவன் மனைவியும் ஜஹாங்கீர் முன் கொண்டுவந்து நிறுத்தப்பட்டனர்.]



**ஜஹாங்கீர் :—** நீங்கள் யார்? கவலைக் கடலுள் மூழ்கியவர்களைப்போல் காணப்படுகின்றீர்களே! உங்களுக்கு நேர்ந்த கவலை யாது?

**ஏழை :—** அரசர் பெருமானே! நாங்கள் லாகூர் வாசிகள்; கவர்னர் ஆளுகைக்கு உட்பட்டவர்கள்.

**ஜஹாங்கீர்** :— கவர்னர் ஆஸிப்ஜா மிக நல்லவ ராயிற்றே! அவர் ஆட்சியில் உங்களுக்குக் கவலை என்பதே ஏற்படுவதற்கு இடமிராதே! ஆயின்- ஆராய்ச்சி மணியை அடிக்கக் காரணம் என்ன?

**ஏழை** :— [கண்ணீர் வடித்துக்கொண்டே] அரசே! ............அரசே! எங்கள் கவலையைத் தெரிவிக்கவே இங்கு வந்தோம்; அதற்காகவே ஆராய்ச்சி மணியை யும் அடித்தோம். மன்னிக்கவேண்டும், அரசே!

**ஜஹாங்கீர்** :— கவலையா? லாகூர்வாசிகளுக்கா கவலை நேர்ந்தது? புதுமையாகவன்றோ இருக் கின்றது! கூறுங்கள்; அஞ்சாது கூறுங்கள். உங்கள் கவலையை உடனே நீக்குவதே காவலனை எனது முதற் கடமை.

**ஏழை** :— அரசே! எங்களுக்கு நெடுங்காலமாகக் குழந்தை இல்லாதிருந்து, இந்த இறுதிக் காலத்தில் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அந்த மகிழ்ச்சியில் மேளதாளங் கொட்டி ஆனந்தங் கொண்டாடினோம்.

**ஜஹாங்கீர்** :— ஆம்; அது இயற்கைதானே!

**ஏழை** :— அந்தப் பேரொலி கவர்னரவர்க........ ........அரசே!

**ஜஹாங்கீர்** :— அதற்கென்ன? அவரும் உங்கள் ஆனந்தத்தில் பங்குகொள்ள வேண்டியவர்தானே! உங்களோடு கலந்து மகிழ்ந்தாரா?

**ஏழை** :— ஐயோ! அரசே! தங்கள் பரந்த சிந்தையில் படுவதைக் கூறினீர்கள். நடந்ததைக் கூறுகின்றோம். கேளுங்கள். துக்கம் நெஞ்சை அடைக்கிறது. கூறவும் முடியவில்லையே!

**ஜஹாங்கீர் :—** கவலைப்பட்டு ஆவதென்ன? நடந்ததைக் கூறுங்கள்.

**ஏழை :—** நாங்கள் கவர்னரின் துக்கம் கலைவதற்குக் காரணமான செயலைச் செய்துவிட்டோம். உண்மைதான். ஒன்றுமறியாத பச்சிளங் குழந்தை என்ன செய்யும்? அவர் சிறிதும் ஆலோசித்தாரில்லை; எவ்வளவோ மன்றாடினேம்; கேட்டாரில்லை. உயிர்ப் பிச்சை கேட்டு ஊசலாடினேம்; எங்கள் நிலையை உணர்ந்தாரில்லை. எங்கள் குலத்தோன்றலை அவர் வாளுக் கிரையாக்கி விட்டார்; அரசே! அவரையா நீதிமான் என்கின்றீர்கள்? நாங்கள் கதி இழந்து கலங்குகின்றேமே! இறந்த குழந்தையை உயிர்ப்பிக்க யாரால் இயலும்? ஐயோ! எளிதாகக் கொன்றுவிட்டாரே! என்ன செய்வோம்? [கதறி அழுதனர்.]

**ஜஹாங்கீர் :—** அப்படியா! ஆஸிப்ஜாவா அப்படிச் செய்தான்? நம்ப முடியவில்லையே! அதிகாரத் திமிரால் ஆணவங்கொண்டானே? அன்றிப் பதவியைப் பெரிதென எண்ணி அறிவைப் பறிகொடுத்தானே? கொடுமை! கொடுமை! பச்சிளங்குழந்தையின் உயிரைப் பறித்துவிட்டானே பாதகன்! அறத்தை அறுத்தெறிந்து விட்டான்; நீதியை நிலைகுலையச் செய்துவிட்டான். சரி! நாளைக்கு நாம் லாகூர் செல்வோம். இன்று இங்கேயே இருங்கள். சேவகா! இவர்களை அழைத்துச் சென்று உணவுக்கு ஏற்பாடு செய்.

[மறுநாள் ஜஹாங்கீர், ராணி நூர்ஜஹானுடன் அவ்வேழைகளையும் அழைத்துக்கொண்டு லாகூர் சென்றடைந்தான்; ஏழைகளை மறைவாக இருக்கச் செய்தான். ஆஸிப்ஜாவும் சில பிரதானிகளும் உடன் இருந்தனர்.]

**ஜஹாங்கீர் :—** ராணி! அரசாங்க அதிகாரி ஒருவன், தன்னலங் கருதி மக்கள் பெருநலனைப் பலியிடுவது தகுமா?

**ராணி :—** அரசே! மக்கள் நலனுக்காகத் தன்னலத்தைத் தியாகம் செய்யும் தியாக புத்தியுடையவர்களே அரசாங்க அதிகாரிகளாக இருத்தற்கு உரியவர்கள். அம்மாதிரியானவர்களையே நாம் அதிகாரிகளாக அமர்த்தி இருக்கின்றோம். நமது நாட்டைப் பொறுத்தவரையில், தாங்கள் கேட்ட கேள்விக்கே இடமில்லையன்றோ!

**ஜஹாங்கீர் :—** ராணி! நானும் உன்னைப்போலவே எண்ணி இருந்தேன். ஆனல், நமது நாட்டிலும் ஒரு அதிகாரி அப்படி நடந்திருந்தால், அவனுக்கு என்ன தண்டனை கொடுப்பது?

**ராணி :—** அரசே! மக்கள் நலனை அவன் பலியிட்டிருந்தால், நாம் அவனையே பலியிட்டுவிடுதல் வேண்டும். அவ்வளவுதான்; அவன் யாராக இருந்தால்தான் என்ன?

[ஆஸிப்ஜா நடுநடுங்கினன். மற்றவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஏழைகள் சபையில் தோன்றி, தங்களுக்கு நேர்ந்த கதியைக் கண்ணீர் வடித்துக்கொண்டே கூறினர்கள்.]

**ஜஹாங்கீர் :—** ஆஸிப்! அவர்களுக்கு என்ன பதில் கூறுகின்றாய்? தூக்கத்திற் கடிமையான நீ, அவர்களுக்கு எத்தகைய துக்கத்தை உண்டுபண்ணிவிட்டாய்? வேலியே பயிரைமேய ஆரம்பித்துவிட்டதோ?

**ஆஸிப்ஜா :—** (கீழே விழுந்து வணங்கி) அரசே! மன்னிக்கவேண்டும். அறியாது செய்துவிட்டேன். உயிர்ப்பிச்சை அளிக்கவேண்டும்.

**ஜஹாங்கீர் :—** உயிர்ப்பிச்சையா? இளங் குழந்தைக்கு—ஒன்றுமறியாப் பச்சிளங் குழந்தைக்கு உயிர்ப் பிச்சை அளிக்க மறுத்த உனக்கா உயிர்ப் பிச்சை? நன்று, நன்று!

**ராணி :—** அரசே! ஆலோசனை வேண்டாம். இந்தப் பாதகனை இப்பொழுதே உடைவாளுக்கு இரையாக்க வேண்டும். இவனா எனது சகோதரன்? கொலைபாதகன்!

[ஆஸிப்ஜா அரசியின் வாளுக்கிரையானான்.]

## வினாக்கள்

1. ஆஸிப்ஜா யார்?
2. ஏழைகளுக்கு நேர்ந்த கவலை யாது?
3. ஜஹாங்கீர் எத்தகைய அதிகாரிகளை நியமித்திருந்தான்?
4. நூர்ஜஹானின் நீதியை விளக்குக.

## பயிற்சி

இந்த உரையாடலை ஒரு கதையாக மாற்றி எழுதுக.

## இலக்கணம்

இப் பதங்களுக்குப் பகுதி கூறுக:

கண்டான், சென்றான், நின்றான், கொண்டான், மாண்டார், பாடுகிறான்.

நான் தினந்தோறும் உடற் பயிற்சி செய்து வருகிறேன். நீ கொடுத்த புத்தகம் கிழிந்து விட்டது. அவன் பாடிய பாட்டு நன்றாக இருந்தது. இல்லம் சென்று வந்த பிறகு இதைப் பார்க்கிறேன். அவன் சென்று வந்து விட்டானா? இவ்வாக்கியங்களிலிருந்து **வினை முற்றுக்களை** எடுத்தெழுதி, பகுதி, விகுதி, இடை நிலைகளைப் பிரித்துக் காட்டு.

---

## 16. செய்தித் தாள்கள்

[A. சிவசுப்பிரமணிய பிள்ளை, ஆசிரியர்]

நமது இந்திய நாடு அன்னிய ஆட்சியிலிருந்து அண்மையில் தான் விடுதலை அடைந்துள்ளது. ஆதலால், உலகில் உயர்ந்து விளங்குகின்ற பிற நாடுகளோடு சரிநிகர் சமமாக வைத்து எண்ணத் தகுந்த நிலையை இன்னும் அது எய்தவில்லை. அத் தகைய நிலையை இந்தியா பெற்றுத் திகழுமாறு செய்ய வேண்டுவது இளந்தமிழர்களது முதற் கடமை யாகும். இன்று உலகில் உயர்ந்து விளங்குகின்ற நாடுகளைக் கூர்ந்து கவனித்தால், அந் நாடுகளின் முன்னேற்றம் அந் நாட்டு இளைஞர்களின் அறிவு விளக்கத்தைப் பொறுத்தே அமைந்துள்ளது என்பது நன்கு விளங்கும். ஆதலால், நம் நாட்டு இளைஞர்களும் கலாசாலைப் பாடங்களில் கருத்தைச் செலுத்துவதோடு, செய்தித்தாள்களையும் படித்து உலக நிகழ்ச்சிகளை உணர்ந்து, அறிவு விளக்கம் பெற்றுத் திகழ்வது நாட்டிற்கு நன்மை பயப்ப தாகும்.

உலகச் செய்திகளை மக்களுக்கு அன்றாடம் அறிவிப்பன செய்தித்தாள்க ளாகும். அவை அன் றாடம், வாரம், மாதம் எனப் பல கால வரையறையில் வெளியிடப்படுகின்றன. அவை மக்களின் மன இருளை மாற்றி, அவர்களுக்கு எப்பொழுதும் பயன் படக்கூடிய நந்தா விளக்காக விளங்குவன. அவற் றில் சமூகம், அரசியல், கைத்தொழில், வியாபாரம், விஞ்ஞானம், இலக்கியம் முதலிய பொருள்களைப் பற்றிய பல்வேறு செய்திகள் வெளியிடப்படுகின் றன. பண்பட்ட நாடுகளிலிருந்து வெளிவரும் செய்தித்தாள் வாயிலாக, அந்நாடுகளில் நடைபெறும்

அரிய செய்திகளை நாம் அறியலாம். அவை, அத் துறையில் முன்னேறுவதற்கு நமக்கு உதவியளித்து ஊக்குவிக்கின்றன.

மேலும், செய்தித் தாள்கள், நாம் எளிதில் சென்று பார்க்க முடியாத பல இடங்களிலுள்ள மக்களைப் பற்றியும், அவர்தம் பழக்க வழக்கங்களைப் பற்றியும், நாம் அறிந்து கொள்ளப் பேருதவி அளிக்கின்றன; பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலுள்ள நாடுகளில் நடைபெறும் அரசியல் முறைகளையும், போர் முறைகளையும் நாம் நம் இல்லங்களிலிருந்தே எளிதில் அறிந்து கொள்ள ஒரு தூதுவனைப் போல் துணை புரிகின்றன; இன்னும், இந்தியப் பெருமக்களுடையவும் பிற நாட்டு நல்லறிஞர் பலருடையவும் குணாதிசயங்களையும், உழைப்பையும், அவர்கள் நாட்டிற்குச் செய்யும் அரிய பணிகளையும் உரிய பொழுதில் அறிய உதவுகின்றன. கல்வி வளர்ச்சியில் கவனத்தையும், உலக நிகழ்ச்சிகளில் ஊக்கத்தையும் உண்டுபண்ணி, சுதந்திர வேட்கையை வளர்ப்பன செய்தித்தாள்களேயாகும். சுருங்கக் கூறினால், குழந்தைகளை வளர்க்கும் செவிலித் தாயைப் போல், உலக மக்களுக்கு அறிவை ஊட்டி வளர்ப்பவை செய்தித்தாள்களைப் போல் வேறொன்றுமில்லை என்றே கூறலாம்.

பண்டைக்காலத்தில் செய்தித் தாள்கள் பெருவாரியாக வெளிப்படவில்லை. ஏதோ அங்கொன்று இங்கொன்றாகச் சிற்சில செய்தித் தாள்களே உலவி வந்தன. ஆனால், தற்காலத்தில் எண்ணிறந்த செய்தித் தாள்கள் வெளிவந்து, ஒவ்வொரு நாளும் பெரும்பாலோரின் இல்லங்களில் தாமே புகும் தன்மையில் பரந்து வருகின்றன. இவற்றுள் நாட்டு நலங் கருதி உழைக்கும் தாள்கள் ஒரு சிலவே. மற்றவை, விளம்பரங்களின் மூலம் பணம் குவிக்கும்

ஆசையினால் வெளிவருவன. இன்னுஞ் சில, நாட்டில் பல வேறு பிரிவினையை உண்டுபண்ணிக் கலகத்தை விளைவிக்கும் கருத்துக்களை மக்களிடைப் பரப்புவனவா யிருக்கின்றன. வேறு சில, போட்டியை வளர்க்கும் போக்கில் உழைக்கின்றன. அவற்றுள் சில, வாலிபர் உள்ளங்களில் வெறியை ஊட்டி அவர்கள் வாழ்க்கையைப் பாழ்படுத்தும் முறையில் பணி புரிகின்றன. தொடர் கதையும், சிறு கதையும் எழுதி, மக்கள் உள்ளங்களை மாசு படுத்தும் செய்தித் தாள்களும் உண்டு.

இளைஞர்கள், தங்கள் அறிவு வளர்ச்சிக்கு உதவும் தாள்களையே படித்துப் பயனடைதல் வேண்டும். சமயம் வரின் இடித்துரைத்துத் தக்கவழி செலச் செய்யும் நண்பர்களைப் போல் உதவுகின்ற தாள்களே படிக்கத் தகுந்தன. செய்தித் தாள் வெளியிடுவோர், மக்களின் அறிவு வளர்ச்சிக்கும், ஆன்ம வளர்ச்சிக்கும் பயன்படும் செய்திகளையே வெளியிட வேண்டும்.

இள மாணவர்கள், தவறாது ஒவ்வொரு நாளும், செய்தித் தாள்களைப் படித்தறிதல் வேண்டும். அவர்கள் செய்தித் தாள்களைப் படிப்பதோடு, தங்களுக்கு விளங்காதவைகளை மிக்காரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்; அறிஞர்களின் சொற்பொழிவுகளையும், கல்வி சம்பந்தமான நிகழ்ச்சிகளையும் கருத்தூன்றிப் படித்து, தமது குறிப்பேட்டில் பதிந்து கொள்ளுதல் வேண்டும்; இன்னும் விவசாயம், கைத்தொழில், கிராமச் சீர்திருத்தம் முதலியவற்றைப் பற்றி வெளிவரும் அறிஞர்களின் கட்டுரைகளைப் படித்தறிந்து, நடைமுறையில் கைக்கொண்டு நடத்த முயற்சித்தல் வேண்டும்.

இம் முறையில் இளமையிலேயே கருத்தூன்றிச் செய்தித் தாள்களைப் படித்துவந்தால், இளைஞர்கள்

எதிர்கால இந்தியாவில் சிறந்த குடிகளாக விளங்குவார்கள். அத்தகைய குடிமக்களைக் கொண்ட இந்திய நாடு இணையற்ற நாடாக விளங்கும் என்பதற்கு ஐயமில்லை.

**அரும்பொருள்**:— திகழுமாறு - விளங்குமாறு. நந்தா விளக்கு - அணையா விளக்கு. இல்லம் - வீடு. மாசு - குற்றம். செவிலித்தாய் - வளர்ப்புத்தாய். பணி - தொண்டு.

## வினாக்கள்

1. இளந் தமிழர்களது முதற் கடமை யாது?

2. செய்தித்தாள்களில் வெளியிடப்படும் செய்திகள் யாவை?

3. செய்தித்தாள்கள் நமக்கு எவ்வாறெல்லாம் உதவுகின்றன?

4. கேடு செய்யும் செய்தித்தாள்கள் யாவை?

5. படிக்கத் தகுந்த செய்தித்தாள்கள் யாவை?

6. செய்தித்தாள்கள் நடத்தும் ஆசிரியர்கள் எத்தகைய இயல்புடையவர்களாக இருத்தல் வேண்டும்?

7. செய்தித்தாள்களை எம்முறையில் படித்தறிதல் வேண்டும்?

## பயிற்சி

நந்தா விளக்கு, செவிலித்தாய், தூதுவனைப்போல்—வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக.

## இலக்கணம்

எழுதினன் - எழுதின - எழுதி — இம் மூன்று வினைச் சொற்களில் முதலில் உள்ள சொல் முடிந்து நிற்கின்றது. பின்னுள்ள இரண்டு சொற்களும் முடிவுறாது குறைந்து நிற்கின்றன.

முடிந்து நிற்கும் வினைச் சொல்லிற்கு வினை முற்று அல்லது முற்று வினை என்று பெயர். முடியாது நிற்கும் வினைக்கு எச்சம் என்று பெயர். இவ் வெச்சங்களுள், பெயரைக் கொண்டு முடிவது பெயரெச்சம். வினையைக் கொண்டு முடிவது வினை யெச்சம். எழுதின என்பது பையன் அல்லது மனிதன் என்று ஒருபெயரைத் தழுவி நிற்பதால் பெயரெச்சம். எழுதி என்பது சென்றான் அல்லது வந்தான் என்று ஒரு வினையைத் தழுவி நிற்பதால் வினை யெச்சம்.

இப் பாடத்திலிருந்து வினை முற்று, பெயரெச்சம், வினையெச்சம் இவற்றிற்கு ஒவ்வோர் உதாரணம் எடுத்தெழுதுக.

சுட்டும் வினாவும் :

அ, இ, உ இம்மூன்று எழுத்துக்களும் சொல்லுக்கு முதலில் வந்து சுட்டுப் பொருளைத் தந்தால், **சுட்டெழுத்துக்களாம்**. அவன், இவன், உவன். — இவ்வாறு சுட்டெழுத்துக்கள், சொல்லின் அகத்தே வருவது அகச்சுட்டு. அவ்வீடு, இம்மரம்—இவ்வாறு சுட்டெழுத்துக்கள் சொல்லின் வெளியே நிற்பது புறச்சுட்டு எனப்படும்.

எ, யா, ஆ, ஓ, ஏ என்பன கேள்வியை உணர்த்தும் போது **வினாவெழுத்துக்களாம்**. இவற்றுள் எ, யா என்பன சொல்லின் முதலிலும் ஆ, ஓ என்பன சொல்லின் இறுதியிலும், ஏ என்பது இரண்டிடங்களிலும் வரும்.

வினாவும், அகவினா புறவினா என இருவகைப்படும். **எது? யாது?** — அகவினா. எப்பொருள்? யாங்ஙனம்? **யானோ?** — புறவினா.

## 17. ஆராயாது செய்த வினை

[இக் கதையை மவுனமாகப் படியுங்கள். பின் ஒவ்வொரு பாராவுக்கும் தலைப்புக் கொடுத்து, அத் தலைப்புகளின் உதவியால் இக்கதையைச் சுருக்கி 20 வரிக்குள் எழுதிக் காட்டுங்கள்.]

உச்சயினி புரம் என்னும் ஊரில் தேவநாமன் என்னும் பெயர் கொண்ட அந்தணன் ஒருவன் வாழ்ந்துவந்தான். அவன் தன் குலத்திற்குரிய ஓதல், ஓதுவித்தல் முதலிய தொழில்களையே மேற்கொண்டிருந்தான். அவனுக்கு வாய்த்த மனைவி அன்பிலும், அழகிலும் தன்னேரில்லாதவள். அவர்கள் இருவரும் இல்லறமென்னும் நல்லறத்தை நெடுநாள் நடத்திவந்தாரெனினும், புத்திரப் பேறில்லாக் குறை யொன்று அவர்களைப் பெரிதும் வருத்தியது. அக் குறையை ஒருவாறு மறந்து வாழும் பொருட்டு, அவர்கள் ஒரு கீரியைத் தம் மகவாகக் கொண்டு வளர்த்து வந்தனர். முன் காலத்தில் அவர்கள் செய்த நற்றவப் பயனாய், அவர்களுக்கு ஆண் குழந்தை யொன்று பிறந்தது. அதனால் அவர்கள், பிறவிக் குருடன் கண் பெற்றாற் போன்று பேருவகை எய்தினர்.

ஒரு நாள் பார்ப்பனி தண்ணீர் கொண்டு வருவதற்காகக் குட மேந்தி வெளியே சென்றாள். செல்லும் முன் அவள், தனது கணவனை அழைத்து, " தண்ணீர் கொண்டுவர வெளியிற் செல்கின்றேன்; குழந்தை தொட்டிலில் உறங்குகின்றது; கவனித்துக் கொள்ளுங்கள் " என்று கூறிச் சென்றாள். சிறிது நேரத்தில் தேவநாமனை அரண்மனை ஆட்கள் வந்து அவசர காரியமாக அழைத்துச் சென்றனர். அவன் குழந்தைக்குக் கீரியைக் காவலாக வைத்து விட்டுப் புறப்பட்டுச் சென்றான்.

இதன் பின், வீட்டின் பின் புறத்திலிருந்து புறப்பட்ட கரு நாகமொன்று 'உஸ்' என்று இரைந்து கொண்டு தொட்டிலின் மீது ஏறிச் சென்றதை அருகிலிருந்த கீரி கண்டது. அது குழந்தைக்கு நேரவிருந்த ஆபத்தை அறிந்து, பாம்பின் மீது தாவிப்பாய்ந்து அதைக் கண்டங் கண்டமாகக் கடித்தெறிந்தது. பின் அக்கீரி, குருதி தோய்ந்த முகத்துடன் தான் செய்த அரிய சேவையைப் பார்ப்பனிக்கு அறிவிப்பதற்காக வாயிற் படியில் வந்து காத்து நின்றது.






சிறிது நேரத்தில் பார்ப்பனி தண்ணீர்க் குடத்துடன் வந்து சேர்ந்தாள்; வாயிற் படியில் கீரி நிற்கும் கோலத்தைக் கண்டதும் அதிர்ச்சி அடைந்தாள். தன் கணவன் வீட்டில் இல்லை என்பதும் அவளுக்குத் தெரிந்தது. கீரி தன் குழந்தையைக் கடித்துக் கொன்று விட்டது என்று எண்ணி

அலறி ஓலமிட்டாள்! அவளது ஓலமிட்ட குரலைக் கேட்ட அண்டை வீட்டார், ஓடிவந்து கீரியை அடித்துக் கொன்று விட்டனர். அவள் குழந்தையின் சவ உடலைக் காண வேண்டி வீட்டினுள் விரைந்தாள்.

குழந்தை அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது. அதன் அருகில் கருநாக மொன்று கண்டங் கண்டமாக வெட்டுண்டு கிடந்தது. உண்மை விளங்கிற்று. தனது குழந்தையை எமன் வாயிலிருந்து விடுவித்த கீரியை ஆராயாது கொன்றமைக்காக அவள் வருந்தினாள்; வாய் விட்டு அரற்றினாள். யாது பயன்? ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்ட கீரி வருமா? அப்பொழுது வெளியே சென்றிருந்த அந்தணனும் வந்து சேர்ந்தான்; நடந்ததை அறிந்து மனம் பெரிதும் வருந்தினான்.

பிள்ளைகளே! ஆராயாது செய்ததன் விளைவாகப் பார்ப்பனி அடைந்த துன்பத்தை அறிந்து கொண்டீர்களா? இது போன்று உங்கள் வாழ்க்கையில் யாதொன்றும் நடைபெறாதவாறு ஒவ்வொருவரும் காத்துக் கொள்ளுதல் வேண்டும்.

## வினாக்கள்

1. கீரி செய்த அரிய செயல் யாது?
2. இக் கதையால் நீ அறியும் நீதி என்ன?

## இலக்கணம்

ஒரு பொருளின் தொழிலைக் காட்டுவது வினைச் சொல் என்றோம். வினைச் சொற்களின் சிறப்பான தன்மை காலத்தைக் காட்டுவது; காலம் இறந்தகாலம், நிகழ் காலம், எதிர் காலம் என மூன்று வகைப்படும். நடந்து முடிந்தது இறந்தகாலம். நடந்து கொண்டிருப்பது நிகழ்காலம். இனிமேல் நடக்கப் போவது எதிர்காலம்.

## 18. உடற் பயிற்சி

[வித்துவான், ஆ. பிறைசூடும் பெருமாள் பிள்ளை]

"சுவரை வைத்தே சித்திரம் எழுதவேண்டும்" என்பது ஒரு பழமொழி. எதற்கும் அடிப்படையாக இருப்பது உடல். அது கேடுற்றால் உயிர் அல்லல் படும்; அறிவு அழியும். ஆதலால், எல்லாவற்றிற்கும் ஆதாரமான உடலை ஓம்புவது நமது முதற்கடமை யாகும் என்பதை அறிவுறுத்துகிறது அப் பழமொழி. நாம் இறைவன் அளித்த அரிய உடலை நல்ல முறையில் ஓம்பாவிட்டால், அவன் சினத்திற்கு ஆளாக நேரிடும்.

கலாசாலைகளிலும், கல்லூரிகளிலும் கற்கும் மாணவர்களில் பெரும்பாலோர் உடல் நலம் குன்றி இருத்தலைக் காண்கின்றோம். அவர்கள் சினிமாக்களி லும், நாடகங்களிலும் நாட்டமுடையவர்களாய்ப் பல தீய வழக்கங்களைக் கைக்கொண்டு, உடலை வீணைக் கெடுத்துக் கொள்கின்றனர். வருங்காலத்தில் வக்கீல்க ளாகவும், வைத்தியர்களாகவும், அரசியல் அதிகாரிக ளாகவும் வரப்போகின்ற அவர்கள் நிலைமை இரங்கத் தக்கதாக இருக்கின்றது.

எந்நாளும் இளமையோடு இருப்பதற்கு உடற் பயிற்சி இன்றியமையாதது. இப் பயிற்சி ஆடவர்க்கே யன்றிப் பெண்டிர்க்கும் வேண்டியதே. அமெரிக்கா வில் ஆயிரக் கணக்கான பெண்கள், உடற் பயிற்சி யில் ஆடவர்களையும் வென்று விளங்குகின்றார்கள். பெண்கள் இப் பயிற்சியில் பற்றுடையவர்களாக இருந்தால்தான், தங்கள் சந்ததிகளை இவ்வழியில் பயிற்றுவிக்க இயலும்.

முற்காலத்தில் நம் நாட்டினர், உடற் பயிற்சியில் மிகவும் கருத்தைச் செலுத்தி வந்தார்கள். ஒவ்வொரு

ஊரிலும் உடற் பயிற்சிக் கழகங்கள் நிறுவப்பட்டிருந்தன. மற்போர் புரிதல், சிலம்பம் பழகுதல், ஓடுதல், சாடுதல், கஸரத்து, தண்டால், பஸ்கி, பல வகைப் பந்தாட்டம் முதலிய விளையாட்டுக்கள் நடந்து வந்தன. இன்னும், இறைவணக்கத்தோடு உடற் பயிற்சியை இணைத்து மக்கள் பழகி வந்தார்கள். 'சூரிய நமஸ்காரம்' என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். அது ஒரு நல்ல உடற் பயிற்சி முறை அல்லவா? இன்று இவைகளை எல்லாம் நாட்டிற் காண்பது அரிதாகிவிட்டது.







முறையாக உடற் பயிற்சி செய்து வந்தால், அது உடலையும் உள்ளத்தையும் பண்படுத்தி இளமையோடு விளங்கச் செய்யும்; தசைநார்களைக் கட்டுப்படுத்தி அதிகமான கொழுப்பைக் கழித்து உடலை ஒழுங்குபட நிறுத்தும்; எக்காரியத்தையும் எளிதில் செய்யும் ஆற்றல், தெளிந்த மனம், நினைவாற்றல் இவற்றை நல்கும். சுருங்கக் கூறினால், உடற்பயிற்சி, மருந்தாகவும், மருந்தளிக்கும் மருத்துவனாகவும் நின்று, உடலை முதுமையினின்றும் நோயினின்றும் காக்கிறது என்னலாம்.

ஆதலால், இளமாணவர்களே! இளமை முதற் கொண்டே ஒழுங்கான முறையில் உடற் பயிற்சி செய்து உடலைப் போற்றி வாழுங்கள். நீங்கள் உடற் பயிற்சி செய்யுமிடம் சுத்தமானதாயும், காற்ரோட்ட முள்ளதாயும், சூரிய வெளிச்சம் புகும் வசதியுள்ளதாயும் இருத்தல் வேண்டும். முறையாக உடற் பயிற்சி செய்து முதுமைப் பருவத்திலும் உடல் உரம் பெற்று விளங்கிய ஒரு பெரியாரது அனுபவ மொழிகள், உங்களுக்கு நல்ல படிப்பினையாக இருக்கும் என்று கீழே தருகிறேன். படித்துப் பாருங்கள்.

ஸர். சுரேந்திரநாத் பானர்ஜி என்பவர், இந்திய நாட்டுப் பெரியார்களில் ஒருவர். அவர் தமது இளமை நினைவுகளைப் பற்றிப் பின் வருமாறு மொழிகிருர்: "என் உடல் நலத்திற்கும் நீண்ட ஆயுளுக்கும் காரணம் இன்னதென்று தெரிவிக்குமாறு பல நண்பர்கள் என்னைக் கேட்கிருர்கள். இப்போது எனக்கு வயது எழுபத்தைந்துக்கு மேலாகிவிட்டது. அப்படி இருந்தும், நான் நோயற்ற வாழ்வும், தெளிந்த அறிவும் உடையவனுக இருக்கிறேன். அதனுல், எனது அனுபவம் உபயோக முள்ளதாய் இருக்கும் என்று அவர்கள் கருதுகின்ருர்கள். நான் உடல் நலத்தைக் காப்பாற்றுவதே முதற் கடமை என்று கொண்டு வாழ்ந்தேன். இயந்திரம் வேலை செய்வதற்கு முன், அது ஒழுங்கான முறையில் அமைய வேண்டும். நம் தேசத்தில் பல பெரியார்கள் அகால மரணம் அடைந்திருக்கின்ருர்கள். சுகத்தைக் காப்பாற்றுவதற்கு முதற் காரணமாக இருப்பது, சரியான காலங்களில் தவருமல் செய்யப்படும் உடற் பயிற்சியே என்று நான் எண்ணுகிறேன். என் வாழ் நாட்கள் முழுவதும், இப்போதுங்கூட, நான் காலையில் அரைமணி நேரமும், மாலையில் முக்கால்

மணிநேரமும் உடற் பயிற்சி செய்வதுண்டு. வேலை மிகுதியால் சில நாட்களில், மாலைப் பயிற்சி தடைப்படுவது உண்டு. காலைப் பயிற்சி ஒருபோதும் நிற்பதில்லை. நான் இளமையில் 'டம்பல்ஸ், கர்லா' முதலியனவும் பயில்வ துண்டு.

மாணவர்களே! இந்தப் பெரியாரின் மணி மொழியை மனத்திற் கொண்டு, அந் நெறி நின்று ஒழுகி மாண்புற்று விளங்குவீர்களாக.

**அரும் பொருள்**:—அல்லல் - துன்பம். ஓம்புதல் - பாது காத்தல். தசை - ஊன். ஆற்றல் - வலிமை.

## வினக்கள்

1. 'சுவரை வைத்தே சித்திரம் எழுத வேண்டும்'— இப் பழமொழியின் கருத்துயாது?

2. உடற் பயிற்சி வகைகளில் நான்கு வகை கூறுக.

3. உடற் பயிற்சி செய்யுமிடம் எவ்வாறு இருத்தல் வேண்டும்?

4. முன்னாளில் உடற் பயிற்சி எவ்வாறு நடந்து வந்தது?

5. உடற் பயிற்சியால் விளையும் நன்மைகள் யாவை?

6. சுரேந்திர நாதரின் அனுபவ மொழிகளால் நாம் அறிவ தென்ன?

## பயிற்சி

பள்ளிக்கூட விளையாட்டுக்களில் ஒன்றைப் பற்றி ஒரு கட்டுரை எழுது.

## இலக்கணம்

**சொற்றொடர் - வாக்கியம்:—**

சொற்கள் ஒன்றோடொன்று சேர்ந்து வந்தால் சொற்றொடர் என்று பெயர் பெறும்.

'வண்டிக்காரன் கூலி', 'இராமன் காட்டிற்குச் சென்றான்.'—இவ்விரண்டும் சொற்றொடர்களே. இவற்றுள் முதலில் உள்ளது முடிவு பெறவில்லை. இரண்டாவது உள்ளது முடிவு பெற்றிருக்கிறது. முடிவு பெறாமல் வரும் சொற்றொடருக்கு எச்சச் சொற்றொடர் என்று பெயர். பொருள் முடிவு பெற்று வரும் சொற்றொடருக்கு முற்றுச் சொற்றொடர் என்று பெயர். இம் முற்றுச் சொற்றொடரை வாக்கியம் என்றும் கூறுவர்.

ஒரு வாக்கியத்தில் பொருள் முடிந்து நிற்கும் இடம், பயனிலை என்று கூறப்படும். வினையைச் செய்பவன் எழுவாய். எழுவாயும் பயனிலையும் வாக்கியத்தின் முக்கிய உறுப்புக்கள்.

கண்ணன் வந்தான். இது ஒரு வாக்கியம். கண்ணன் எழுவாய். வந்தான் பயனிலை.

சில வாக்கியங்களில் செயப்படு பொருள் வருவதுண்டு. பயனிலைக்கு முன் 'யார்?' அல்லது 'எது?' என்று வினவினால் வரும் விடை எழுவாய். 'யாரை?' அல்லது 'எதை?' என்று வினவினால் வரும் விடை, செயப்படு பொருள்.

---

## படப் பயிற்சி









பின்வரும் வினாக்களைக்கொண்டு மேலேயுள்ள படங்களைப் பார்த்து ஒரு கட்டுரை வரைக:

1. காட்டில் ஒரு வேடன் எதைப் பார்க்கிறான்?
2. வேடன் அதை என்ன செய்கிறான்?
3. வேடனுக்கு நேர்ந்தது என்ன?
4. குரங்கு இளநீர் பறிப்பது எதற்காக?

## 19. கடிதம் வரைதல்

மக்கள் எப்பொழுதும் சேர்ந்து வாழும் இயல்பினர். நாம் நமது ஊரில் பெற்றோர்களுடனும், உறவினர்களுடனும், நண்பர்களுடனும் கூடி வாழ்கின்றோம். அவர்களிடம் நமது எண்ணங்களை உரையாடல் மூலம் தெரிவிக்கின்றோம். ஆனல், அவர்களில் பலர் தூர இடங்களில் சென்று தங்கவும் நேருமல்லவா? அப்பொழுது நாம் நமது எண்ணங்களை அவர்களுக்கு எப்படித் தெரிவிப்பது? விஞ்ஞானிகள் கண்டறிந்த தந்தி, ரேடியோ முதலியவைகள் அதற்குப் பயன்படுகின்றன. என்றாலும் அவற்றின் மூலம் செய்தி அனுப்புவது எல்லோருக்கும் இயலுவதில்லை; நகரங்களில் வசிப்பவர்களுக்கும், செல்வர்களுக்குமே இயல்வதாகும். கடிதம் மூலம் செய்தி தெரிவிப்பது எல்லோருக்கும் எளிதாகும். அதற்கு அரசியலார் பல வசதிகள் செய்திருக்கிறார்கள்.

நாம் வெளிப்படையாகவும், சுருக்கமாகவும் அறிவிக்க வேண்டிய செய்திகளைக் கார்டுகளில் எழுதி அனுப்பலாம். விரிவாகவும், மறைவாகவும் எழுத வேண்டிய செய்தியாக இருந்தால் கவரில் எழுதி அனுப்ப வேண்டும். கார்டு, கவர்களை அண்மையிலுள்ள தபால் நிலையங்களில் அவற்றிற்குரிய விலையைக் கொடுத்துப் பெற்றுக் கொள்ளலாம்.

கடிதம் எழுதுவதற்குமுன் கடிதத்தில் எழுத வேண்டிய கருத்துக்களை மனதில் ஒழுங்கு படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும். நம் முன்னிலையில் இருக்கும் ஒருவரிடம் பேசுவது போன்று நம் எண்ணங்களை முறையாக எழுதவேண்டும். பிறர் படித்தறியும்படி தெளிவாக எழுதவேண்டும். இலக்கணப் பிழை ஏற்படுதல் கூடாது. சிறிய வாக்கியங்களாக எழுதுவது நலம்.

கடிதத்தில், எழுதுவோரின் விலாசம், தேதி எழுதும்போதுள்ள இடம், வணக்கமுறை, விஷயம், முடித்தெழுதும் முறை, கடிதம் போய்ச் சேர வேண்டிய விலாசம் ஆகிய ஒவ்வொரு பகுதியையும் முறையாக அமைத்தல் வேண்டும்.

**மாதிரிக் கடிதங்கள்**

## 1. மகன் தந்தைக்கு எழுதுவது

நாகர் கோவில்
5—9—51

அன்புமிக்க தந்தையார் அவர்களுக்கு,

பலமுறை வணக்கம். திரு வருளால் இங்கு எல்லோரும் நலம்; தங்கள் நலமறிய அவா.

நெடு நாளாகத் தங்கள் கடிதங் காணாது வருந்துகிறேன். நான் கலாசாலைக்குச் சென்று ஒழுங்காகப் பாடங்களைப் படித்து வருகிறேன்; ஆசிரியர்களுடைய நன்மதிப்பைப் பெற்றிருக்கிறேன்; வகுப்பில் முதல்மாணவனாகத் தேற முயன்று வருகிறேன்.

எனக்கு இம் மாதம் பள்ளிக்கூடச் சம்பளம் செலுத்த வேண்டிய நாள் நெருங்குகிறது. மேலும், சில புத்தகங்களும் வாங்க வேண்டும். ஆதலால், உடனே ரூபாய் இருபது (ரூ. 20) அனுப்பியருளும்படி வேண்டுகிறேன்.

இங்ஙனம்
தங்கள் பணிவுள்ள புதல்வன்,
**கு. க. கண்ணன்.**

**விலாசம்:**
உயர் திரு,
**ஈ. நடராஜன் அவர்கள்,**
54. வடக்குச் சித்திரை வீதி,
**மதுரை.**

## 2. தந்தை மகனுக்கு எழுதுவது

மதுரை
15—9—51.

அன்பின் மிக்க புதல்வன் கண்ணனுக்கு. இங்கு அனைவரும நலம். விரும்புவது மஃதே. உனது கடிதம் கண்டேன். வகுப்பில் முதல் மாணவனாகத் தேற நீ முயன்று வருவதை அறிந்து மகிழ்ச்சி யடைகிறேன்; உனது முயற்சி வெற்றி பெற இறைவன் இன்னருளை வழுத்துகிறேன்.

நீ எழுதியவாறு ரூபாய் இருபது மணியாடர் மூலம் அனுப்பி இருக்கிறேன். பெற்றுக்கொள்.

இங்ஙனம்
உன் அன்புள்ள தந்தை,
ஈ. நடராஜன்.

விலாசம்:

கு. ந. கண்ணன்,
4, பிள்ளையார் கோவில் தெரு, வடிவீசுவரம்,
நாகர் கோயில்.

---

## 3. மாணக்கன் ஆசிரியருக்கு எழுதுவது

பாளையங்கோட்டை.
5—10—51

மாண்பு மிக்க ஆசிரியர் அவர்களுக்கு,

என் சகோதரனது திருமணம் 7—10—51-ல் மதுரையில் வைத்து நடைபெறுகிறது. அதற்கு நான் போகவேண்டி இருப்பதால், நாளைமுதல் நான்கு நாட்கள், எனக்கு விடுமுறை தந்து உதவ வேண்டுகிறேன்.

இங்ஙனம்
தங்கள் உண்மையுள்ள மாணவன்,
இ. ரா. செல்லம்.

விலாசம் :

உயர் திரு, பாலசுந்தரம் பிள்ளை அவர்கள்,
6-ம் வகுப்பு ஆசிரியர், ஆரம்ப உயர்தரப் பாடசாலை,
பாளையங்கோட்டை.

---

## 4. வியாபாரிக்கு எழுதுவது

27. கீழரதவீதி, இராமநாதபுரம்.
25—10—51

அன்புமிக்க ஐயா,

தங்களால் வெளியிடப்பட்டுள்ள கீழ்க்கண்ட புத்தகங்களை வி. பி. தபால்மூலம் அனுப்பி வைக்குமாறு வேண்டுகிறேன்.

மதுரைத் தமிழ்ப் பேரகராதி .... 1
ஆங்கில ஆசான் .... 1
ஹிந்தி தமிழ் ஆசான் .... 1

இங்ஙனம்
தங்கள் உண்மையுள்ள
சிவ. சோமசுந்தரம் பிள்ளை

விலாசம்

திரு. இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன் அவர்கள்
பப்ளிஷர் 'கோபால் மஹால்'
வடக்குச் சித்திரை வீதி,
மதுரை.

---

## வினாக்கள்

1. தூர இடங்களில் இருப்பவர்களுக்கு எவ்வாறெல்லாம் செய்தி அறிவிக்கலாம்?

2. கடிதம் எழுதும்போது கவனிக்க வேண்டுவன யாவை?

3. கடிதத்தில் அடங்கிய ஏழு பகுதிகள் எவை?

4. மகன் தந்தைக்கெழுதும் கடிதத்தின் தொடக்கமும் முடிவும் எவ்வாறிருக்க வேண்டும்?

## பயிற்சி

உன் கலாசாலையில் நடந்த ஆண்டுவிழாவைப் பற்றி, உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

## இலக்கணம்

பொன்மணி, மக்கட்பேறு—இச் சொற்றொடர்கள் பொன் + மணி என்றும், மக்கள் + பேறு என்றும் பிரிவுறும். இவற்றுள் முதலில் நிற்கும் சொல்லுக்கு நிலைமொழி என்றும், பின்னால் வந்து சேரும் சொல்லுக்கு வருமொழி என்றும் பெயர்.

நிலைமொழியும் வருமொழியும் ஒன்று பட்டுச்சேர்வது புணர்ச்சி எனப்படும். அது இயல்புப் புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி என இருவகைப்படும். பொன்மணி என்பது இயல்புப் புணர்ச்சி. மக்கட்பேறு என்பது விகாரப் புணர்ச்சி.

இயல்புப் புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி இவற்றின் வேறுபாட்டை உன் பாடத்திலிருந்து உதாரணம் கூறி விளக்குக.

பிரித்தெழுதி இன்ன புணர்ச்சி என்றும் கூறுக:

தந்தைக்கெழுதும். இயல்புப்புணர்ச்சி. ஏழுபகுதிகள். மட்குடம்.

---

## 20. நல்ல தீர்ப்பு

[சி. திருநாவுக்கரசு, சென்னை.]

### காட்சி 1

**நாடக பாத்திரங்கள்:**—கிருஷ்ணதேவ ராயர், மகா ராணியார்.

**இடம்:**—விஜய நகர அரண்மனை.

**மகாராணி:**—அரசே! தங்களிடம் முக்கியமான ஒரு வேண்டுகோள் விடுக்கப் போகிறேன். தாங்கள் அதனைத் தவறாது நிறைவேற்றித் தருதல் வேண்டும்.

**கிருஷ்ணதேவ ராயர்:**—ராணீ! அதற்கென்ன தடை? இதுவரையிலும் என்றாவது உனது வேண்டுதலுக்கு மறுப்புக் கூறினதுண்டா? இன்று மட்டும் என்ன புதுமாதிரியாகப் பேசுகிறாயே!

**ராணி:**—இல்லை, அரசே!

**ராயர்:**—அப்படியானால், நிறைவேற்ற முடியாத ஒரு வேண்டுகோளை விடுக்கப் போகிறாயா?

**ராணி:**—இல்லை; இல்லை.

**ராயர்:**—என்ன! எத்தனை தரம் இல்லை, இல்லை என்று கூறிக்கொண் டிருக்கிறாய்? காரியத்தை விட்டுச் சொல்.

**ராணி:**—எனது தந்தையார் அனுப்பி வைத்த சுப்பா ராவ் இருக்கிறாரே........!

**ராயர்:**—ஆம், இருக்கிறார்; அவருக்கென்ன?

**ராணி:**—அவரையே தாங்கள் முதல் அமைச்சராக வைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

**ராயர்** :—என்ன! சுப்பாராவுக்கு முதலமைச்சர் பதவியா? நன்று! நன்று!

**ராணி** :—எனது அன்பான வேண்டுகோளை என்று மில்லாதபடி ஏளனம் செய்கின்ற முறையில் பேசுகின்றீர்களே!

**ராயர்** :—இல்லை, இல்லை; தவறுதலாக எண்ணி விடாதே! நமது அப்பாஜி நீண்ட காலமாக முதலமைச்சர் பதவி வகித்து வருகிறார். அவரை அப் பதவியிலிருந்து திடீரென்று நீக்குவது பொருந்துமா? குடிகள்தான் என்ன நினைப்பார்கள்?

**ராணி** :—அதெல்லாம் எனக்குத் தெரியாது; எங்கள் நாட்டவருக்கே மந்திரிப் பதவி கொடுத்தாக வேண்டும். நீங்கள் சுப்பாராவை முதல் மந்திரி யாக்கா விட்டால், அது என் தந்தையாரையே தாழ்வுபடுத்திய தாகும்.

**ராயர்** :—நீ அன்பு பற்றிப் பேசுகின்றாய். (சிறிது ஆலோசித்து) சுப்பாராவுக்கு மந்திரி பதவி வகிக்கக் கூடிய திறமை இருக்கின்றதா? அதைக் கவனியாமல் அவரை அமைச்சராக நியமித்தால், நாட்டிற்குக் கேடு; நமக்கும் அழிவு; தான் சாக மருந்து சாப்பிடலாமா?

**ராணி** :—அப்படி யொன்றும் நேராது. அரசே! ராவ்ஜி மிகவும் நல்லவர்; திறமை உள்ளவர். அப்படியே திறமை இல்லாவிட்டால்தான் என்ன? பதவி வந்தால் அதற்கேற்ற திறமையும் தானகவே வந்துவிடப் போகிறது.

**ராயர்** :—முதலமைச்சர் பதவி என்றால் அவ் வளவு சுலபமாய் நினைத்து விட்டாயா?

**"வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ
ஐந்துடன் மாண்ட தமைச்சு"**

என்ற வள்ளுவர் வாக்கு உன் நினைவில் இல்லையா? அமைச்சர்க் குரிய ஐவகைக் குணங்களும் அமையப் பெற்றவர் இவ் வுலகில் அப்பாஜியைத் தவிர வேறு யாருளர்? இவ் விஷயத்தில் நான் உன் எண்ணத்தை நிறைவேற்ற முடியாது.

**ராணி** :—அரசே! அப்பாஜியை ஒரேயடியாகப் புகழ்கின்றீர்களே! உங்கள் அப்பாஜிக்கு எங்கள் ராவ்ஜி எந்த விதத்திலும் குறைந்தவர் அல்லர்.

**ராயர்** : நான் இதை நம்பவே முடியாது.

**ராணி** : உங்களுக்கு ஏன் வீண் சந்தேகம்? ஒரு தேர்தல் நடத்தி, யார் திறமைசாலி என்று தீர்மானித்து விட்டால் போகிறது.

**ராயர்** : மிகவும் நல்ல யோசனை. இதை நான் வரவேற்கிறேன். அப்பாஜிதான் நிச்சயமாய் வெற்றி பெறுவார்.

**ராணி** :—அரசே? தங்களுக்கு அந்த எண்ணம் வேண்டாம். எங்கள் ராவ்ஜிக்குத் தான் வெற்றி.

**ராயர்** :—ஏன் சந்தேகம்? பார்த்து விடுவோம்.

## காட்சி 2.

[மறுநாள்]

**நாடக பாத்திரங்கள்** :—ராயர், ராணி, ராவ்ஜி, அப்பாஜி.

**இடம்** :—அரண்மனை

**ராயர்** :—நேற்றிரவு நான் மஞ்சத்தில் படுத்திருக்கும் போது, நடுநிசியில் படுக்கை அறைக்குள் ஒரு திருடன் வந்தான்.

**ராவ்ஜி :**—அரசே! தங்கள் படுக்கை அறையிலா திருடன்........!

**ராயர் :**—ஆமாம்! என் படுக்கை யறையில்தான்! அவன் வந்து என் கட்டிலின் மீது ஏறி, என் மார்பில் உட்கார்ந்து கொண்டான்.

**ராவ்ஜி :**—ஐயையோ! என்ன கொடுமை!

**ராயர் :**—அப்புறம் தன் கையால் என் கழுத்தில் ஒரு குத்து விட்டான்; தன் கால்களால் மிதித்தான்; என் முகத்தில் காறியும் உமிழ்ந்தான்.

**ராவ்ஜி :**—அந்தத் திருடனை........

**ராயர் :**—பிடித்து விட்டேன். அகப்பட்டுக் கொண்டான்.

**ராவ்ஜி :**—தங்களிடம் அவன் தப்பித்துக் கொள்ள முடியுமா! அரியிடம் நரி அகப்படாது போகுமா? ஆனல், அரசே! அவனுக்குச் சரியான தண்டனை கொடுக்க வேண்டும்.

**ராயர் :**—அதைத்தான் தங்களிடம் ஆலோசிப்ப தற்கு அழைத்தேன். என்ன தண்டனை கொடுக் கலாம் என்று சொல்லுங்கள். ராவ்ஜி! நன்ருக ஆலோசித்துச் சொல்லுங்கள்.

**ராவ்ஜி :**—மகாராஜாவின் படுக்கை அறையுள் நுழைந்து, தங்களைக் குத்தியும், உதைத்தும், துப்பியும் அவமதித்த அந்தப் பக்காத் திருடனுக்கு மிகவும் கொடிய தண்டனைதான் கொடுக்க வேண்டும் தங்களை உதைத்த அவன் கால்களை வெட்டிவிட வேண்டும். குத்திய கைகளை முறித்துவிட வேண்டும். காறி உமிழ்ந்த நாக்கினை நறுக்கிவிட வேண்டும்.

**ராயர் :**—சபாஷ்! ராணி! உங்கள் ராவ்ஜி கொடுக் கும் தண்டனையைப் பார்த்துக்கொண்டாயா? இனி

அப்பாஜி விதிக்கும் தண்டனையைப் பார்ப்போம். யார் அங்கே? அப்பாஜியை அழைத்துவா.

[அப்பாஜி வருதல்; ராயர், அவரிடமும் இரவு நடந்த நிகழ்ச்சியை ராவ்ஜியிடம் கூறியதுபோல் அப்படியே கூறித் திருடனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று கேட்கிறார்.]

**அப்பாஜி** :—மகாராஜா! தங்கள் மார்பின்மீது ஏறி உட்கார்ந்து அட்டகாசம் செய்து, தங்களை உதைத்த காலுக்கு இரத்தினக் கொலுசும், குத்திய கைகளுக்குத் தங்க வளைகளும், துப்பிய வாய்க்கு ஒரு கோடி முத்தமும் தண்டனையாகக் கொடுங்கள்.

**ராவ்ஜி** :—என்ன அப்பாஜி! உமது புத்தி மழுங்கி விட்டதா? மகாராஜாவை அவமதித்த திருடனுக்கா இரத்தினமும், தங்கமும் பரிசுகள்?

**ராயர்** :—ராணீ! இப்போது நீயே சொல். திருடனுக்கு, அப்பாஜி, ராவ்ஜி இவர்களில் யார் சொன்ன தண்டனையைக் கொடுக்கப் போகிறாய்?

**ராணி** :—(கோபத்துடன்) ராவ்ஜி, உமது தண்டனையைத் திருடனுக்குக் கொடுப்பதானால், விஜய நகர சாம்ராஜ்யத்தின் ஒரே வாரிசை இழக்க வேண்டியது தான். நீரும், உமது புத்தியும்! மகாராஜா! என்னை மன்னியுங்கள். இந்த மகா மந்த புத்திக்கார ராவ்ஜிக்கா, முதல் மந்திரி பதவி கொடுக்கச் சிபார்சு செய்தேன்? நன்று நன்று! என் அறியாமை! பெண் புத்தி பின்புத்தி தான் போலும்!

(அப்பாஜியைப் பார்த்து)

அப்பாஜி! நம் இளவரசுக் கண்மணிதான் இரவில் புகுந்த திருடன் என எப்படி யூகித்து அறிந்தீர்கள்?

**அப்பாஜி** :—மகாராணீ! நடுநிசியில் மகாராஜா வின் படுக்கை யறைக்கு ஏன் திருடன் வரப்போ கிறான்? திருட வந்தவன் கஜானாவை நோக்கி யல்லவா போவான்.? மேலும், மன்னரின் மார்பில் அரசிளங் குமரனை யன்றி வேறு யாரால் மிதிக்க முடியும்? குழந்தை தான், தன் மெல்லிய காலால் உதைத்தும், பூங்கரத்தால் குத்தியும், எச்சில் ஒழுகக் கொஞ்சியும் இருக்கவேண்டும்.

**ராணி** :— அப்பாஜி! உமது மதியூகத்தை எவ் வாறு புகழ்வது என்றே தெரியவில்லை.

**ராயர்** :— இல்லாமலா இவ்வளவு காலம், முதல் மந்திரிப் பதவி வகித்து வருகிறார்? அப்பாஜி, அப் பாஜியே தான்.

**அரும் பொருள்** :—ஏளனம் - பரிகாசம். அமைச்சர் - மந் திரி. நிசி-இரவு. அரி - சிங்கம். வன்கண் - தொழில் செய்யும் போது அசை வின்மை. ஆள்வினை-முயற்சி.

### வினாக்கள்

1. மகாராணியார் கிருஷ்ணதேவ ராயரிடம் வேண்டியதென்ன?

2. ராணி சுப்பாராவிடம் அன்பு காட்டியது ஏன்?

3. தான் சாக மருந்து சாப்பிடலாமா?—சந்தர்ப்பம் கூறுக.

4. அமைச்சர்க்குரிய ஐந்து குணங்கள் யாவை?

5. மன்னன் அப்பாஜியின் மதி நுட்பத்தை எவ் வாறு நிரூபித்துக் காட்டினான்?

### பயிற்சி

இந் நாடகத்தைக் கதை ரூபத்தில் மாற்றி எழுதுக.

# செய்யுட் குறிப்புரை

## செய்யுள்

## I. கடவுள் வாழ்த்து

### 1. தேவாரம்

திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், சுந்தர மூர்த்தி சுவாமிகள் என்னும் சமயகுரவர் மூவரால் சிவபெருமானைப் பற்றித் தலங்கள் தோறும் பாடப் பெற்ற பாடல்களின் தொகுதிக்குத் தேவாரம் என்று பெயர். சிவபெருமானாகிய தெய்வத்திற்கு அன்போடு சாத்தப்படும் பூமாலை போன்ற பாமாலை என்பது பொருள்.

இச் செய்யுள் திருநாவுக்கரசு சுவாமிகளால் பாடப் பெற்றது.

பண் - இராகம், பாட்டு. மொழியாள் - பேச்சை உடையவள். உமை - பார்வதி. பங்கரோ - பங்கில் உடையவரே. மண்ணினோர் - உலகத்தோர். மறைக்காடு - வேதாரண்யம் என்ற க்ஷேத்திரம். திண்ணம் - தெளிவு.

பல வாண்டுகளாக அடைத்துக் கிடந்த கதவு திறக்கப் படும்படி, அப்பர் இப் பதிகத்தைப் பாடினார்.

### 2. பெரிய திருமொழி

பெருமையுடைய திருமொழி என்பது பொருள். திருமொழி என்பது மேன்மையான சொற்களாலாகிய நூலைக் குறிக்கும். இது நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் அடங்கியது. பன்னிரண்டு ஆழ்வார்கள் பாடிய பிரபந்தங்களில் இது பெரியது ஆகையால், பெரிய திருமொழி என்று பெயர் பெற்றது. இதனை இயற்றியவர் திருமங்கையாழ்வார்.

நின்றாய் - நின்றவனே. மன்னி - பொருந்தி. நந்தாத - அழியாத. எந்தாய் - எமது தந்தையே.

# II. நீதிப் பகுதி

## 1. திருக்குறள்

சிறந்த குறள் வெண்பாக்களினாலாகிய நூல் என்பது இதன் பொருள். இதனை இயற்றியவர் திருவள்ளுவர். இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று.

1. கல்லாதவர் கண்கள் புண்கள் என்பதாம்.

2. எண்ணி - ஆலோசித்து. கருமம் - காரியம். துணிந்தபின் - தொடங்கிய பின்பு. இழுக்கு - குற்றம்.

3. வாழ்வார் - தமக்கு உரியராய் வாழ்கின்றவர்.

4. அருந்தியது - உண்டது. அற்றது - ஜீரணமான படியை. யாக்கை - உடம்பு.

## 2. நல் வழி

இது ஔவையாரால் பாடப்பட்ட நூல்.

1. புதைத்துவைத்து - மண்ணில் புதைத்துவைத்து. மானிடரே - மனிதர்களே. கூடு - உடம்பு. ஆவி - உயிர்.

2. மா நிலத்தீர் - பெரிய பூமியில் உள்ளவர்களே. சார்பு ஆக - துணையாக. உள் நீர்மை - உள்ளத்தின் தன்மை வீறும் - வளரும்.

3. இல்லானை - கையில் பொருள் இல்லாதவனை. இல்லாள் - மனைவி.

4. தேவர் - திருவள்ளுவ நாயனார். திரு நான் மறை முடிவு - சிறந்த நான்கு வேதங்களின் முடிவாகிய உப நிடதங்கள். மூவர் - அப்பர் சுந்தரர் சம்பந்தர். முனி - வியாச முனிவர்.

## 3. நன்னெறி

மக்கள் ஒழுக வேண்டிய நல்ல வழிகளை உணர்த்தும் நூல் என்பது இதன் பொருள். இதன் ஆசிரியர் சிவப் பிரகாச சுவாமிகள்.

1. இருநீர் வியன் உலகம் - பெரிய நீரை உடைய கடல் சூழ்ந்த பெரிய உலகத்தில் உள்ளவர்கள். வன்சொல் - கடுஞ்சொல். அதிர்வளையாய் - ஒலிக்கின்ற வளையல்களை அணிந்த பெண்ணே! அழற்கதிர் - நெருப்பு மயமான கிரணங்களையுடைய சூரியன். தண் என் கதிர் - குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரன்.

2. உள்ளம் - மனம். சினம் - கோபம். தடங்கரை - விசாலமான கரை. விளம்பு - சொல். கவர்ந்து - தன் வசப்படுத்தி.

3. அது பெறார் - அந்த அறிவைப் பெறாதவர். தம்பால் - தம்மிடத்து. செறி பழியை - சேரும் பழிக்கு. பிறை நுதால் - பிறைச் சந்திரன் போன்ற நெற்றியை உடைய பெண்ணே. வண்ணம் - அழகு. வாள் விழி - ஒளி பொருந்திய கண் மறை - ஒளி மறைந்த.

4. காமுறுவர்-விரும்புவர். மேன் மக்கள் - மேலோர். மற்றையர் - கீழோர். வேல் வேண்டும் - வேல் போன்ற.

## 4. நீதிநெறி விளக்கம்

நீதியாகிய வழியை விளக்கிக் காட்டும் விளக்குப் போன்ற நூல் என்பது இதன் பொருள். இதன் ஆசிரியர் குமரகுருபரர். இவர் கி. பி. 17-ஆம் நூற்றாண்டில் மதுரையை ஆண்ட திருமலை நாயக்கரது வேண்டுகோளின் படி நீதிநெறி விளக்கம் பாடினார் என்பர்.

மெய் - உடம்பு. செவ்வி-காலம். பயக்கும்-கொடுக்கும் இசை - புகழ்

## 5. நீதிவெண்பா

மக்கள் ஒழுக வேண்டிய நீதிகளை எடுத்துரைக்கும் வெண்பாக்களினால் ஆகிய நூல் என்பது இதன் பொருள். ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

1. சிற்றுணர்வோர் - அற்ப புத்தியுள்ளவர். சிலுசிலுப்பர்-படபடத்துப் பேசுவர். வெற்றிபெறும்-மேன்மை

அடைகின்ற. ஆன்று - கல்வி கேள்விகளால் நிறைந்து. முற்றுணர்வோர் - பேரறிவாளர்.

2- குருவின் பன்னி - ஆசிரியரின் மனைவி. அரசன் பயில் தேவி - அரசனது மனைவி.

ஏமம் - இன்பமான. சேமம் செய்வாரும் - தடுப் பாரும். சேமம் - காவல்.

4. இடுக்கண் - துன்பம். நூலின் நெறி உற்றோர் - நூல் வழியே நடப்பவர்கள்.

# III. புதிய பகுதி

## 1. இளந் தமிழருக்கு

இதன் ஆசிரியர், நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அவர்கள்.

தரணி - பூமி. இணை இலா - ஒப்பில்லாத. நானி லம் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நால் வகைப் பிரிவினையுடைய பூமி.

## 2. இலக்கிய இன்பம்

இப் பகுதியில் உள்ள பாடல்களைப் பாடியவர், கவி மணி, தேசிக விநாயகம் பிள்ளை அவர்களாவர்.

பார் - பூமி. ஊன் - உடல். களஞ்சியம் - பொக்கிஷ சாலை. கமழ் - மணம் வீச.

## 3. வருங்ற பாரதத்தை வாழ்த்துதல்

இதனை இயற்றியவர், சி. சுப்பிரமணிய பாரதியார்.

உறுதி - மனத்திடம். களி - களிப்பு, மகிழ்ச்சி கடுமை - வேகம், திண்மை. தெளிவு - ஐயமில் உணர்ச்சி, சிறுமை - அற்ப குணங்கள். எளிமை - வறுமை. ஏறு - காளை, சிம்மம், புலியேறு. நொய்ம்மை - அறியாமை, வெளிறு. தெய்வ சாபம் - அடிமைத்தனம்.

### 4. எந்தாய் வாழ்க

இதனை இயற்றியவர், சுத்தானந்த பாரதியார்.

எந்தாய் - எம்தாய். நாதம் - ஓசை. ஊட்டுது - ஊட்டுகிறது. பாசுரம் - பாடல். இதயம் - நெஞ்சம். தந்தி - வீணை நரம்பு. மீட்டுது - தடவுகிறது, வாசிக்கிறது. சுரக்குது - உண்டாகிறது, பெருகுகின்றது. வன்ன - அழகிய. சமரசம் - எல்லாவற்றையும் ஒன்றுபோலப் பார்க்கும் அறிவு. காணுது - காண்கிறது, தோன்றுகின்றது. ஆதவன் - சூரியன். ஆன்ம ஒருமை - பரமான்மாவோடு ஒன்றுபடுதல்.

### 5. இரக்ஷணிய யாத்திரிகம்

இதனை இயற்றியவர் H. A. கிருஷ்ண பிள்ளை என்பவர்.

வானம் - ஆகாயம், ஆகாயத்திலுள்ளவர். நனி - மிகவும். ஊனம் - குறைவு. தீனரக்ஷகன் - எளியாரைப் பாது காப்பவன், யேசு.

உருவம் - வடிவம், இருப்பிடம். மன்பதை - மக்கள். அருள் மழை - அருளாகிய மழை. புயல் - மேகம்.

## IV. கதைப் பகுதி

### 1. கெடுவான் கேடு நினைப்பான்

இது பஞ்ச தந்திரத்தில் உள்ளது. இதைத் தமிழில் வீரமார்த்தாண்ட தேவர் என்பவர் செய்யுள் நடையில் எழுதினார்.

1. மன்னி-நிலைபெற்ற. கொடி-காக்கை. 2. துன்னிய-நெருங்கிய. அரி-மான். கிளை-சுற்றம். பன்னிய-சொல்லிய. சூத்திரம்-வஞ்சகம். 3. உவகை-மகிழ்ச்சி. பணி-தொண்டு. துன்றினே-சேர்ந்தனே. 4. மித்திரன்-நண்பன். சம்புகன்-நரி 5. மொழி-சொல். துன்னிய-சேர்ந்த. 6. அருந்தும்-உண்ணும். 7. செயிர்-குற்றம். உய்ய-பிழைக்க. 8. வன்பு-கொடுமை. தசை-மாமிசம். வாளாது- ஒன்றும் செய்யாமல். அறைய-சொல்ல. 9. பரிகரிப்பன்-போக்குவேன். தளை-கட்டு.

10. சோகம்-துக்கம். ஊகம்-அறிவு. கழறும்-சொல்லும். 11. புகல-சொல்ல. அதிபன்-தலைவன். ஆருயிர்-அருமையான உயிர். 12. நவ்வி-மான். எல்லை-சமயம். தண்டம்-தடி. சிதைந்தது - இறந்தது.

### 2. புத்தரும் ஏழைச் சிறுவனும்

இதன் ஆசிரியர், கவிமணி, தேசிக விநாயகம் பிள்ளை.

ஆயர் குலம் - இடையர் குலம். வையகம் - உலகம். மாதவம் - பெரிய தவம். சிந்தை - மனம். வனம் - காடு. விதானம்-மேற்கட்டி. ஐயன் - மேலோன். கலம் - பாத்திரம். அண்ணல் - பெருமை பொருந்தியவன். அலகில் - குற்றமில்லாத. உதிரம் - இரத்தம். அண்டி - நெருங்கி தின்மை - தீமை.

## V. பல் சுவைப் பகுதி

### 1. மோர்ப் பாட்டு

இதனைப் பாடியது காளமேகப் புலவர். கம்பர் பாடியது என்பாரு முளர்.

கார் - மேகம். ககனம் - ஆகாயம். நீணிலம் - பெரிய உலகம். மயில்நேர் - மயிலுக்கு ஒப்பான.

### 3. ஆடம்பரம்

இப் பாடல் ஔவையாரால் பாடப்பட்டது. விரகர் - தந்திரசாலிகள்

### 4. வண்டோ ! பழமோ !

இது விவேக சிந்தாமணியில் உள்ளது. தேனுகர் - தேனை உண்ட. தடக்கை - பெரிய கை.

### 5. தமிழ் நாடு.

வேழம் - யானை. மலை நாடு - சேர நாடு. மேதக்க - மேன்மை பொருந்திய. பூழியர் கோன் - பாண்டிய மன்னன். தென்னாடு - பாண்டி நாடு. தெள்நீர் - தெளிந்த நீர் நிறைந்த.

# இளந் தமிழர்

# இலக்கிய வாசகம்

## ஏழாம் வகுப்பு

(உயர்தர ஆரம்பப் பாடசாலைகளுக் குரியது)

[ திருத்திய பதிப்பு ]

வித்வான், ஈ. பண்டார நம்பியார்



இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்

மதுரை :: :: சென்னை

உரிமை பெற்றது] 1952 [விலை அணா 14

First Edition — 1951
Revised ,, — 1952

# முன்னுரை

இளந் தமிழர் இலக்கிய வாசகம் என்னும் பெயர் புனைந்து வெளிவரும் இந்நூல் வரிசை, 1939-ம் ஆண்டு புதிய பாடத்திட்ட முறையைத் தழுவித் தொகுக்கப்பெற்றுள்ளது.

இந்நூலில், உரைநடைப் பகுதியில் வகுப்புக்கு ஏற்ற முறையில் அறிஞர்கள் எழுதிய விஞ்ஞானம், வரலாறு, தொழில், சுகாதாரம், உரையாடல், இலக்கியம், நாடகம் முதலிய அறிவியல் பாடங்கள் இடம் பெற்றுள்ளன; செய்யுட் பகுதியில், பழையனவும் புதியனவுமான சுவை நிரம்பிய பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் வினாக்கள், பயிற்சி, இலக்கணம், அரும்பொருள் என்பன அளிக்கப்பட்டுள்ளன. இன்னும், மாணவர்கள் கதை எழுதுவதற்கும், கட்டுரை எழுதுவதற்கும், கடிதம் எழுதுவதற்கும் பயிற்சி பெறுவதற்கான சில பாடங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

இந் நூலைக் கற்கும் இளந் தமிழ் மாணவர்கள் இலக்கிய இன்பங்கண்டு, இனிய எளிய தமிழ் நடை எழுதும் வன்மை பெறுவதோடு, உலகியலறிவையும், பொது நோக்கையும் பெற்றுத் திகழ்வார்கள் என்று நம்புகிறேன்.

எனது எளிய வேண்டுகோளுக்கு இணங்கித் தங்கள் கவிதைகளையும், கட்டுரைகளையும், சேர்த்துக் கொள்ள உரிமை அளித்த பெரியார்கள் அனைவர்க்கும் எனது அன்புசால் வணக்கம்.

இதனைக் கண்ணுறும் கலாசாலைத் தலைமை ஆசிரியர்களும் தமிழாசிரியர்களும் தங்கள் தங்கள் கலாசாலைகளில் பாடமாக வைத்து என்னை ஆதரிக்குமாறு வேண்டுகிறேன்.

ஈ. பண்டார நம்பியார்.

Printed at the Excelsior Power Press, Madurai-52.

# உள்ளுறை

## செய்யுள்




நமது சுதந்திரக் கொடி [பக்கம் 111]




# இளந் தமிழர்
# இலக்கிய வாசகம்

## ஏழாம் வகுப்பு



## செய்யுள்



### I. வாழ்த்து

### 1. கடவுள்

கதிரவன் கிரணக் கையால்
கடவுளைத் தொழுவான்; புட்கள்
சுதியொடும் ஆடிப் பாடித்
துதிசெயும்; தருக்கள் எல்லாம்
பொதியலர் தூவிப் போற்றும்;
பூதம்தம் தொழில்செய் தேத்தும்;
அதிர்கடல் ஒலியால் வாழ்த்தும்
அகமே, நீ வாழ்த்தா தென்னே ?

—முன்சீப்-வேதநாயகம் பிள்ளை.

### 2. கலைமகள்

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை— தூய
உருப்பளிங்கு போல்வாள்என் உள்ளத்தி னுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

—கம்பன்.

### 3. குடியரசு

ஆதி பகவன் அறவாழி அந்தணன்
யாதும் உவமையிலான் இன்னருளால்—ஓதுபுகழ்
இந்திய நாட்டில் எழுந்த குடியரசு
சந்ததம் வாழ்க தழைத்து.

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

## II. நீதி

### 1. திருக்குறள்

நிலத்தியல்பால் நீர்திரிந்(து) அற்றாகும், மாந்தர்க்(கு)
இனத்தியல்ப தாகும் அறிவு. 1

எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்ப(து) இழுக்கு. 2

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 3

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ(டு)
ஐந்துசால் பூன்றிய தூண். 4

சுழன்றுமேர்ப் பின்ன(து) உலகம்; அதனால்,
உழந்தும் உழவே தலை. 5

—திருவள்ளுவர்.

## 2. இனியவை நாற்பது

பிச்சைபுக்(கு) ஆயினும் கற்றல் மிகஇனிதே;
நற்சவையில் கைகொடுத்தல் சாலவும் முன்னினிதே;
முத்தேர் முறுவலார் சொல்லினி(து); ஆங்கினிதே
தெற்றவும் மேலாயார்ச் சேர்வு. 1

வருவாய் அறிந்து வழங்கல் இனிதே;
ஒருவர்பங்(கு) ஆகாத ஊக்கம் இனிதே;
பெருவகைத்(து) ஆயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்தல் இனிது. 2

கயவரைக் கையிகந்து வாழ்தல் இனிதே;
உயர்வுள்ளி ஊக்கம் பிறத்தல் இனிதே;
எளியர் இவரென்று இகழ்ந்துரையா ராகி
ஒளிபட வாழ்தல் இனிது. 3

பிறன்மனைப் பொருள்வெளவான் வாழ்தல் இனிதே;
அறம்புரிந்(து) அல்லவை நீக்கல் இனிதே;
மறந்தேயும் மாணா மயரிகட் சேராத்
திறந்தெரிந்து வாழ்தல் இனிது. 4

மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிதே;
தானம் அழியாமை தானடங்கி வாழ்வினிதே;
ஊனமொன்(று) இன்றி உயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லாம் இனிது. 5

—பூதஞ்சேந்தனார்.

## 3. அறநெறிச்சாரம்

இன்சொல் விளைநிலமா, ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு, வாய்மை எருவட்டி,
அன்புநீர் பாய்ச்சி, அறக்கதிர் ஈன்பதோர்
பைங்கூழ்ச் சிறுகாலைச் செய். 1

வைகலும் நீருட் கிடப்பினும் கல்லிற்கு
மென்மென்றல் சால அரிதாகும்; அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும், கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு. 2

தன்னைத்தான் நெஞ்சங் கரியாகத் தானடங்கின்
பின்னைத்தான் எய்தாப் பயனில்லை;—தன்னைக்
குடிகெடுக்கு நெஞ்சிற்குக் குற்றேவல் செய்யின்,
பிடிபடுக்கப் பட்ட களிறு. 3

இம்மை யடக்கத்தைச் செய்து புகழாக்கி
உம்மை உயர்கதிக் குய்த்தலான்,—மெய்ம்மையே
பட்டாங் கறமுரைக்கும் பண்புடை யாளரே
நட்டா ரெனப்படு வார். 4

பாம்புண்ட நீரெல்லா நஞ்சாம்; பசுவுண்ட
தேம்படு தெண்ணீ ரமுதமாம்;—ஓம்பற்(கு)
ஒளியா முயர்ந்தோர்க்கு ஞான மதுபோல்
களியாங் கடையாயார் மாட்டு. 5

—முனைப்பாடியார்.

## 4. திரிகடுகம்

கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கறுக்கும்
மூத்தோரை இல்லா அவைக்களனும்,-பாத்துண்ணும்
தன்மையி லாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்தல் இல. 1

வருவாயுள் கால்வழங்கி வாழ்தல், செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை, - எய்தப்
பலநாடி நல்லவை கற்றலிம் மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள். 2

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்,—முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. 3

வைததனை இன்சொலாக் கொள்வானும், நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும்—ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார். 4

உண்பொழுது நீராடி உண்டலும்,—என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்,—தோல்வற்றிச்
சாயினும் சான்றாண்மை குன்றாமை இம்மூன்றும்
தூஉயம் என்பார் தொழில். 5

—நல்லாதனார்.

## 5. ஆசாரக் கோவை

நன்றி அறிதல் பொறையுடைமை இன்சொல்லோ(டு)
இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோ(டு)
ஒப்புர(வு) ஆற்ற அறிதல் அறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்
சொல்லிய ஆசார வித்து. 1

வைகறை யாமம் துயில்எழுந்து தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை. 2

பொய்குறளை வெளவல் அழுக்காறு இவைநான்கும்
ஐயந்தீர் காட்சியார் சிந்தியார்; சிந்திப்பின்,
ஐயம் புகுவித் தருநிரயத் துய்த்திடும்;
தெய்வமும் செற்று விடும். 3

உண்ணுங்கால் நோக்கும் திசைகிழக்குக்-கண்ணமர்ந்
தூங்கான் துளங்காமை நன்கிரீஇ,-யாண்டும் [து
பிறிதியாது நோக்கா னுரையான்-தொழுதுகொண்
டுண்க உகாமை நன்கு. 4

பழியார் இழியார் பலருள் உறங்கார்
இசையாத நேர்ந்து கரவார்—இசையின்றி
இல்லாரை எள்ளி இகழ்ந்துரையார் தள்ளியும்
தாங்கரும் கேள்வி யவர். 5

—பெருவாயில் முள்ளியார்.

## 6. திருவேங்கட சதகம்

தனதுபட் டந்தனைத் தம்பியர்க்
கீயெனத் தந்துமகி ழுந்தமையனும்,
தமையனார் வருமளவு மாவிரத மாகவே
தபசுபுரி யுந்தம்பியும்,
கனசுவைப் பாலீந்த தாய்தனைப் போலவே
கருணைசெய் திடுமதனியும்,
கானுமுன் றந்தைபோற் றிருவடிகள் பணியுங்
கனிட்டனுடை மனையாட்டியும்,
தினந்தினம் பரிவாகி அம்மையே யென்றபேர்
செப்புங் கொழுந்தனும்
சேர்ந்துவாழ் கின்றபேர் திரேதா யுகந்தனில்
தெசரதகு மாரர் கண்டாய்
வனசமலர் கமழ்கின்ற வாவிசூழ் களமூரின்
மணவாள நாராயணன்
மனதிலுறை அலர்மேலு மங்கை மண
வாதவேங் கடராயனே! [வாளனே!

—நாராயண பாரதி.

# III. கதை

## 1. யானையை வென்ற முயல்

துன்னரு மடவி தன்னில்
தும்பிக ளனேகஞ் சூழப்
பன்னருஞ் சதுர தந்தன்
எனுமிறை பண்பின் வாழ்நாள்
அன்னநாள் மழையில் லாம
லருஞ்சுனை யெல்லாம் வற்ற
உண்ணுநீ ரெங்குண் டென்ன
வொற்றர்பார்த் தோடி வந்தே, 1

சந்திர சரசு தண்ணீர்
ததும்பிட நிற்கு தென்ன,
அந்தநற் சுனையை நாடி
யானைகள் அனைத்துஞ் செல்ல
முந்தியச் சுனையைச் சூழ
முயல்சிலீ முகவேந் தஞ்சி,
மந்திர விசயன் தன்னை
வரவழைத் துரைக்கு மன்றே; 2

“இற்றைநாள் வரையில் நாமும்
இனமுமிச் சுனையைத் தானே
சுற்றியிங் கிருந்தோம்; இந்தத்
தும்பிகள் வந்து புக்கால்
மற்றுநாம் இருக்க லாகா;
வனத்தில் வேறிடமு மில்லை;
உற்றிவ ணிருக்க வேறோ
ருபாயநீ நினைப்பாய்” என்ன, 3

"ஆனையை வெல்லு மாறிங்
கருமையோ? விடைதா" என்று
ஞானமந் திரவி சார
நணிபெறு விசயன் கூறிச்
சேனைகா வலனு மந்தச்
சிலீமுகன் அனுப்ப வேகிக்
கானில்வே ழக்கூட் டத்தைக்
கண்களாற் கண்டு நின்றே, 4
"நகைத்துடன் கொல்வர் துட்டர்
நாமவர் நடுவிற் பட்டால்;
வகைப்பட வோர்பா னின்றால்
வந்தடித் திடுவர் மாறாய்;
மிகைப்பட அவர்கள் கையில்
வீறுட னுழுஞ் சும்மா
அகப்படின் நம்மை யந்த
ஆனைதான் கொல்லு மன்றே" 5
என்றுதான் மனத்தில் எண்ணி,
"இதன்கையில் அகப்ப டாமல்
நின்றுநாம் வெல்வோம்" என்று
நினைத்தொரு குவட்டி லேறித்
துன்றிய களிற்று வேந்தைத்
"தம்பி நீ சுகமே?" என்ன,
வென்றிகொள் களிறு கண்டு
வியந்து, "நீயாரோ?" என்ன, 6
"இசைநிலா வெறிக்குந் திங்கள்
ஏவிய தூதன்; என்பேர்
விசயனென் பார்கள்; உன்பால்
விடுக்கவந் துற்றேன்" என்ன,

அசை விலா தாகி யந்த
ஆனையும் பயந்து நின்றே
"விசய நீ வந்த தென்ன
விளம்" பென விளம்பு மன்றே, 7
"சந்திர சரசென் றெங்கள்
சசிபக வான்பே ராலே
இந்தநற் கான கத்தில்
இருஞ்சுனை ஒன்றுண் டாக்கி
அந்தநற் சுனையில் எங்கள்
ஐயனுந் தேவி மாரும்
முந்திய சலக்கி ரீடை
முயங்கியே பகலைக் கெல்லாம் 8
"தண்ணுறுஞ் சுனைக்குக் காவல்
வைத்தெமைத் தாங்கள் போவர்;
விண்ணவர் உலகத் தாரும்
விரும்பினும் தொடப் படாது;
நண்ணிய சுனைநீர் உண்ண
நாடினை நீயென் றெங்கள்
அண்ணலார் சினந்துன் பக்கல்
அனுப்பினார் 'தடுத்தி' என்றே, 9
"தூதுசொல் வாரி யற்கை
தூங்கவா ளுருவிக் கொண்டு
கோதமாய்க் கேட்பார் முன்னும்
கூறுவ கூறல் வேண்டும்;
யாதவர் கூறி னாலும்
இகலினர் தூத ரேனும்
மூதறி வரசர் தூதர்
முனியினு முனியா ரன்றே; 10

"தன்னுடல் வலிமை யாலே
தான்பெரி யரைப்ப கைத்தால்
பின்னவர் சினந்து வெல்லப்
பெற்றுயிர் இழத்தல் வேண்டும்;
அன்னதை நினையா மற்பின்
பவர்பகை நினைத்தா ரேனும்
முன்னரே வணங்கிப் போற்றின்,
முடிவுறா ராவி மன்னே. 11
மூவரின் முதல்வ ரான
முனிவனுர் முடிமேல் வாழும்
தேவனைப் பகைத்த சிந்தைச்
செயலினை யினித்த டுத்தே
மேவுதன் சுனைமேல் வைத்த
வேட்கையை விடுத்திந் நேரம்
போவதே கருமம்" என்று
புத்திகள் பலவுஞ் சொல்லி, 12
"இங்கிவை யனைத்து நானே
இயம்பினன் உன்னை வேண்டி;
திங்களம் பகவன் உன்மேற்
சினந்தது கொஞ்ச மல்ல;
அங்கவன் சினமு நானே
ஆற்றுவன் அவன்பாற் சென்றே;
வெங்களிற் றினத்தி னோடே
மீள்கநீ" என்று கூற, 13
தந்தியின் அரசும் அந்தச்
சசந்தனை நோக்கி, "நீசொல்
சந்திரன் எனுந்தே விந்தத்
தடந்தனில் குடைவ தெப்போ(து)?

அந்தவே ளையினில் வந்தங்
கவனடி போற்றி யானும்
உய்ந்துமீண் டேகுவேன்” என்
றோதலும், முயல்நன் றென்றே 14
அன்றிர வுடன்கொண் டேகி
அலைபுனல் தடத்தில் தோன்றும்
துன்றுவெண் மதியின் சாயை
காட்டி, “நீகாண்க” என்ன,
நன்றதைக் கண்டு திங்கள்
நாதனே யென்றும், சூழ்வுற்
றொன்றிய வுடுக்கள் அன்னோற்
குரியநன் மாதர் என்றும் 15
ஆணையும் நினைத்து நெஞ்ச
மழிந்துபின் தெளிந்து நின்று,
“நானிதை யறியேன், எங்கள்
நாதனே, பொறுக்க!” என்று
வானுயர் மதியை நோக்கி
வணங்கியே மீண்டு போகக்
கானுறு முயல்க ளெல்லாம்
களித்துவாழ்ந் திருந்த வன்றே. 16

—வீரமார்த்தாண்ட தேவர்.

## IV. உபதேசம்

### 1. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

வாக் கிறந்த பொருள் — நமது
மனதிற் கெட்டாப் பொருள்;
யார்க்கு மப்பொருளை — அளக்க
இயல மாட்டா தப்பா.

ஒரு திரை நீங்கின் — மேலும்
ஒரு திரை வீழும்;
ஒரு கணப் பொழுதும் — திரை தான்
ஒழிய மாட்டா தப்பா. 2

ஆதி யெது வென்று — வினவும்
அவனோ ரறி விலான்;
ஆதி யிது வென்று — கூறும்
அவனு மோர் மூடன். 3

மண்ணில் வாழ்வதுண்டு — பின்னால்
மரண மாவ துண்டு;
நண்ணும் இன்ப துன்பம் — எந்த
நாளும் உண் டப்பா. 4

நன்மை விதைத் திடில் — என்றும்
நன்மையே விளையும்;
தின்மை விதைத் திடில் — அதுபோல்
தின்மையே விளையும். 5

கரும்பில் என்றுமே — வேம்பின்
கனி கனிவ தில்லை;
விரும்பிடா வேம்பில் — கரும்பும்
விளைவ தென்று மில்லை. 6

பொய் களைந்திடுவோம் — மெய்யைப்
போற்றி நின்றிடுவோம்;
செய் கடனை நிதம் — உலகில்
செய்து வாழ்ந் திடுவோம். 7

## 2. பட்டினத்தார்

ஒன்(று) என்று இரு; தெய்வம் உண்(டு)
என்(று) இரு; உயர் செல்வ மெல்லாம்
அன்(று) என்று இரு; பசித்தோர் முகம்
பார்; நல் அறமும் நட்பும்
நன்(று) என்(று) இரு; நடு நீங்காமலே
நமக்(கு) இட்டபடி
என்(று) என்(று) இரு; மனமே! உனக்கே
உபதேசம் இதே.

# V. பல்சுவை

## 1. வேளாளர் பெருமை

வேதநூல் முதலாக விளங்குகின்ற கலையனைத்தும்
ஓதுவார் எல்லாரும் உழுவார்தம் தலைக்கடைக்கே
கோதைவேல் மன்னவர்தம் குடைவளமும் கொழுவளமே
ஆதலால் இவர்பெருமை யார்உரைக்க வல்லாரே!

—"ஏரெழுபது" கம்பன்.

## 2. ஆடைச் சிறப்பு

மேலாடையின்றிச் சவை புகுந்தால் இந்த
மேதினியோர்
நூலா யிரம்படித் தாலும் எண்ணார் நாவல்
பாற்கடலோ
மாலா னவரணி பொன்னுடை கண்டு
மகளைத்தந்தே
ஆலால மீந்தது தோலாடை சுற்றும்
அரன்தனக்கே.

—நையாண்டிப்புலவர்.

## 3. வழுதியின் கலியாணம்

வண்டமிழைத் தேர்ந்த வழுதி! கலியாணத்
துண்ட பெருக்க முரைக்கக்கேள்—அண்டி
நெருக்குண்டேன் தள்ளுண்டேன் நீள்பசியி னாலே
சுருக்குண்டேன் சோறுண் டிலேன்.

—ஔவையார்.

## 4. முருகன் பெருமை

அப்பன் இரந்துண்ணி; ஆத்தாள் மலைநீலி;
ஒப்பரிய மாமன் உறிதிருடி;—சப்பைக்கால்
அண்ணன் பெருவயிறன்; ஆறுமுகத் தானுக்கிங்(கு)
எண்ணும் பெருமை இவை!

—காளமேகப்புலவர்.

## 5. புலவர் போட்டி

மூச்சுவிடு முன்னே முந்நூறும் நானூறும்
ஆச்சென்றால் ஐந்நூறும் ஆகாதோ?—பேச்சென்ன
வெள்ளைக் கவிகாள மேகமே! உன்னுடைய
கள்ளக் கவிக்கடையைக் கட்டு.

—அதிமதுர கவிராயர்.

இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும்
அம்மென்றால் ஆயிரம்பாட்(டு) ஆகாதோ?—சும்மா
இருந்தால் இருப்பேன், எழுந்தேனே யாயின்
பெருங்காள மேகம், பிளாய்!

—காளமேகப்புலவர்

## 6. சகோதர ஒற்றுமை

செஞ்சுடரோன் மைந்தனையும் தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரில் பார்த்தனையும் பாராதே—மிஞ்சி

விரதமே கொண்டிந்த மேதினியை ஆண்ட
பரதனையும் ராமனையும் பார்.

—வரதுங்கராம பாண்டியன் மனைவி.

## 7. பெய்யாத மேகத்திடம் பேசியது

செல்லென்றுன் நாமத்தைச் செப்பினதே அல்லாமல்
செல்லென் றுனைநாங்கள் செப்பினமா?—அல்லென்று
மெய்யா உவமிக்க விண்மீது தோன்றியநீ
பெய்யாமற் போனதென்ன பேசு.

—வேதநாயகம் பிள்ளை.

## 8. ஆறு பேசுகிறது

மேடுபள்ளம் தாவிக்குதித்து விரைந்து வந்தேனே;
காடுங்கரையும் கவலையின்றிக் கடந்து வந்தேனே;
பரம்பொருளைப் பண்ணுடனே பாடி வந்தேனே;
பரந்தகடலில் கலந்துமகிழப் பணிந்து வந்தேனே.

—யோகி சுத்தானந்த பாரதியார்.

## 9. கயிறு

சிறிய வயதினிலே — எங்கள்
சேதி வியப்பினையே
அறிய முயலுவிரேல் — அதை
அறைகுவம் கேட்டிடுவீர். 1
பஞ்சினிற் பட்டினிலே — சிறு
நூலென் றெழுந்திடுவோம்
மிஞ்சிய தென்னையிலே — பனை
தாழைகள் வாழையிலே, 2
சோற்றுக் கற்றாழையிலே — செடிப்
புளிச்சையில் நார்ப்படுவோம்

வேற்று மரங்களிலும் — எம்மை
நினைந்து பெயர்த்திடுவார். 3

ஆனை அடக்கிடுவோம் — பாரில்
அரும்பொருள் இறக்கிடுவோம்
வானைப் பிளந்துயரும் — கொடித்
தேரை யிழுத்திடுவோம். 4

காட்டுப் பயிர்களெல்லாம் — மேனி
கண்டு விளைந்திடவே
ஏற்றக் கமலையிலே — தண்ணீர்
இறைத்துப் பொழிந்திடுவோம். 5

எங்களை வேண்டாதார் — பார்க்கின்
எவருமிலை என்று சொல்வேன்
பொங்கிய ஒற்றுமையும் எங்கள்
பொறுமையும் வாழ்கவே. 6

—திரு. S. அரங்க அய்யங்கார்.

## 10. அஞ்சலி

காந்தியென்னும் பேரொளியே!
கருணைபொழி வான்முகிலே!
சாந்திநிறை பாத்திரமே!
சன்மார்க்க சாத்திரமே!
மாந்தருக்குள் மாமணியே!
மாநிலத்தின் அற்புதமே!
ஏந்துபுகழ் மோகனமே!
என்சொல்லி அஞ்சலிப்போம்!

—நாமக்கல் கவிஞர்.



பண்டித மோதிலால்நேரு, பண்டித ஜவஹர்லால்நேரு.

# இளந் தமிழர்
# இலக்கிய வாசகம்

## உரை நடை

### 1. மாந்தருக்குள் ஒரு மாணிக்கம்

[வித்துவான் ஈ. பண்டார நம்பியார்]

நமது இந்திய நாடு, இன்று தன்னாட்சி நாடாக இலங்குகிறது. இவ்வாட்சியைப் பெறுவதற்குத் தங்கள் உடல், பொருள் ஆவி அனைத்தையும் வழங்கி உழைத்தவர்கள் பலர். அவர்களுள் ஒருவர் தாம், இன்று நமது முதலமைச்சராக விளங்கும் பண்டித ஜவஹர்லால் நேரு. அவர், காந்தி மகானுடன் நெடுங் காலம் பழகி, அவரால் பண்படுத்தப்பட்டவர்; காலமெல்லாம் காந்தி மகானையே கருத்தில் வைத்துச் செயல்களைச் செய்து வருபவர். அவர், தம் வாழ்க்கை முழுவதையும் மக்கள் நலனுக்காக வழங்கினர். செல்வக் குடியில் பிறந்து வறுமை என்பதை அறியாதவராக இருந்தும், அவர் பட்ட அல்லலுக்கு அளவில்லை. அதற்குக் காரணம், காந்தி மகான் வகுத்த வழிநின்று உறுதியுடன் உழைத்தமையே யாகும். ஆதலால் தான், மாந்தருக்குள் ஒரு தெய்வம் என்று மதிக்கப்படுகிற மகாத்மா காந்தியடிகள், அவரை 'மக்களுக்குள் ஒரு மாணிக்கம்' என்று அழைத்தனர். 'ஜவஹர்' என்ற பெயருக்கும் 'மாணிக்கம்' என்று பொருள் அமைந்திருப்பது பொருத்தமல்லவா?

இந்தியாவின் மணிமுடி என்று புகழப்படும் காஷ்மீரநாடு, காண்பவருடைய கண்ணையும், கருத்தையும் களிப்புறச் செய்யும் எழில் மிக்கது. அது ஒரு காலத்தில் புலமையின் புகலிடமாகப் பொலிந்தது. அந் நாட்டை ஆண்ட மன்னர்கள், கலை வளர்ப்பதில் கருத்துடையராய், பிறநாட்டுப் புலவர்களையும் வரவேற்று வாழ்வளித்தார்கள். நாட்டில் எங்கும் கலை வளர்ந்தது. காஷ்மீரம், கலைமகள் கொலுவிருக்கையாக விளங்கிற்று. அங்கு, சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர், இராஜ்கால் என்னும் பண்டிதர் ஒருவர் குடி புகுந்து வாழ்ந்திருந்தார். அவர் பாரசீகம், வடமொழி இரண்டிலும் வல்லவர்.

அந்நாளில், டில்லியை ஆண்டுவந்த முஸ்லிம் அரசர் ஒருவர் காஷ்மீரம் சென்றிருந்தார். அவர் இராஜ்கால் பண்டிதரின் புலமையில் ஈடுபட்டு, அவரைத் தம்மோடு அழைத்து வந்து, விளைநிலமும் மாளிகையும் கொடுத்து டில்லியில் வாழவைத்தார். மன்னர் அளித்த மாளிகை ஒரு கால்வாய்க் கரையில் இருந்தது. இந்தி மொழியில் கால்வாய்க்கு 'நஹார்' என்று பெயர். ஆதலால், இராஜ்கால் பண்டிதர் 'கால்வாய்க்கு உரியவர்' என்று பொருள்படும் 'நெஹ்ரு' என்ற சொல்லால் அழைக்கப்பட்டார். அவருக்குப் புலமை கருதி வந்த பண்டிதர் என்னும் பெயரும், காரணம் பற்றி வந்த நெஹ்ரு என்ற பெயரும், அவர் வழியில் வந்தோருக்கும் வழங்கலாயின.

நேரு குடும்பத்தினர் டில்லியிலிருந்து ஆக்ராவிலும், பின்னர் அலகபாத்திலும் சென்று குடியேறி

னர். பண்டித மோதிலால் நேரு, அலகபாத் உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞராகத் தொழில் நடத்தினர். அவர் மனைவியார் சொரூப ராணியார் என்னும் அம்மையார். அவர்களுக்கு 1889-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பதினன்காம் நாளில் அருந்தவப் புதல்வராய்த் தோன்றினர் நம் ஜவஹர்லால் நேரு. பின்னர் விஜயலட்சுமி, கிருஷ்ணு என்னும் இரு புதல்வியரும் பிறந்தனர்.

பண்டித மோதிலால் நேரு, தம் அருமைப் புதல்வருக்குக் கல்வி கற்பிப்பதில் கருத்தைச் செலுத்தினர்; பெர்னண்ட் டி. புரூக்ஸ் என்னும் அறிஞர் ஒருவரை ஆசிரியராக அமர்த்தினர். ஜவஹர் அவரிடம் ஆங்கிலம், கணிதம், வரலாறு முதலியவற்றைக் கற்றுத் தேர்ந்தார்; விஞ்ஞானக் கலையையும் வீட்டிலேயே கற்றுக்கொண்டார்; பின்னர், இங்கிலாந்து சென்று, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பயின்று பாரிஸ்டர் பட்டம் பெற்று, 1912-ஆம் ஆண்டில் இந்தியாவிற்குத் திரும்பினர். அவர் இங்கிலாந்தில் மாணவராக இருந்த போது, லாலா லஜபதிராய், கோபாலகிருஷ்ண கோகலே முதலிய இந்தியத் தலைவர்களின் சொற்பொழிவைக் கேட்டார். அவை அவர் உள்ளத்தில் நாட்டுப்பற்றை ஊட்டின. இத்தாலி நாட்டுப் பெருவீரனை கரிபால்டியின் வரலாறு, நாட்டு விடுதலைக்காக வீறு கொண்டு உழைக்குமாறு அவரைத் தூண்டிற்று. இங்கிலையில், இந்தியா வந்த ஜவஹர், காங்கிரஸ் மகாசபையில் சேர்ந்து, நாட்டுப் பணிபுரியமுற்பட்டார்.

1916-ஆம் ஆண்டு இலட்சுமணபுரியில் காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. அங்குச் சென்றிருந்த

ஜவஹர், காந்தியடிகளின் ஆசியைப் பெற்று, அவருடைய அரசியல் மாணவரானார். இன்று ஏற்பட்ட அவ் வுறவுதான், பிற்காலத்தில் மகாத்மா காந்தியடிகள், "ஜவஹரே எனது அரசியல் வாரிசு" என்று கூறுவதற்குக் காரணமாயிற்று. அவர் மாந்தருக்குள் ஒரு மாணிக்கமாவதற்கும் அவ் வுறவுதான் காரணம்.

அந்த ஆண்டில் தான் ஜவஹருக்குத் திருமணம் நடைபெற்றது. அவர் மனைவியார், கமலா நேரு என்னும் அம்மையார். இத் தம்பதிகளின் அன்புப் புதல்வியாய்த் தோன்றினர் இந்திரா நேரு என்பவர். இப் புதல்விக்கு அறிவுறுத்துவதற்காக ஜவஹர் எழுதிய கடிதங்களே, "ஜவஹர்லால் நேருவின் கடிதங்கள்" என்ற சிறந்த நூலாகும். அந் நூலை அனைவரும் படித்துப் பயன் பெறவேண்டுவது அவசியமாகும். இன்னும் அவர் எழுதிய 'உலகச் சரித்திரம்,' 'சுய சரித்திரம்' 'இந்தியா புதிதாகக் கண்டவை' முதலிய நூல்கள் அவரை உலக எழுத்தாளர்களில் ஒருவராக உயர்வு படுத்தியுள்ளன. அவைகள் சிறந்த இலக்கியங்கள்.

முதல் உலகப்போர் முடிந்ததும், இந்தியாவிற்கு விடுதலை கிடைக்கும் என்று தலைவர்கள் எண்ணி இருந்தனர். ஏமாற்றம் ஏற்பட்டது. நாட்டில் விடுதலைக்கிளர்ச்சி தோன்றியது. அரசாங்கம் அடக்கு முறையைக் கையாண்டது. பஞ்சாப் படுகொலை நடந்தது. மிதவாதியாக இருந்த மோதிலாலும் தீவிரவாதியானார். தந்தையும் மகனும் பலமுறை சிறைசென்றனர். ஜவஹர், அலகபாத் நகராண்மைக் கழகத் தலைவராக இருந்து பணிபுரிந்தார்; காங்கிரஸ் செயலாளராகவும் இருந்து தொண்டாற்றினர்.

1925-ஆம் ஆண்டு காந்தி அடிகள் காங்கிரஸ் தலைவராக இருந்த காலத்தில், இவரே செயலாளராக இருந்தார்.

ஜவஹர்லால் நேரு, அப்பொழுது ஒரு முறை ஐரோப்பா செல்ல நேர்ந்தது; அவரது தாயாரும், மனைவியும் உடல்நலங் குன்றி இருந்தமையால், 1926-ல் அவர்களுடன் ஐரோப்பா சென்று ஜினிவா நகரில் தங்கி யிருந்தார். அங்கு அவருக்குப் பல பெரியார்களுடைய நட்புக் கிடைத்தது. காந்தியடிகளின் நண்பரான ரோமன் ரோலண்ட் என்பவரைக் கண்டு அளவளாவி மகிழ்ந்தார் அவர்; ஆனால், இத்தாலிய சர்வாதிகாரியான முசோலினி தம்மை அழைத்திருந்தும், அவரைச் சென்று காண மறுத்து விட்டார்; 1928-ல் இந்தியா வந்து சேர்ந்தார்.

ஜவஹர் 1930-ல் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முந்திய தலைவர் மோதிலால் நேரு. ஆதலால், தந்தையிட மிருந்தே தனயர் பதவி ஏற்றார். அவ் வாண்டில் உப்புப் போர் ஆரம்பமாயிற்று. காந்தி யடிகள் தண்டி என்ற இடத்திற்குச் செல்லும் வழியில், மோதிலால் நேரு தமது 'ஆனந்தபவனம்' என்ற மாளிகையைக் காங்கிரசிற்குக் காணிக்கையாகக் கொடுத்தார். அம் மாளிகை, **சுய ராஜ்ய பவன**மாக மாற்றப்பட்டது. உப்புப் போரில், தலைவர்கள் எல்லோரும் கைது செய்யப்பட்டனர். தந்தையும் மகனும் சிறை சென்றனர்.

இளவரசரைப் போல் இன்ப வாழ்வு நடத்த வேண்டிய ஜவஹர், நாட்டு நலங்கருதித் துன்ப வாழ்

வைத் துணிவுடன் மேற்கொண்டார்; ஒன்பது முறை சிறை சென்றார்; 1931-ஆம் ஆண்டு தம் அருமைத் தந்தையை இழந்தார். அதன் பிறகு பல துன்பங்கள் அவரைத் தொடரலாயின. 1936-ம் ஆண்டு அவர் மனத்திற் கிசைந்த மனைவியார் மரணம் அடைந்தார். 1938-ஆம் ஆண்டு அவர் அன்பிற்குரிய அன்னையார் ஆவிநீத்தார். இக் காலங்களிலும் கூட, ஜவஹர் நாட்டிற்குச் செய்ய வேண்டிய நற்பணியில் தவறியதில்லை. தம் மனைவியை இழந்த அந்த ஆண்டில் தான், ஜவஹர் இலட்சுமணபுரி காங்கிரசிற்குத் தலைமை தாங்கினார்; பல மாகாணங்களில் சென்று தேர்தல் பிரசாரம் நடத்தி, ஆறு மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சியை ஏற்படுத்தினார். சுருங்கக் கூறினல், சுடச் சுட ஒளி விடும் பொன்னென அவர் பிரகாசித்தார் என்னலாம். மாணிக்கம் எக் காலத்திலும் மங்குவதில்லை அல்லவா?

இரண்டாவது உலகப் பெரும் போருக்குப் பிறகு, இந்திய நாட்டில் விடுதலைக் கிளர்ச்சி அதிகரித்தது. அடக்கு முறையால் பயனில்லை என்று கண்ட அரசாங்கம், விடுதலை அளிக்க முன் வந்தது. காந்தி அடிகளின் ஆன்ம உணர்வாலும், தலைவர்களின் தியாகத்தாலும், மக்களின் உழைப்பாலும் 1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ஆம் நாள் நாடு விடுதலை பெற்றது. அடிகளின் ஆசியைப் பெற்று, ஜவஹர் முதலமைச்சராகப் பதவி ஏற்றார். அவர், 'இந்திய நாடு இணையற்ற நாடாக வேண்டும்' என்ற ஆர்வத்தால், இடை விடாது உழைத்து வருகிறார்.

அவர், உலக நாடுகள் அனைத்தும் நல்ல நிலையில் இல்லாவிட்டால், சில நாடுகள் மட்டும் வாழ முடியாது என்ற உயர்ந்த கோட்பாடு உடையவர். ஆகவே, நம் நாட்டின் நலனுக்கு உழைப்பதுடன், உலகிலுள்ள எல்லா நாடுகளும் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்று அவர் உழைக்கிறார். உலகிலுள்ள எந்தப் பகுதியிலும், இனி, 'ஒரு நாடு மற்றொரு நாட்டை அடிமைப் படுத்தி வாழ முடியாது' என்று அவர் வல்லரசுகளுக்கு அஞ்சாது அறிவுறுத்துகிறார்.

அவர் அஞ்சா நெஞ்சினர்; தன்னம்பிக்கை யுடையவர்; விடா முயற்சி கொண்டவர்; பிள்ளை யுள்ளம் படைத்தவர்; எல்லோரும் 'இன்புற்றிருக்க வேண்டும்' என்று எண்ணுபவர். அவர் கனவு நனவாக வேண்டும். அதற்கு அவர் இன்னும் பல ஆண்டுகள் வாழவேண்டும். அவர் நீண்ட ஆயுளைப் பெற்று இனிது வாழ, இறைவன் இன்னருளை நாம் வேண்டு வோமாக!

வாழ்க ஜவஹர்லால்!

அரும்பொருள் :— ஆவி - உயிர். அல்லல் - துன்பம். எழில்- அழகு- பொலிந்தது - விளங்கியது. கலைமகள் - சரசுவதி. வழக்கறிஞர் - வக்கீல். வரலாறு - சரித்திரம். வீறு - வேகம். செயலாளர் - காரியதரிசி. இணையற்ற - ஒப்பற்ற.

## வினாக்கள்

1. 'மாக்தருக்குள் ஒரு மாணிக்கம்' என்றது யாரை? அவ்வாறு கூறுவது எங்ஙனம் பொருந்தும்?
2. காஷ்மீர் நாட்டின் சிறப்பினைக் கூறுக.
3. ஜவஹரின் பெற்றோர்கள் யாவர்?
4. ஜவஹர் கல்வி கற்ற முறையைக் கூறுக.

5. ஜவஹர் காந்தியடிகளின் அரசியல் மாணவரானது எப்பொழுது? அதனால் ஏற்பட்ட நன்மைகள் யாவை?

6. ஜவஹரின் உயர்ந்த இலட்சியம் யாது?

7. அவரது நல்லியல்புகளைக் கூறுக.

## பயிற்சி

எதிர்ப்பதம் தருக:

தன்னாட்சி, சுதந்திர நாடு, பேரரசர், தீவிரவாதி.

## இலக்கணம்

நன்மை தீமை. இராமன் பாடத்தைப் படித்தான். இவ்விரண்டும் சொற்றொடர்கள். இவற்றுள் இரண்டாவது தொடர், பொருள் முடிந்து நிற்பதால் வாக்கியம் எனப்படும். பொருள் முடிவுறாமல் வரும் சொற்றொடர்களுக்கு என்ன பெயர்?

ஒரு வாக்கியத்தில் பொருள் முடிந்து நிற்கும் இடம் பயனிலை என்று கூறப்படும். அப்பொருளைச் செய்யும் கருத்தா எழுவாய் எனப்படும். கருத்தாவினால் செய்யப் படுவது செயப்படு பொருள். ஆகவே ஒரு வாக்கியத்தில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் என்று மூன்று உறுப்புக்கள் உண்டு. இவற்றுள் செயப்படு பொருள் சில வாக்கியங்களில் வாராது. சில வாக்கியங்களில் எழுவாய் மறைந்திருப்பது உண்டு. அதற்குத் தோன்றா எழுவாய் என்று பெயர்.

ஜவஹர் ஜினிவா நகரை அடைந்தார். அவர் இனிது வாழ இறையருளை வேண்டுவோமாக

இவ் வாக்கியங்களில் எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் இவை எனக் கூறுக.

## 2. உயிர்த் தொண்டு !

[திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்]

மாணவ மணிகளே!

நீங்கள் வாழ்கின்ற காலம் இந்தக் காலமா? அந்தக் காலமா? எந்தக் காலம்? நீங்கள் வாழ்கின்ற காலம் நெருக்கடியான காலம். உடை கிடைப்பது, சோறு கிடைப்பது அரிதாயிருக்கிற காலம். சில மாணுக்கர்கள், 'பரீட்சை இல்லாத காலம் வருமா?' என்று கூட எண்ணலாம். 'பரீட்சை ஒழிந்தால் ஒரு பெரிய சனியன் ஒழிந்தது' என்று எண்ணும் மாணுக்கரும் இருக்கலாம்.

மாணவ மணிகளின் உடல் பெரிதும் எலும்பும் தோலுமாகவே இருக்கக் காண்கிறேன். மாணவர்களின் உடல் நன்ருக இருக்க வேண்டும்; எலும்பும் தோலுமாய் இருத்தல் கூடாது. அழகை விரும்பாத மாணுக்கர்கள் உண்டோ? அழகை விரும்பாதார் யார்? தெய்வம் என்ருல் அழகு எனலாம்.

அந்தக் காலம் போற்றற்கு உரியதா? இந்தக் காலம் போற்றற் குரியதா?

வயது முதிர்ந்த என்னைப்போன்ருேர், நாட்டுப் புற அழகைத்தான் பாராட்டிப் பேசுவார்கள். நாட்டுப்புறங்களிலே உள்ள சிறுவர்கள், அழகிய கட்டிடங்களிலே கல்வி பயில்வதில்லை. கிராமத்திலுள்ள சிறுவர்கள், கல்வி அறிவிலே சிறந்தவர்களாக இல்லாதிருக்கலாம். ஆனல் உடலோம்பும் திறத்திலே அவர்கள் வல்லவர்கள்.

மாடுமேய்த்து, ஏர் உழுது, ஏற்றம் இறைத்து அவர்கள் அழகிய உடலைப் பெற்றிருக்கிறார்கள். உடலோம்பும் திறத்தினை, அவர்களிடமிருந்து நீங்கள் கற்றுக் கொள்ளவேண்டும். மற்றவற்றை அவர்கள், உங்களிடம் கற்றுக்கொள்ள வேண்டும். ஒரு கலாசாலைக்கு வந்து மாணவர்களின் உடலைப் பரிசோதிக்கும் டாக்டர், 100-க்கு 75 பேர் காச நோயால், எலும்புருக்கி நோயால் பீடிக்கப் பட்டிருக்கிறார்கள் என்றும், இவர்களின் நுரையீரல் சரியாயில்லை என்றும் அறிக்கையைத் தந்து செல்வார். கிராமங்களிலே உள்ள சிறுவர்களைப் பற்றி, டாக்டர்கள் அம்மாதிரியான அறிக்கையைத் தர மாட்டார்கள். யுனானி வைத்தியரிடம் சென்றால், அவர் அல்வா தருவார். தமிழ் வைத்தியரிடம் சென்றால், அவர் லேகியம் தருவார். டாக்டரிடம் சென்றால், அவர் டானிக் தருவார்.

உடல் உரம் பெறுவான் வேண்டிப் பெரும்பாலோர் டானிக் தான் சாப்பிடுகிறார்கள். இந்த டானிக்கை மூன்று வேளைகள் முறையாகச் சாப்பிட்டு விட்டு, பாதம் பருப்பு, பால் இவற்றோடு 6 வேளை ஓட்டலில் காபி, டீ சாப்பிட்டுவிட்டால் உடலில் பல மேறிவிடும் என்று பலர் எண்ணுகிறார்கள். இது தவறு.

உலகத்தில் உயர்ந்த பொருள் எது? சூரிய வெளிச்சம். ஐன்ஸ்டன் என்ற பெரியார், "நாளுக்கு நாள் சூரிய வெளிச்சத்தின் சக்தி அதிகமாகிக் கொண்டே போகிறது" என்று சொல்கிறார். பசிய மரங்களில் உள்ள இலைகளின் மேல் படர்ந்து, அதன் வாயிலாக நம்மீது படும் சூரிய வெளிச்சத்திற்கு அதிக

சக்தி உண்டு. இம்முறையில் சூரிய வெளிச்சம் நம் மீது பட்டால் அழகொழுகும் முருகனாய் ஏன் இருக்க முடியாது ?

டாக்டர் கூன் என்ற பெரியார், சூரிய வெளிச்சம் நம்மீது படுவதை நன்முறையில் பயன்படுத்திக்கொள்வதற்காகத் 'தலையில் பசுமையான நிறமுள்ள துணிகளைக் கட்டிக்கொள்ள வேண்டு' மென்று சொல்லுகிறார். சூரிய வெளிச்சத்திலே உள்ள சக்தியை அறியாமல் - இயற்கை வழியிலே நடவாமல்-லேகியத்தையும், டானிக்கையும் சாப்பிடுவதால் பயன் என்ன ? உடலுக்கு நல்ல காற்று ஏராளமாக வேண்டும். உமிழும்படியான காற்றை ஒருவேளை உள்ளே ஈர்த்து நுரையீரலிலே நிரப்பினால் கறுப்புத் தெரியாது. உடல் சிவந்த மேனியுடன் இருக்கும்.

நான்கு மணி நேரம்வரை நீரிலேயே இருந்து நல்ல பலன்களைப் பெற்றதாக ஒரு ஆங்கிலப் பெண்மணி சொல்லுகிறார். நீரிலும் ஒரு ஒளி உண்டு.

நல்ல காற்றிலே உலவி, நல்ல தண்ணீரை அருந்தி, சூரிய வெளிச்சம் நம் உடலிலே நன்கு படியும்படி வாழ்வோமானால் எந்த நோயும் வராது.

தண்ணீரில் அடிக்கடி மூழ்கி நல்ல பயன்களைப் பெற்று 101 வயதுவரை இருந்த அம்மையாரைப் பார்த்து அவருடைய பேரன், '101 வயதிலே இளம் பெண்ணைப்போல் இருக்கிறாயே' என்று கேலி செய்வானாம்.

நீங்கள் பெரியவர்களானால், 'எப்படி வாழ்வது ?' (How to Live) என்ற ஆங்கிலப் புத்தகத்தை அவ

சியம் படிக்கவேண்டும். நாகரீகமுடன் நாம் அரிசிச் சோறு சாப்பிடுவதாகச் சொல்லப்படுகிறதே-அதில் நாகரீகமே இல்லை எனலாம். தவிட்டைப் போக்கி (Polished Rice) வெண்ணிற அரிசியைச் சாப்பிடு கிறோம். தீட்டிய நல்ல வெள்ளைப் பச்சரிசியை உணவாக்கி, பூனை, நாயிடம் வைத்துப் பாருங்கள். மோப்பம் பிடித்துப்பார்த்து அவை தொடவே தொடா. பூனையும் நாயும் தொடாத அரிசியைத்தான் இன்று நாம் உண்கிறோம்.

இதுபோன்ற அரிசிகளைச் சாப்பிடுவதால்தான், குடல் வாதம் போன்ற நோய்கள் வருகின்றன. ஜப்பானிலே அரிசியைத் தீட்டுவதற் கென்றே சில சட்டங்கள் அமைத்திருக்கிறார்கள். நன்கு தீட்டப் பெறாத அரிசியில்தான் வைடமின் இருக்கிறது. கீரை தின்பதிலே நல்ல சத்துண்டு. கீரைகள் தின்பவனைப் பார்த்து, 'கீரைதின்னி' என்று சிலர் கேலி செய்கிறார்கள். அது தவறு. இளம் மாணாக்கர்களாகிய நீங்கள், நல்ல கீரைகளை நாள்தோறும் புசிக்க வேண்டும்.

'செந்தயிர் கண்டம் கண்டமாக' என்று கம்பன் சொல்லுகிறான். இப்பொழுது பலர், 'தயிர் சாப்பிட்டால் அஜீர்ணம் வருகிற' தென்று சொல்லுகிறார்கள். அது தவறான கருத்து. எலும்புகளுக்கு நல்ல பலனைத் தருவது தயிர் ஒன்றே. பழங் காலத்திலே உடலை ஓம்பல் மிகவும் சிறந்திருந்தது. அதை நீங்கள் கைக்கொள்ள வேண்டும்.

என் ஜாதி, என் மதம் என்ற வெறி ஒழியவேண்டும். இவை ஒழியும் காலம் வந்துகொண்டே இருக்

கிறது. காலையில் எழுந்தவுடன், "உலகம் வாழ்க" என்று சொல்ல வேண்டும். உலகம் வாழவேண்டும் என எண்ணி இறைவனை வழிபடவேண்டும். "உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு" என்று திருமுருகாற்றுப் படையில் வருகிறது. உலகு, உலகு என்ற மொழியை முதலில், வைத்துப் பாடுகின்ற பெருமை பழம் புலவர் களுக்கு உண்டு.

சில மக்களுடைய எண்ணம், கேவலம் இழிந்த நிலையிலே, 'என் ஜாதி', 'என் மதம்' என்று இறுமாப்புடன் செல்கிறது.

இந்தக் காலத்தில் மக்களுடைய குறிக்கோள் எங்கே போகிறது? பதவி, பதவி, பதவிமேல்தான் போகிறது. கவுன்சிலராக வேண்டும், மேயராக வேண்டும், மந்திரியாக வேண்டும், பின்னர்க் கவர்னராக வேண்டும், ராஜாவாக வேண்டும் என்று பலர் எண்ணுகிறார்கள். தலைமை, பதவி இவைகளிலே தான் பலர் ஆசை வைக்கிறார்கள்.

Scout Movement என்ற இயக்கம் என்ன சொல்கிறது? (Service, Service) தொண்டு, தொண்டு. 'ஒருவருக்கொருவர் தொண்டு செய்யுங்கள்' என்று சொல்கிறது. இறைவனை மட்டுமல்ல; மக்களையும் தொண்டால் வழிபடுங்கள். எல்லாரும் தலைவராக வேண்டுமென்றால் சண்டைதான். பிற்காலத்தை உண்டாக்கப் போகிற நீங்கள் தொண்டு செய்யுங்கள். மேயராக வேண்டும், மந்திரியாக வேண்டும் என்று ஆசை வைக்காதீர்கள். மேயராகவும் மந்திரியாகவும் வேண்டாமென்று நான் சொல்லவில்லை. நான் கண்

டிப்பது பதவிப்பித்தை.... அந்தப் பதவி ஆசையைத்தான்.

அதிகாரம் பெறவேண்டும் என்று ஆசைப்பட்டு, அதிகாரத்தைக் கொண்டு துப்பாக்கியால் சுட்டுத் தள்ளுவதும், ஆட்சிப் பீடத்தில் அமர்ந்துகொண்டு பெரும் பதவியிலே இருக்கிறோம் என்ற ஆணவ அதிகாரத் தோரணையில் இறுமாப்புடன் கட்டளையிடுவதும் கூடா. அதிகாரத்திலும் பண்பும், பணிவும் இருக்கவேண்டும். இன்றேல் அதிகாரமும் நிலைக்காது. தொண்டு செய்யவும் இயலாது. நீங்கள் செய்யப் போகும் தொண்டால்தான் உலகம் பண்படைய வேண்டும்.

நீண்ட நாட்கள் உயிர்வாழ வேண்டுமென்று கவிகள் கனவு கண்டார்கள். அந்தக் கனவை நனவாக்கி, நீங்களெல்லோரும், 'நீண்ட நாட்கள் வாழவேண்டும்,' 'நீண்ட நாட்கள் உயிர்த்தொண்டு செய்யவேண்டும்' என்று நான் ஆசைப்படுகிறேன். (தமிழர் நாடு)

அரும்பொருள் :—சனியன் - அதிட்டங் கெட்டது. காச நோய் - ஈளை நோய். எலும்புருக்கி - க்ஷயம். நோன்பு - பட்டினி இருத்தல். பார் - பூமி. திகழ்ந்து - விளங்கி.

## வினாக்கள்

1. கிராமத்துச் சிறுவர்கள் எதில் வல்லவர்கள்?

2. நாட்டுப் புறத்து மக்கள் எவ்வாறு நல்லுடலைப் பெற்றிருக்கிறார்கள்?

3. நகரத்திலுள்ள மாணவர்களைக் குறித்து டாக்டர்கள் வெளியிடும் அறிக்கையில் கூறப்படுவன யாவை?

4. அழகொழுகும் முருகனாவதற்குரிய வழி யாது?

5. நோய் வராமல் தடுப்பதற்குரிய வழி யாது?

6. தண்ணீரில் முழுகுவதால் வரும் நன்மைக்குச் சான்று தருக.

7. இக்கால மக்கள் குறிக்கோள் யாது?

8. தொண்டு முக்கியம்—ஏன்?

பயிற்சி

வாக்கியங்களில் அமைத்தெழுதுக:

குறிக்கோள், தொண்டு, ஆட்சிப் பீடம், உயிர்த் தொண்டு.

இலக்கணம்

வாக்கியங்களைத் தனி நிலை வாக்கியம், தொடர் நிலை வாக்கியம், கலவை வாக்கியம் என்று மூன்றாகப் பிரிக்கலாம்.

ஒரு எழுவாயும் ஒரு பயனிலையும் கொண்டுவரும் சிறிய வாக்கியங்களுக்குத் தனிநிலை வாக்கியம் என்று பெயர்.

ஒரு எழுவாயும் ஒன்றுக்கு மேற்பட்ட பயனிலைகளும் கொண்டு தொடர்ந்து வரும் வாக்கியங்களுக்குத் தொடர் நிலை வாக்கியம் என்று பெயர்.

'நகர வாழ்க்கையில் இத்தகைய கேடுகள் சிலவுண்டு. நகர வாழ்க்கையில் நன்மைகள் அதிகம். நகரத்தில் வாழ்வதே மிகவும் சிறந்தது' இம் மூன்று வாக்கியங்களையும் ஒன்று சேர்த்து, "நகர வாழ்க்கையில் இத்தகைய கேடுகள் சில இருந்தாலும், நன்மைகள் அதிகமாதலால், நகரத்தில் வாழ்வதே மிகவும் சிறந்தது" என்று எழுதுவதற்குக் கலவை வாக்கியம் என்று பெயர். தனிநிலை வாக்கியங்களைக் கலவை வாக்கியமாக்கும்போது, அவற்றிலுள்ள வினை முற்றுக்கள் வினை யெச்சங்களாக மாறும்.

இப் பாடத்திலிருந்து தனி நிலை, தொடர் நிலை வாக்கியங்களுக்கு உதாரணம் தருக.

## 3. படைப்பின் விந்தை

[வித்வான், ஆர். வீரபத்திரன், M.A, L.T]

மாணிக்கம், தன்னைத் திருவனந்த புரத்திற்கு அழைத்துச் சென்று அங்குள்ள புதுமைகள் யாவற்றையும் காட்டுமாறு, தன் தந்தையாரைப் பன்முறை வேண்டிக்கொண் டிருந்தான். வேனிற்கால விடுமுறை தொடங்கியதும், அவன் தகப்பனார் அவனது ஆசையை நிறைவேற்ற எண்ணி, அவனைத் திருவனந்தபுரத்தி லிருக்கும் தம் உறவினர் ஒருவர் வீட்டிற்கு அழைத்துச் சென்று, அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தார். ஒவ்வொரு நாளும் மாலைப் பொழுதில் தந்தையும், மகனும் அப் பட்டினத்தி லுள்ள முக்கியமான இடங்கள், ஆலயங்கள், கடற்கரை முதலியவற்றைக் கண்டு மகிழ்ந்தார்கள். ஒரு நாள் அவர்கள், பூங்கா வனத்தையும், மிருகக் காட்சி சாலையையும் காண்பதற்காகச் சென்றார்கள்.

பூங்காவனத்துக்குள் புகுந்ததும், அது இயற்கைத் தேவியின் நடன சாலையாக விளங்குவதைக் கண்டு அவர்கள் வியந்தனர். சாதாரணமாக எல்லா விடங்களிலும் காணப்படுகிற புற்பூண்டுகளும், செடி கொடிகளுங்கூட, அங்கு உரமிட்டு நீர் பாய்ச்சி வளர்க்கப் படுவதால் செழித்து அடர்ந்து, பச்சைப் போர்வையைப் படியின்மீது விரித்தாற் போன்று பேரழகு பெற்று விளங்கின. இடையிடையே ஓங்கி வளர்ந்த தேக்கு, வாகை, ஆயினி, மஞ்சாடி, சந்தனம் முதலிய மரங்கள் நாற்புறமும் கிளைகளைப் பரப்பி, அடர்த்தியாக இலைகளைத் தாங்கி, பாசிலைப்

பந்தர் வேய்ந்தாற்போலத் தண்ணிழல் செய்தன. இளஞ்சிவப்பு நிறமுடைய தளிரிலைகளும், மஞ்சள், சிவப்பு, நீலம், வெண்மை முதலிய பன்னிறத் தேமலர்களும், பசியஇலைப் பரப்பினிடையே விளங்கித் தோன்றிக் காண்பார் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன.

இத்தகைய இயற்கை வனப்பில் ஈடுபட்டு, ஒவ்வொரு தாவரத்தையும் உற்றுநோக்கி வரும்போது,



மாணிக்கம், ஒரு பலா மரத்தின் கிளை யொன்றில் ஓர் குத்துச்செடி வளர்வதைக் கண்டு, தன் தந்தையாரைப் பார்த்துப் பின் வருமாறு கேட்கத் தொடங்கினான்:

**மாணிக்கம்**: அப்பா! இந்த அதிசயத்தைப் பாருங்கள். ஒரு சிறிய செடி, வேறோர் மரத்தின் மீது உட்கார்ந்துகொண் டிருக்கிறது. அது ஏன் அங்கே இருக்கிறது?

**தந்தை**: அச் செடிக்குத் தரையில் வளர முடியாது; ஏதாவது ஒரு மரத்தைத் தொத்திக்கொண்டு தான் அதனால் வாழ முடியும். இதனால் அதற்குத் "தொத்துச் செடி" என்று பெயர் வழங்குகிறது.

**மா**: தொத்துச் செடிக்கு உணவு எங்கிருந்து கிடைக்கிறது? அது, தான் வளர்கிற மரத்திலிருந்து தானே உணவைக் களவு செய்து எடுக்கவேண்டும்?

**தந்**: இல்லை; இல்லை. அதற்குத் திருட்டுத் தனமே கிடையாது. தன்னைச் சுமந்து நிற்கும் மரத்திற்கு அது நன்றிகெட்ட செயல் ஒன்றும் செய்வதில்லை. அது தானே வருந்தி உழைத்துத் தனது உணவைத் தேடிக்கொள்கிறது.

**மா**: இது மிக ஆச்சரியமாகத்தா னிருக்கிறது. இச் செடி, தன்னைத் தாங்கும் மரத்திலிருந்தும் உணவை எடுப்பதில்லை; பூமியோடு தொடர்புற்றிருக்கவும் இல்லை; அங்ஙனமாயின், இது தனது உணவை எங்கிருந்து, எவ்விதம் தேடிக் கொள்ளுகிறது?

**தந்**: தாவரங்களின் உணவிற்கு **மாப்பொருள்** என்று பெயர். அதனை அவைகளே பக்குவஞ் செய்து கொள்ளுகின்றன. மாப்பொருளை உண்டுபண்ணுவதற்குத் தண்ணீரும் கரியமில வாயுவும் அவசியம். தண்ணீரை வேர்கள் பூமியிலிருந்து எடுத்து இலைகளுக்கு அனுப்பிக் கொடுக்கின்றன. கரியமில

வாயு நம்மைச் சூழ்ந்துள்ள காற்றில் சிறிய அள வினதாகக் காணப்படுகிறது. இலைகள், அதனை எடுத்துத் தண்ணீரோடு கலந்து, இரசாயன முறைப் படி மாப்பொருளாக மாற்றுகின்றன. இதுவே பெரும்பாலான தாவரங்களிலும் காணப்படும் முறை. ஆனால், தொத்துச் செடிக்குப் பூமியிலி ருந்து தண்ணீரை எடுக்க முடியாதாகையால், அது காற்றில் ஆவி வடிவத்தில் கலந்திருக்கும் தண் ணீரை எடுத்துத் தனது இலைகளின் உதவியால் மாவைப் பக்குவஞ் செய்து கொள்ளுகிறது.

மா: காற்றிலிருந்து தண்ணீரை அது எங்ஙனம் உட்கொள்ளுகிறது ?

தந்: அதன் அடிப் பாகத்திலிருந்து, இளம் பச்சை நிறத்தில் சில விழுதுகள் தோன்றி, காற் றில் தொங்கிக் கொண்டிருப்பது தெரிகிறதா? அவைதாம் அச் செடியின் வேர்கள். உட்பாகம் கடற் பஞ்சு போல ஆயிரக் கணக்கான காற்றறை களை உடையதாக இருக்கின்றது. மை யொற்றுங் காகிதம் மையை விரைவில் உறிஞ்சி எடுத்துக் கொள் வதைப்போல, இத் தொலியும், காற்றிலிருக்கும் நீராவியை உறிஞ்சி எடுத்து, இலைகளுக்கு அனுப் பிக் கொடுக்கிறது.

மா: அப்பா! இது ஒரு ஆச்சரியமான செடி தான்! இனி மிருகக்காட்சி சாலைக்குச் செல்வோம் வாருங்கள். அதோ கூட்டிற்குள்ளிருந்து தலையை வெளியே நீட்டிக்கொண்டிருக்கிறதே, அது என்ன மிருகம் ?

தந் : அதுதான் ஒட்டகம். பெர்ஸியா, அரேபியா, சிரியா, வட ஆப்பிரிக்கா முதலிய நாடுகளில் ஒட்டகம் மிகுதியாக வசிக்கிறது. அங்குள்ள பெரிய பாலை வனங்களைக் கடந்து செல்வதற்கு, அந் நாட்டார் இதனையே வாகனமாக உபயோகிக்கிறார்கள்.

மா : அதன் கால்கள் ஏன் நீளமுடையவையாய் இருக்கின்றன ?

தந் : மணல்வெளிகளில் விரைவாக ஓடுவதற்கு அனுகூலமாக, அதன் கால்கள் நீளமாக இருக்கின்றன.

மா : மணலில் ஓடும்போது, அதன் பாதங்கள் புதைந்து விடாவோ ?

தந் : அதன் பாதங்களின் அடிப் பாகத்தை உற்றுப் பார். மெத்தைபோன்ற ஓர் சதைத்திரள் காணப்படுகிற தல்லவா ? ஒட்டகத்தின் கால் மணலிற் புதைந்து விடாதபடி அது காத்துக் கொள்ளுகிறது.

மா : அதன் கழுத்து அக் கால்களை ஒத்த நீளமுடையதாக இருப்பது எதற்காக ?

தந் : ஒட்டகம், புல், தழை முதலியவற்றைத் தின்று ஊற்று நீரைப் பருகுகிறது. பூமியில் வளரும் புல்லை மேய்வதற்கும், மரக்கிளைகளிலிருந்து இலைகளைப் பறித்துத் தின்பதற்கும், ஊற்றுநீரைக் குடிப்பதற்கும் நீள்மான கழுத்து இன்றியமையாத தல்லவா ? கால்கள் நீளமாகவும், கழுத்து மட்டும் குட்டையாகவும் இருந்தால், அதற்குப் பூமியிலிருந்து எந்தப் பொருளையாவது எடுத்துத் தின்ன

முடியுமா? அதனால்தான், கால்களுக்குப் பொருத்தமான கழுத்து, அதற்கு அமைந்துள்ளது.

மா: பாலை நிலத்தில் ஒட்டகத்திற்குப் புல்லும், தண்ணீரும் எங்கிருந்து கிடைக்கும்?

தந்: பாலை நிலத்தில் ஆங்காங்கே சிறு சோலைகள் காணப்படும். அச் சோலைகளில் புல்லும் தண்ணீரும் கிடைக்கும். மேலும் ஒட்டகத்திற்குச் சில நாட்களுக்குப் போதுமான உணவையும், தண்ணீரையும் சேகரித்து வைத்துக்கொள்ளுவதற் கேற்ற உறுப்புக்கள் அதன் உடலில் அமைந்துள்ளன.

மா; அதோ! அந்த மரத்தின் நிழலில், அடிமரத்தோடு சங்கிலியால் பிணிக்கப்பட்டு நிற்கும் யானையைப் பார்க்கலாம் வாருங்கள்.

அப்பா! யானையின் கால்கள் நீளமாக இருக்கின்றன. ஆனால் கழுத்துக் குட்டையாக அல்லவா இருக்கிறது?

தந்: ஆம். உண்மைதான். அதற்காகத்தான் அதற்கு இறைவன் தும்பிக்கையைக் கொடுத்திருக்கிறான். அதன் உதவியால், யானை தன் உணவை எடுத்து வாயில் போட்டுக்கொள்ளுகிறது.

மா: மற்ற மிருகங்களுக்கு இத் தும்பிக்கை இல்லையே. யானைக்குமட்டும் இது எங்ஙனம் தோன்றியுள்ளது?

தந்: நமக்கு மூக்கும், மேலுதடும் இருக்கின்றன வல்லவா? இவ்விரு உறுப்புகளும் யானைக்கு ஒன்றாகப் பொருந்தி நீண்டு வளர்ந்து தும்பிக்கையாகத்

தொங்குகின்றன. அதன் நாசித் துவாரங்க ளிரண்டும் தும்பிக்கையின் நுனியில் அமைந்துள்ளன. அதற்கு மேல் உதடு என்று தனியாக வேறில்லை.

மா: ஆடு மாடுகளுக் கெல்லாம் தலையில் உச்சியி லிருந்து கொம்புகள் முளைக்கின்றன. ஆனால், யானையின் கொம்புகள் அதன் வாய்க்குள்ளிருந்து வெளி வருவது எதனால்?

நந்: யானையின் கொம்புகள் என்று நாம் சொல்பவை உண்மையில் அதன் பற்களேயாம். நமது மேல்வாயில் முன் பக்கத்தில் நான்கு உளி போன்ற பற்கள் இருக்கின்றன வல்லவா? யானைக்கு அவற்றைப் போல இரண்டு பற்கள் உள்ளன. அவ் விரு பற்களும் தந்தமாக நீண்டு வளர்ந்திருக்கின்றன.

மா: நீண்டு வளர்ந்த தந்தங்கள் யானைக்கு எங்ஙனம் பயன் படுகின்றன?

நந்: கிழங்கு, வேர் முதலியவற்றை அகழ்ந் தெடுப்பதற்கும், மரங்களை வேரோடு குத்தித் தள்ளு வதற்கும், கிளைகளையும் மடல்களையும் சுமந்து செல்வ வதற்கும், இவை எல்லாவற்றையும்விட முக்கியமாகத் தன்னை எதிர்த்துத் தாக்க வரும் வேங்கை முதலிய கொடிய விலங்குகளைக் குத்தி வீழ்த்துவதற்கும் இக் கொம்புகள் இன்றியமையாதவை. தொத்துச் செடிக் குத் தொங்கும் விழுதுகளும், ஒட்டகத்திற்கு நீண்ட காலும், நீண்ட கழுத்தும், உணவையும் நீரையும் சேகரித்து வைப்பதற்கேற்ற உள்ளுறுப்புக்களும் எங்ஙனம் அவசியமோ, அங்ஙனமே யானையின் வாழ்க்கைக்குத் துதிக்கையும், கூர்த்து நீண்ட

கொம்புகளும் அவசிய மாகின்றன. ஒவ்வொரு உயிர்ப் பொருளின் வாழ்க்கைக்குத் தேவையான உறுப்புக்களை யெல்லாம் இயற்கையே படைத்து உதவுகின்றதைப் பார்த்தாயா?

**மா:** ஆகா! படைப்பின் விந்தையே விந்தை!

**தந்:** மாணிக்கம்! நேரமாகி விட்டது போய் வரலாம் வா.

**அரும்பொருள்:**—விந்தை - அதிசயம். அடர்ந்து - நெருங்கி. படி - பூமி. இயைந்து - பொருந்தி. தொத்துதல் - பற்றுதல். முரண் - வேறுபாடு. பிணித்தல் - கட்டுதல். மருங்கு - பக்கம். அகழ்ந்து - தோண்டி.

## வினாக்கள்

1. மாணிக்கமும் அவன் தந்தையும் கண்ட பூங்காவனக் காட்சிகளை எழுதுக.

2. தொத்துச் செடி — பெயர்க் காரணம் கூறுக.

3. அது காற்றில் கலந்துள்ள நீரை எவ்வாறு உட்கொள்ளுகிறது?

4. ஒட்டகத்தின் கால்கள், பாதம் இவற்றின் அமைப்பை விளக்குக.

5. ஒட்டகத்தின் கழுத்து நீண்டிருப்பது ஏன்?

6. யானைக் கொம்புகள் என்பது எவற்றை? அவற்றின் உபயோகங்கள் யாவை?

## பயிற்சி

பிரித்தெழுதுக:

பாசிலை, தண்ணிழல், பன்னிறம், தீந்தேன், இன்னிசை, வெண்ணிறம்

## இலக்கணம்

நேர் கூற்று, அயற் கூற்று, "மாணிக்கம்! நேரமாகி விட்டது; போய் வரலாம் வா" என்று கூறினார் தந்தை. இவ் வாக்கியத்தில் மேற்கோள் குறிகளிட்ட சொற்கள் தந்தையால் கூறப்பட்டவை. இம் மாதிரி கூறுவது நேர் கூற்று எனப்படும். மாணிக்கத்தை நேரமாகி விட்டமையால் போய் வரவேண்டும் என்று அழைத்தார் தந்தை—என்று அதை மாற்றி யமைத்தால் அது அயற் கூற்றாகும்.

இப் பாடத்திலிருந்து நேர் கூற்றிற்கும், அயற் கூற்றிற்கும் உதாரணங்கள் தருக.

### சொல் அல்லது பதம்

சொற்கள் பகுபதம், பகாப் பதம் என இருவகைப் படும். பகுபதம்: பகுதி, விகுதி முதலிய உறுப்புக்களாகப் பகுக்கக் கூடிய பதம் பகுபதம் எனப்படும். அது பெயர்ப் பகுபதம், வினைப் பகுபதம் என இருவகைப் படும்.

உதாரணம்—அறிஞன் (அறி + ஞ் + அன்) பெயர்ப் பகுபதம். உண்டான் (உண் + ட் + ஆன்) வினைப் பகுபதம்.

பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என்பன பகுபத உறுப்புக்களாம். பகுதி: பகுபதத்தின் முதலில் நிற்கும் உறுப்பு, முதல் நிலை அல்லது பகுதி எனப்படும். (உதாரணம்:- வந்தான் - வா - பகுதி, உண் டான் - உண் - பகுதி)

விகுதி: பகுபதத்தின் இறுதியில் நிற்கும் உறுப்பு, இறுதிநிலை அல்லது விகுதி எனப்படும். (உதாரணம்:- கலைஞன் - அன் - விகுதி)

இடைநிலை: பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நிற் கும் உறுப்பு இடை நிலை எனப்படும். (உதாரணம்:- அறிஞன் - ஞ் இடைநிலை, உண்டான் - ட் இடைநிலை)

பகாப்பதம்: பகுதி, விகுதி முதலிய உறுப்புக்களாகப் பிரிக்க முடியாத சொற்களுக்குப் பகாப்பதம் என்று பெயர். (உதாரணம்:- கல், மண்)

# 4. இமயமலை

[ ஈ. பண்டார நம்பியார் ]

இந்தியாவிற்குச் சிரசென விளங்குவது இமய மலை. இம் மலையின் உயர்ந்த பாகங்கள் எப்பொழுதும் பனியால் மூடப்பட் டிருப்பதால் 'பனி மலை' என்று பொருள்படும் 'இமயமலை' என்னும் பெயர் இதற்கு வழங்குவதாயிற்று. 'இமம்' என்ற சொல்லுக்குப் 'பனி' என்பது பொருள். இதனைப் 'பனி வரை, இமாசலம், இமயம், இமாலயம்' என்றெல்லாம் கூறுவதுண்டு.

இமயம் உலகிலுள்ள மலைகள் யாவற்றிலும் மிக உயர மானது. இம்மலை, கீழ் மேலாக இரண்டாயிரம் மைல் நீண்டு பிறைச் சந்திர வடிவில் வளைந்து கிடக்கின்றது. இதன் அகலம் எவ்விடத்திலும் இரு நூறு மைல்களுக்குக் குறைவாயில்லை. அஸ்ஸாமிலும், வேறு சில இடங்களிலும் ஐந்நூறு மைல்கள் வரை அகன்று கிடக்கிறது. இதன் உயரம் ஐந்து மைல்கள் என்று கணக்கிட் டிருக்கின்றனர்.

இமயமலையில் உலக மலைகள் யாவற்றிலுமுள்ள சிகரங்களைக் காட்டிலும் உன்னதமான சிகரங்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள் எவரெஸ்ட் மிக உயரமானது. அது கடல் மட்டத்திலிருந்து 29,000 அடி உயர முடையது. இன்னும் காஞ்சன சிருங்கம், தவளகிரி முதலிய பல சிகரங்கள் இம் மலையில் உண்டு. இச் சிகரங்களின் உச்சியை அடைந்து வெற்றிக் கொடி நாட்ட விரும்பி

இத்தாலியிலும், ஜெர்மனியிலும், இங்கிலாந்திலு மிருந்து ஆண்டு தோறும் வீரர்கள் பலர் வந்த வண்ணமாக இருக்கின்றனர். ஆனால், இதுவரை யிலும் இத் துறையில் வெற்றி கண்டவர் யாருமிலர். இம் மலை அனைவருடைய முயற்சியையும் தோல்வி யுறச் செய்து வெற்றிக் களிப்புடன் தன்னில் ஒப்ப தும் மிக்கதும் இலதாய் இலங்குகின்றது. என்று னும், இம்முயற்சி இன்னும் நடந்து கொண்டுதான் இருக்கின்றது.



இமயமலை ஒரு தனி மலையன்று. பல மலைத் தொடர்களின் அடுக்கென்றே அதனைக் கூறுதல் வேண்டும். அவைகள் பல்வேறு இடங்களில் பல பல பெயர்களோடு வழங்குகின்றன. அவை அனைத் திற்கும் பொதுவாக வழங்கும் பெயர் இமயமலை என்பது.

இம் மலை இந்திய நாட்டிற்கு வற்றா வளத்தை வாரி வழங்குகின்றது. இம் மலையிலிருந்துதான்

பாரத நாட்டை ஊட்டி வளர்க்கும் சிந்து, கங்கை, யமுனை, பிரம்மபுத்திரா முதலிய புனித நதிகள் தோன்றுகின்றன. பிற நாடுகளின் வளத்திற்கும் இம் மலை உதவுகின்றது. துருக்கி ஸ்தானத்தில் பரந்து பாயும் சர்டேரியா, ஆமுடேரியா என்னும் நதிகள் இம் மலையின் வட மேற்கில் உற்பத்தியா கின்றன. பர்மா நாட்டில் வளம் கொழிக்கும் மீகாங், சால்வின், ஐராவதி என்னும் நதிகளும் இம் மலை யின் வட கிழக்குப் பகுதியிலிருந்து தான் தோன்று கின்றன. மத்திய ஆசியாவில் செல்லும் 'தாரிம்' என்னும் நதியும் இமயத்தின் ஒரு பகுதியான கார கோரம் மலைத் தொடரிலேயே உற்பத்தி யாகின்றது.

இம் மலை சிறிய இமயம், பெரிய இமயம், எல்லை கடந்த இமயம் என்று மூன்று பிரிவுகளுடைய தாக இருக்கிறது. பெரிய இமயம் என்றைக்கும் உருகாத பனிக் கட்டியால் மூடப்பட் டிருக்கும். இதன் தென் சாரலில் திருக்கேதாரம், பதரிகா சிரமம், கங்கோத்தரி, யமுனோத்தரி, அமர நாதம், பசு பதி நாதம் முதலிய ஆலயங்கள் பல அமைந்துள் ளன. இவற்றைத் தரிசிப்பதற்கு ஆண்டு தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் சென்று வருகின்றனர்.

இந்துக்கள் சிவ பெருமானின் உறைவிடம் என்று கருதுகின்ற கயிலாயம் எல்லை கடந்த இம யத்தில் இருக்கின்றது. கயிலாயத்தின் அருகில் 'மானச சரோவரம்' என்னும் அழகிய ஏரி ஒன்று இருக்கின்றது. இது உலகிலுள்ள ஏரிகள் அனைத் திலும் அழகு மிக்கது என்று உலகம் சுற்றியவர் கள் கூறுகின்றனர். கயிலாயமும் மானச சரோவர

மும் சேர்ந்து 'கௌரி சங்கர்' என்று கூறப்படும். கயிலாயத்தின் மீது இந்திய மக்கள் கொண்டுள்ள பக்தி இணையற்றது. ஆதலின் எத்தகைய சிரமத்தையும் பாராது ஆண்டு தோறும் மக்கள் பலர் சென்று கயிலையைத் தரிசித்து வருகின்றனர்.

இமயமலையை இறைவனின் உறைவிடம் என்று இந்திய மக்கள் கொண்டாடுவதைப் போல், வெளி நாட்டினர் இயற்கை அன்னையின் இல்லம் என்று மதிக்கின்றனர். வெள்ளியை உருக்கி வார்த்தாற் போன்ற பனிப் பரப்பும், நிர்மலமான நீலவானும் பார்ப்பவர்களைப் பரவசப் படுத்துகின்றன. கதிரவன் தன் செங் கதிர்களை வீசும்போது இமயம் பொன்னிறம் பெற்று விளங்குவது காண்பவர் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்கின்றது. உலகம் முழுவதும் காணப்படும் தாவரங்களையும், பறவைகளையும், மிருகங்களையும் ஒருங்கே கொண்டு விளங்கும் இமயத்தின் எழிலைக் கண்டு களிப்புறாதவர் யாரே!

இமயமலையின் அடிவாரத்தில் நேபாளம், பூதான் முதலிய சுதந்திர நாடுகள் சிறந்து விளங்குகின்றன. கோடைக் காலத்தில் மக்கள் சுகத்திற்காகச் சென்று வசிக்கும் இடங்கள் பல இம் மலை அடிவாரத்தில் இருக்கின்றன. அவற்றுள் டார்ஜிலிங், சிம்லா முதலிய இடங்கள் முக்கியமானவை. இம் மலையில் கடல் மட்டத்திலிருந்து 17,000 அடி வரை உயர்ந்த இடங்களில் மக்கள் வசிக்கிறார்கள். அதற்கு அப்பாலுள்ள இடங்களில் சித்தர்களும் பக்தர்களும் வசிப்பதாக நம்மவர்கள் நம்புகிறார்கள்.

இம் மலையில் பல கணவாய்கள் காணப்படுகின்றன. அவற்றுள் கைபர் கணவாய் வரலாற்று முக்கியம் பெற்றுள்ளது. இக் கணவாயின் வழியாகப் பிற நாட்டினர் பலர் இந்தியாவில் பிரவேசித்ததாக வரலாற்று நூல் கூறுகின்றது.

பண்டைக் காலத்தில் தமிழ் வேந்தர் பலர், இமயம் வரை படையெடுத்துச் சென்று வடநாடு முழுதும் ஆணை செலுத்தினர் என்ற செய்தி சங்க இலக்கியங்களால் அறியப்படுகின்றது. அதற்கு அறிகுறியாக அவர்கள் இமயமலையில் தமது இலச்சினையைப் பொறித்துள்ளனர். நெடுஞ் சேரலாதன் என்ற சேர மன்னன் 'விடர்ச் சிலை பொறித்தவன்' என்று புகழப்படுகிறான். இதிலிருந்து இவன் இமயமலை வரை சென்று வெற்றி பெற்று அம் மலையில் தன் இலச்சினையாகிய வில்லைப் பொறித்து வந்தான் என்று தெரிகிறது. இவ்வாறே திருமாவளவன் என்ற சோழ மன்னன் ஒருவனும் இமயத்தில் தன் புலிக் கொடியைப் பொறித்து மீண்ட செய்தி அறியப்படுகிறது. பாண்டியன் இமயத்தில் மீன் முத்திரையைப் பொறித்த வரலாறுமுண்டு. இவ்வாறு மூவேந்தர் வெற்றிச் சின்னங்களையும் தாங்கிக் கொண்டு இமயம் வானுற வோங்கி வளம் பெற்று நிற்கின்றது.

**அரும்பொருள் :—** சிரசு - தலை. அகலம் - வீதி. சிகரம் - மலை உச்சி. புனித - பரிசுத்தமான. வரலாற்று நூல் - சரித்திர நூல். ஆணை - ஆட்சி. இலச்சினை - அடையாளம். எழில் - அழகு

## வினாக்கள்

1. இமயமலை - பெயர்க் காரணம் கூறுக.

2. இமயமலையின் வேறு பெயர்கள் யாவை?

3. இமயமலையின் கிடப்பைக் கூறுக.

4. இமயமலையி லுள்ள உன்னத சிகரம் எது? அதன் உயரம் என்ன?

5. இமயத்தில் உற்பத்தியாகும் நதிகள் யாவை?

6. இம் மலையின் மூன்று பிரிவுகள் யாவை?

7. இந்துக்கள் இம் மலையை எப்படிக் கொண்டாடு கின்றனர்?

8. இம் மலை அடிவாரத்திலுள்ள நாடுகள் யாவை?

9. தென்னாட்டு மன்னர் தம் வீரம் விளங்க முன் னாளில் செய்ததென்ன?

## 5. காற்பந்து விளையாட்டு

[எஸ். குமரவேல் M.A.,L.T.]

**மணி:** நண்ப! எங்கு விரைவாகச் செல்கின்றாய்? "ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு" என்பதற் கொப்ப, செல்லும் விரைவில் அருகில் நிற்கும் நண்பனைப் பாராதது போலும் செல்கிறாயே!

**முத்து:** மணி! இன்று எமது பள்ளி மாணவர்களுக்கும், 'சென்ற் தாமஸ்' பள்ளிமாணவர்களுக்கும், ஒரு காற்பந்துப் போட்டி விளையாட்டு நடைபெறப் போகின்றது. திறம்பெற்ற பலர் ஆடப் போகின்றனர். நீயும் அவசியம் வருதல் வேண்டும். போகலாம் வா!

**மணி!** காற்பந்து விளையாட்டு முறையைப்பற்றி, நான் இதுவரையில் ஒன்றும் தெரிந்துகொள்ளவில்லையே! தெளிவாக விளக்குவாயேல் வருகிறேன்.

[நீண்டதொரு ஊதுகுழல் ஓசை கேட்கின்றது.]

**முத்து:** நண்ப! விளையாட்டு ஆரம்பமாகும் நேரமாயிற்று. ஆட்டத்திற்குத் தயாராகுமாறு ஆடுவோரை அழைக்கும் கட்டளைதான் அந்த ஊதுகுழலோசை.

[இருவரும் விளையாட்டு இடம் நோக்கி விரைகின்றனர்.]

**மணி:** இது என்ன? மாணவர் பலரும் அணிவகுத்தாற் போன்று நிற்கின்றனரே! இதன் கருத்தென்ன?

**முத்து:** ஒவ்வொரு பக்கத்திற்கும் பதினொருபேர் உளர். (ஒரு பக்கத்து மாணவர்களைச் சுட்டிக்காட்டி)

இதோ நிற்கும் மாணவர்கள்தாம் எமது பள்ளிமாண வர்கள். அருகில் இருந்து உற்று நோக்குவோ ரெல்லாம், அவரை உற்சாகப் படுத்தி, வெற்றி தேடு வதற்காக, மூலைந்து நிற்கும் அவரது பள்ளி நண்பர் கள். பார்! அதோ! பந்தைக் காலால் எடுத்துக் கொண்டு பாய்ந்து செல்லும் மாணவன்தான் முன்



வரிசை நடுவிலாடும் எமது கோவிந்து. அவனைத் தொடர்ந்து இருபுறங்களிலும் ஓடுவோர்தாம், முன் வரிசை உள் விளையாடுவோர். பந்தை நோக்கிக் கொண்டே மைதானத்தின் இரு அத்தங்களிலும் ஓடுவோர், முன் வரிசை வெளியி லாடுவோர். இவர் கள் ஐவரையும் பொதுவாக முன்வரிசையி லாடுவோர்

என்று கூறலாம். பந்தைக் கொண்டு சென்று, எதிர்ப் பக்கத்து அணியைச் சிதைத்து, பந்தைக் குறிக்கோளில் செலுத்த வேண்டியது இவர்களது வேலை. இவர்களுக்குப் பின்னால் மூன்று வரிசைகளாக நிற்கிறவர்கள், தங்களைக் கடந்து எதிர்ப் பக்கத்திலுள்ளோர் பந்தைக் கொண்டு செல்லாதவாறு தடுப்பதற்காக நிற்கக் கூடியவர்கள்.

மணி: நண்ப! குறிக்கோள் என்று கூறினாயே அதன் பொருளென்ன?

முத்து: (மைதானத்தின் அந்தத்தில் நிற்கும் இரு கம்பங்களைச் சுட்டிக்காட்டி) அதோ நிற்கும் அந்த இரண்டு கம்பங்கள்தாம் குறிக்கோள் கம்புகள். அவற்றினுள் பந்தைச் செலுத்தினால், செலுத்தியவர் ஒரு 'கோள்' பெற்றவராகக் கருதப்படுவர்.

(பந்தைக் கொண்டு சென்ற கோவிந்து, தன்னை எதிர்த்து வந்த ஒருவனை ஏமாற்றிக் கடத்திச் சென்று, பின் பலர் தன்னை எதிர்த்து வரவே, அவர்களைக் கடத்திச் செல்வது முடியாது என்று கருதி எதிர்ப்பின்றி, பந்தை எதிர்நோக்கி வெளிப்புறத்து நிற்கும் தனது நண்பன் வேலுவிடம் தூக்கிவிடுகிறான். எதிர்ப்பக்கத்துள்ளோர் சிலர் வேலுவை நோக்கி ஓடுகின்றனர். வேலுவும் தன்னை நோக்கி வந்த பந்தைத் தன் தலையால் தாங்கிக் காலால் மிதித்துப் பிடித்து உருட்டிக்கொண்டு எதிர்ப் பக்கத்துக் குறிக்கோளை நோக்கிப் பாய்ந்து செல்கிறான்.)

மணி: நண்ப! அதிசயமாக இருக்கின்றதே! காற்பந்து விளையாட்டில் தலைகொண்டு தடுத்தல் தகுமா?

**மூந்து:** தலைகொண்டு தடுத்தல் பந்து விளையாட்டில் சிறந்ததொரு முறை. கைகளைத் தவிர மற்றெல்லா உறுப்புக்களாலும் பந்தைத் தடுக்கலாம். பந்தைக் குறிக்கோளுக்குள் புக வொட்டாதவாறு தடுத்து, மைதானத்திற்கு வெளியே செலுத்தியமையால், எதிர்ப்பக்கத்தார் மூலையிலிருந்து அடித்துவிடும் பந்தைத் தலையால் தடுத்துக் குறிக்கோளினுள் செலுத்து முறை, கண்டு வியக்கத்தக்க தாகும்.

(பந்தைக் கொண்டு சென்ற வேலு, எதிர்ப்பக்கத்து நடுவில் நின்று ஆடும் ஜாண், தன்னை எதிர்த்துவரவே, அவனைக் கடத்திச் செல்வது இயலாது எனக் கருதிச் சிறிது தயங்குகிறான். ஜாண் எதிர்ப்பக்கத்துத் தலைவன்; பின்வரிசை நடுவில் நின்று விளையாடுவதில் தனக்கு நிகரில்லை எனப் பெயர் பெற்றவன்; எத்தனையோ விளையாட்டுக்களில் எதிர்ப்பைச் சாதுரியமாகச் சமாளித்துத் தன் பக்கத்திற்கு வெற்றி கண்டவன். ஒரு கணம் தயங்குகின்றான் வேலு; அங்குமிங்கும் நோக்குகின்றான். இதற்கிடையில் கோவிந்தும், உள் விளையாடுவோரில் வேறொரு சிறுவனும் பந்தை எதிர் நோக்கிக் குறிக்கோளின் எதிர்ப்புறத்தில் வந்துவிட்டனர். வேலுவின் முகத்தில் ஒரு மகிழ்ச்சிக்குறி தோன்றுகின்றது. உடனே அவன், பந்தைக் கோவிந்தினிடம் தட்டிவிடுகின்றான். ஜாணின் முகத்தில் ஏமாற்றம். அருகில் நிற்போர் ஆரவாரஞ் செய்து கோவிந்தினை ஊக்குகின்றனர். அவனும், மற்றுள்ளோர் தன்னிடத்தில் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு மாற்றமில்லாது, பந்தைக் கொண்டுசென்று, எதிர்ப் பக்கத்திலிருந்து தடுப்பதற்கு வந்த இருவரையுங் கடந்து சென்று குறிக்கோளை நெருங்கிவிட்டான். குறிக்கோளில் நிற்போன் பந்தைத் தடுப்பதற்குத் தயாராகிவிட்டான்.

கண் இமைப்பதற்குள் விளையாட்டைக் கண்காணிப்போரது ஊதுகுழலிலிருந்தும் ஒரு ஓசை புறப்படுகின்றது. பந்து குறிக்கோளில் சென்றுவிட்டது. மாணவர்களது ஆரவாரத்திற்கோர் அளவில்லை)

**மணி:** *மிகவும் சாமர்த்தியமாக ஒரு கோள் எடுத்து விட்டானே! இனி மேல் என்ன?*

**முத்து:** *இன்னும் இது போன்று சுமார் ஐம்பது நிமிடங்கள் விளையாட்டு நடைபெறும். அதற்கிடையில் இது போன்ற 'கோள்கள்' எந்தப் பக்கத்தினர் கூடுதலாக எடுக்கிறார்களோ, அவர்களே வெற்றி பெற்றவராகக் கருதப்படுவர்.*

(மீண்டும் விளையாட்டுத் தொடங்குகின்றது. எதிர்ப் பக்கத்துள்ளோர் தாங்கள் பெற்ற கோளைத் திரும்பக் கொடுப்பதற்குத் தங்களால் இயன்றவரை முயல்கின்றனர். அவர்களது எதிர்ப்பைப் பின் வரிசையில் நிற்போர் அலட்சியமாகத் தடுத்து நிற்கின்றனர். இவ்வாறு அதற்கு மேல், 'கோள்' ஒன்றுமின்றிக் கண்காணிப்போரது ஊது குழலினின்றும் புறப்பட்ட நீண்ட ஓசையோடு விளையாட்டு முடிகின்றது. மாணவர்கள் யாவரும் சரேலென்று மைதானத்திற்குள் புகுந்து, தங்களுக்கு வெற்றி தேடித் தந்த கோவிந்தனையும், அவனுக்குத் துணை நின்ற வேலுவையும், மற்றுமுள்ளோரையும் பாராட்டுகின்றனர்.)

**முத்து:** *விளையாட்டு இத்துடன் முடிந்தது. இனி நாம் திரும்பலாம்.*

**மணி:** *இன்று நடந்த விளையாட்டால் நான் மிகவும் இன்புற்றேன். இதுபோன்ற விளையாட்டுக்*

கள் இனி நடைபெறுமானால், என்னையும் அழைத்துச் செல்.

[இருவரும் வீடு திரும்புகின்றனர்.]

## வினாக்கள்

1. கால் பந்தாடுவோரை ஆட்டத்திற்குத் தயாராகுமாறு கட்டளை இடுவது எங்ஙனம்?

2. கால் பந்தாட்டத்தில் பக்கத்திற்கு எத்தனை பேர் நிற்கின்றனர்?

3. ஒவ்வொரு பக்கத்தி லுள்ளோரும் எவ்வாறு அணிவகுத்து நிற்கின்றனர்?

4. குறிக்கோள் என்றால் என்ன?

5. கால் பந்து விளையாட்டில் கண்டு வியக்கத் தக்க முறை யாது?

6. கோவிந்து, வேலு இவர்களது விளையாட்டுத் திறமையை விளக்குக.

## பயிற்சி

ஒரே வாக்கியமாக எழுதுக.

1. கோவிந்து இவர்களுள் ஒருவன்.
2. அவன் சாதுரியமாக விளையாடினான்.
3. அவன் அன்றைய வெற்றிக்குக் காரணமானான்.

## இலக்கணம்

செய்கின்ற, ஓடி, உண்டான்—இவை மூன்றும் வினைச் சொற்கள். இவற்றில் முன்னைய இரண்டும் முற்றுப் பெறவில்லை. மூன்றாவது வினை முடிந்திருக்கிறது. முடிந்த வினைக்கு முற்று வினை என்று பெயர். முற்றுப் பெறாத வினை, எச்ச வினை என்று கூறப்படும்.

முற்றுப் பெறாத வினைகள் தாமாகவே முடியாமல் பிற சொற்களைத் தழுவி நிற்கும். 'செய்கின்ற' என்னும் எச்சம், பெயர்ச் சொல்லையே தழுவுமாதலால், பெயரெச்சம் எனப்படும். ஓடி என்னும் எச்சம், வினைச்சொல்லையே தழுவுமாதலால், வினையெச்சம் எனப்படும்.

இப் பாடத்திலிருந்து வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் இவற்றிற்கு உதாரணங்கள் எடுத்துக் கூறுக.

நிகழ்ச்சியை அப்படியே கூறும் வினைச்சொல், உடன்பாடு எனப்படும். அதை மறுத்துக் கூறும் வினைச்சொல் எதிர் மறை எனப்படும்.

| உடன்பாடு | | எதிர்மறை |
|---|---|---|
| சென்றான் | — | சென்றிலன் |
| படித்தேன் | — | படித்திலேன் |
| நின்ற | — | நில்லாத |
| உண்ண | — | உண்ணாமல் |
| வந்தான் | — | வந்திலன் |
| வந்தாய் | — | வந்திலை |
| வருவாள் | — | வாராள் |

கட்டுரை

உங்களுக்கு விருப்பமான ஒரு விளையாட்டைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## 6. நமது பற்கள்

[ சுவாமிநாதன், B.A., L.T. ]

நல்ல வயது வந்த மனிதர்களுக்கு முப்பத்திரண்டு பற்கள் உண்டு. அவற்றுள் பதினாறு பற்கள் மேற்றாடையிலும், பதினாறு பற்கள் கீழ்த் தாடையிலும் அமைந்துள்ளன. ஒவ்வொரு பல்லிற்கும் சிகரம், கழுத்து, வேர் என்று மூன்று பாகங்க ளுண்டு. வேர் ஒன்றாகவோ, ஒன்றுக்குக் கூடுதலாகவோ இருக்கும். இவ்வேர்கள், தாடை எலும்புகளி லுள்ள குழிகளில் பலமாகப் பொருந்தி யுள்ளன. பல், தந்தினி என்ற மிகக் கடினமான பொருளா லானது. பல்லின் சிகரமானது, ஓர்விதப் பளபளப்பான பொருளால் மூடப் பட்டிருக்கிறது. இது சவிகம் அல்லது எனுமல் எனப்படும். இது பல்லிற்கு நல்ல தோற்றத்தைக் கொடுக்கிறது. பல்லின் கழுத்துப் பாகமானது ஈறினல் சூழப்பட் டிருக்கிறது. பல்லின் வேரை இலேசான மஞ்சள் நிறமுடைய செமன்று போன்ற பொருள் பொதிந்திருக்கிறது. இது, பல்லை எலும்புக் குழியில் பலமாகப் பொருத்தி வைக்கிறது. பல்லின் நடுப்பாகம் பொள்ளலானது. வேரின் நுனியில் ஓர் சிறிய துவாரம் இருக்கிறது. இதன் வழியாக இரத்தக் குழாய்களும், உணர்ச்சி நரம்புகளும் செல்கின்றன. பல்லின் பொள்ளலான பாகம் **பற்சோறு** என்று கூறப்படுகிறது.

பற்களை, அவைகளின் வடிவத்திற்கு ஏற்றபடியும், வேலைக் கேற்றபடியும் பல வகைகளாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு தாடையிலும் முன்பாகத்தில், நான்கு

பற்கள், உளியின் வடிவத்தில் இருக்கின்றன. இவை **உளிப் பற்கள்** எனப்படும். இவை, பொருள்களைக் கடித்துத் துண்டாக்குவதற்குப் பயன்படுகின்றன. உளிப்பற்களை யொட்டி, அவைகளின் வெளிப்புற மாகத் தாடைக்கு இரண்டாக நான்கு கூர்மையான பற்கள் இருக்கின்றன. இவை, **கோரைப் பற்கள்** என்று கூறப்படுகின்றன. இவைகளுக்குப் பின் இருக்கும் பற்கள், அகன்று தட்டையான மேடு பள்ளங்களை யுடைய சிகரங்களை யுடையன. இவை உணவை அரைத்துப் பசுமை யாக்குவதற்கு உதவுகின்றன. இவை **அரைக்கும் பற்கள்** என்று கூறப்படுகின்றன.

குழந்தை பிறந்த ஆறு அல்லது ஏழாவது மாதத்தில், பற்கள் முளைக்க ஆரம்பிக்கின்றன. இரண்டரை வயதிற்குள்ளாக இருபது பற்கள் தோன்றுகின்றன. இவை, **பாற்பற்கள்** எனப்படும். குழந்தைக்கு ஆறு அல்லது ஏழு வயதாகும்போது, பாற் பற்கள் விழ ஆரம்பிக்கின்றன. அவை இருந்த இடத்தில் நிலை யான பற்கள் தோன்றுகின்றன. சிறு குழந்தைகளின் பற்களை நன்ருகக்கவனித்துச் சுத்தமாக வைக்க வேண்டும். அவைகளுக்குப் பதிலாக நிலையான பற்கள் தோன்றுவது வரை அவைகள் நிற்கவேண்டும். இந்த நிலையில்லாப் பற்களை நல்ல முறையில் கவனியாமல் தான், அநேகருடைய நிலையான பற்கள் விகாரமாயும், கோணலாயும் இருக்கின்றன. ஆதலின், பாற் பற்களை நல்ல முறையில் கவனிக்க வேண்டுவது அவசியமாகும்.

உணவைக் கடித்து மெல்லுவதுதான் பற்களின் முக்கிய வேலையாகும். அவைகள் உணவை நன்ருக

அரைத்து, அதை உமிழ் நீரோடு கலந்து, ஜீரண வேலையை ஆரம்பித்து வைக்கின்றன. அவை, பேசுவதற்கும் உதவுகின்றன. அவைகள் விழுந்துவிட்டால், சொற்களை நன்றாக உச்சரிக்க முடியாது. "பல் போனால் சொல் போகும்" என்பது பழமொழி. ஒருவனது முகப் பொலிவிற்கும் பற்கள் காரணமாக இருக்கின்றன. பற்களுக்குத் தேக ஆரோக்கியத்தோடு நெருங்கிய தொடர்பு உண்டு. ஆதலாற்றான், மேனாடுகளில், இராணுவ வீரர்களின் பற்களையும், அவர்கள் பல் விளக்குங் கருவிகளையும், பீரங்கிகளைச் சோதித்துப் பார்ப்பது போல், சோதனை செய்து வருகிறார்களாம். சில மரணக் கம்பெனிகள், தங்கள் உறுப்பினர்களின் பற்களைப் பரிசோதித்து மருத்துவம் செய்வதற்காகப் பல் வைத்தியர்களை வைத்திருக்கின்றன.

நாள்தோறும் பல்லைச் சுத்தம் செய்யவேண்டும். இல்லாவிட்டால், பற்களின்மேல் அழுக்குப் படியும். இவ் வழுக்கில் கோடிக்கணக்கான கிருமிகள் வளரும். உணவை உண்ணும்போது இக்கிருமிகள் உணவுடன் கலந்து, இரைப் பையை அடைந்து, உணவைக் கெடுத்துப் புளிக்கச் செய்து, அஜீரணத்தை உண்டு பண்ணுகின்றன. மேலும் பற்களிலுள்ள கிருமிகள் நாக்கையும், மூக்கையும், நுரையீரலையும் அடைந்து பல நோய்களை உண்டாக்குகின்றன.

உணவு உண்ணும்பொழுதெல்லாம் பற்களைச் சுத்தம் செய்யவேண்டும். குறைந்தது காலையில் ஒரு முறையும், இரவில் படுக்கைக்குச் செல்லும்போது

மற்ருெரு முறையுமாவது பல்லைச் சுத்தம் செய்ய வேண்டும். அவைகளைச் சுத்தம் செய்ய மணல், செங்கல் முதலியவைகளை உபயோகிக்கக் கூடாது. உப்புக் கலந்த உமிக்கரி, ஓமப்பொடி முதலியவைகளையோ, நாயுருவி வேரையோ அல்லது வேப்பங்குச்சி, கருவேலங்குச்சி, கடலாமணக்குக்குச்சி முதலியவைகளையோ உபயோகிக்கலாம். பற்களைச் சுத்தி செய்வதற்குச் சிறிதளவு உப்பையும், ரொட்டிச் சோடாவையும் தண்ணீரில் கலந்து, அதனுல் வாய் அலம்புவதே சிறந்ததாகும். பற்களைச் சுத்தம் செய்வதற்கு வெந்நீரை உபயோகிப்பது நல்லது. தண்ணீராக இருந்தால், அதிலுள்ள நுண்ணிய கிருமிகள் வியாதியை உண்டுபண்ணலாம்.

வெற்றிலை போட்டுக்கொள்வது மிகவும் கெட்ட வழக்கம். இதனுல் அடிக்கடி துப்புகிற தீய வழக்கம் உண்டாகிறது. அப்பொழுது ஏராளமான உமிழ்நீர் வீணுகத் துப்பப்படுகிறது. வெற்றிலையில் தடவப்படும் சுண்ணும்பு, பற்கள் அசைந்து அழிவதற்குக் காரணமாகிறது. ஆதலின், பற்களுக்குக் கேடு செய்கிற இம் மாதிரியான வழக்கங்களை யாரும் வைத்துக் கொள்ள லாகாது. இவை, பல்லுக்கு மட்டுமல்ல, உடம்புக்குங் கெடுதி.

எக் காரணம் பற்றியேனும் பற்களுக்குக் கேடு வந்திருப்பதாகத் தெரிந்தால், உடனே பல் வைத்தியரைக் கலந்து அதை நீக்குதல்வேண்டும். அல்லது கேடுற்ற பல்லைப் பிடுங்கி எறிந்துவிட்டு, வேறு கட்ட வேண்டும். எவ்வளவு சீக்கிரத்தில் இது செய்யப்படுகிறதோ அவ்வளவுக்கு நன்மை யுண்டு.

## வினாக்கள்

1. பல்லின் மூன்று பாகங்கள் யாவை? அவைகளைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

2. பாற் பற்கள் என்பன யாவை? நிலையற்ற அப் பற்களைக் கவனிக்கவேண்டுவது ஏன்?

3. மேனாட்டில் இராணுவ வீரர்களின் பற்களைப் பரிசோதிப்பது ஏன்?

4. பற்களைச் சுத்தம் செய்யாவிட்டால் விளையும் தீமைகள் யாவை?

5. வெற்றிலை போடுவதால் விளையும் தீமை என்ன?

## இலக்கணம்

மதுரை, மனிதன், நிலம், அன்பு, நாள், மகிழ்ச்சி, தீமை, கால், வேடர், நடத்தல்-இவற்றில் அறுவகைப் பெயர்களையும் தனித்தனியே எடுத்தெழுதுக.

வாழ்த்துதல்-தொழிற் பெயர். இதில் 'வாழ்த்து' என்ற பகுதிமட்டுமே சில சமயங்களில் தொழிற் பெயராக வரும். அதற்கு முதனிலைத் தொழிற் பெயர் என்று பெயர். சில பகுதிகள் விகாரப்பட்டுத் தொழிற் பெயராக வரும். அவற்றிற்கு முதனிலை திரிந்த தொழிற் பெயர் என்று பெயர்.

'கெடுதல்' என்ற தொழிற் பெயரில் 'கெடு' என்னும் பகுதி 'கேடு' என நீண்டு வருவது முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

முதனிலைத் தொழிற் பெயருக்கும், முதனிலை திரிந்த தொழிற் பெயருக்கும் உள்ள வேறுபாட்டை உதாரணம் தந்து விளக்குக.

## 7. கலைக்கோவில்

[வித்துவான், சி. சின்னத்தம்பி]

பண்டைக் காலத்தில் நம் பாரதநாடு பல கலைகளி லும் சிறப்புற்று விளங்கியது. அக் காலத்தில் நம் நாட்டில் சிற்பக் கலையும், ஓவியக் கலையும் சிறந் தோங்கி இருந்தன என்பதை அறிவிக்கும் சின்னங் கள் பல இன்றும் காணப்படுகின்றன. மதுரை, தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரம், மாமல்ல புரம், எல்லோரா, அஜந்தா, முதலிய இடங்களிலுள்ள சிற்பங்களும், ஓவியங்களும் கலையுணர்ச்சி யுடையார் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவரும் அழியா அழகுடையனவாய்க் காட்சி தருகின்றன. பிற நாட்டு யாத்திரிகர்களும், இவற்றைக் கண்ணாரக்கண்டு களித்து வாயார வாழ்த்திச் செல்கின்றார்கள். இத் தகைய கலைக் கோவில்களின் சிகரமாகச் சிறந்து விளங்குவது அஜந்தா என்பதாகும். அதைப் பற்றி இப் பாடத்தில் படிப்போம்.

அஜந்தா என்னுமிடம், நைஜாம் இராஜ்யத்தி லுள்ள அவுரங்கபாத் புகைவண்டி நிலையத்திற்கு வடக்கே, அறுபது மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கு மலையிற் குடையப்பட்ட அற்புதமான குகைக் கோவில்களுக்கு முன் அமைந்திருக்கும் மண்டபங்க ளும், அவைகளில் காணப்படும் கலை நிறைந்த சிற் பங்களும், அழியா அழகுடைய வர்ணச் சித்திரங்க ளும் யாவரையும் வியப்பில் ஆழ்த்தும் புதுமை யுடையனவாய்க் காணப்படுகின்றன.

அஜந்தாவில் பிறைச் சந்திர வடிவமாய் மலையிற் குடையப்பட்ட குகை வாசல்கள், சித்திர விசித்திர

மான பெருந் தூண்களுடன் காணப்படுகின்றன. அங்கு 'வகோரா' என்னும் நதி மலையோரமாக, பாதிவடிவமான மதியைப்போல் காட்சி அளித்துக் கொண்டு செல்கின்றது. அஜந்தாக் குகைகளி லுள்ள சில சிறந்த ஓவியங்கள், பெரிய வடிவங்களை யுடையனவாயும், பெரிய கதைகளை ஒரு சிறு காட்சியினுல் சித்திரித்துவிடும் ஆற்றல் வாய்ந்தனவா



யும், தெய்வீகம் பொலி யும் அணங்குகளின் கண்ணழகு, கைவிரல்க ளின் அழகு, அணிக ளின் அழகு முதலிய வற்றை விளக்குவனவா யும் அமைந்திருக்கின் றன. இம் மாதிரியான இருபத்தாறு குகைகள் அங்குக் காணப்படுகின் றன. அவற்றுள் ஒன் றில் புத்த பகவான் பிக்ஷா பாத்திரம் ஏந்திக் கொண்டு நிற்கின்றூர். அவர் அருள் கனிந்த கண்களையும், கருணை ஒழுகும் திருமுகத்தை யும் உடையவராய்க் காட்சி தருகின்றூர். அவர் முகத்தில் ஞானவொளி வீசும் காட்சி தென்படுகிறது. அவருக்கு எதிரே அவர் மனைவி யசோதரை தேவியார், மகன் இராகுல

னுடன் கையில் பிச்சைகொண்டு வந்து நிற்கின்றார். யசோதரை, இராகுலன் முகங்கள் பக்தி நிறைந்து காணப்படுகின்றன. இங்குப் புத்தருடைய உருவத்தைப் பெரிதாகவும், யசோதரை, இராகுலன் வடிவங்களைச் சிறியனவாகவும் சிற்பி செய்தமைத்துப் புத்த பகவானின் பெருமையைப் புலப்படுத்தி இருப்பது, கற்பனு சக்திக்கு ஒரு எடுத்துக்காட்டாகும்.

புத்த பகவானின் பிறப்பின் பெருமையைத் தெரிவிக்கும் அளவற்ற கதைகள், சிற்பங்களில் செதுக்கப்பட் டிருக்கின்றன. சிபிச்சக்கரவர்த்தியைப் புத்தரின் பழம் பிறப்பாக வைத்துச் செதுக்கிய சிற்பங்களும், அங்குக் காணப்படுகின்றன.



இன்னும் புத்தரின் பழம் பிறப்புக்களில் ஒருவராகிய 'அவலோகித போதி சத்துவரின்' சித்திரம் அஜந்தாவி லுள்ள வியக்கத்தக்க ஓவியங்களில் ஒன்று. இந்தக் கம்பீரமான உருவத்தின் முகத்தில் உயிர்க்களை ததும்புகிறது. கண்களின் கீழ்நோக்கிய பார்வை

யானது, அவர் மண்ணுலக மக்களிடம் கொண்டிருக்கும் கருணையைக் குறிப்பிடுகிறது. அருகிலுள்ள அவருடைய தேவியின் மேனி, கருநிறமுடையதாய் இருக்கிறது. கருநிற மாதர்களும் அழகின் சிகரமாக விளங்குதல்கூடும் என்பதை வாய்விட்டுக் கூறுவது போல் அவ் வுருவம் அமைந்துள்ளது.

அஜந்தா ஓவியர்கள், தாங்கள் இயற்றிய சித்திரங்களில் உணர்ச்சிக் குறிப்புக்களை முகத்திலும், உறுப்புக்களின் அமைப்பிலும்கூட வெளியிட்டிருக்கிறார்கள். அவைகளில் ஒன்று, துக்கச் செய்தி கொண்டுவந்திருக்கும் ஒருவனது ஓவியம். அந்த மனிதனின் முகவாட்டமும், அவன் கை அமைந்திருக்கும் முறையும், தடியூன்றிய கை முகவாய்க் கட்டையைத் தாங்கி நிற்கும் அவனது நிலையும், 'எல்லாம் அழிந்து விட்டன' என்னும் குறிப்பை மிகத் தெளிவாக வெளியிடுகின்றன.

மக்களின் உளக்கோள் மட்டுமன்று; விலங்குகளின் நெஞ்சு உணர்ச்சிகளையும் அவர்கள் சிறப்பாகத் தீட்டியிருக்கிறார்கள். புத்தபகவான் முன் பிறப்பில் இமாலயத்தில் வெள்ளையானையாக அவதரித்தார். பிரயாகை மன்னரின் ஆட்கள் அந்த யானையைப் பிடித்துக் கட்டினார்கள். யானை உணவும் நீரும் உட்கொள்ளாது இருக்கக்கண்ட மன்னன், அதை அவிழ்த்து விட்டு, அதன் பின்னால் தானும் குதிரையேறிச் சென்றான். அந்த யானை, இமய மலையில் இருந்த தன்னுடைய தாய் தந்தையரை அடைந்து, அவர்களை வலம் கொண்டு வணங்கி நின்றது. இக் காட்சி மிகச் சிறந்த முறையில் பொறிக்

கப்பட்டிருக்கிறது. கட்டுண்டு செல்லும் யானையின் கண்களில் கோபம் கலந்த சோகமும், விடுதலை



அடைந்த யானையின் கண்களில் மகிழ்ச்சி கலந்த பரபரப்பும், போற்றும்போது அன்பும் வெளிப்படும் முறையில் யானை காட்சி தருவது, காண்போர்க்குப் பெரு மகிழ்ச்சி தருவதாகும்.

நம் பாரதநாட்டு மக்கள் எத்தகைய உயரிய வாழ்க்கை நடத்தினர்கள் என்பதை, அஜந்தாக் குகைச் சிற்பங்களும், சித்திரங்களும் நன்கு காட்டுகின்றன. ஆண்களும் பெண்களும் எத்தகைய ஆடை அணிகளை அணிந்திருந்தார்கள் என்பதையும், விருந்தினர்களை அவர்கள் எவ்வாறு உபசரித்தார்கள் என்பதையும், அவர்களது பண்பட்ட வாழ்க்கையின் உயர்வையும் இவைகளால் நாம் நன்கு அறியலாம். ஒரு சிற்பத்தில், காசி மன்னன் நாக லோகத்து அரசனை வரவேற்றுப் போற்றும் காட்சி காட்டப்

பட்டுள்ளது. அந்தக் காலத்து அரசர்களும், அரசி களும் எத்தகைய அழகுடையவர்களாய் இருந்தார்கள் என்பதையும், அவர்கள் கலந்து மகிழும்போது ஏற் படும் நட்புணர்ச்சியையும், அவர்களுடைய உரையா டல்களைப் பரிவாரங்கள் எவ்வளவு ஆர்வத்தோடு நோக்குகின்றார்கள் என்பதையும், பிற அமைப்புக் களையும் பார்க்கும்போது பெரும் வியப்பு ஏற்படு கின்றது.

அஜந்தாக் குகைகள் இரண்டாயிரம் ஆண்டுக ளுக்கு முற்பட்டவை. கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்த சீன யாத்திரிகர் ஒருவர், இதைப்பற்றிக் குறித்துள்ளார். என்றாலும், சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்புதான், இவைகளைப் பற்றி அறிய முடிந்தது. ஏனென்றால், இக் குகைகள், மக் கள் இலகுவில் கண்டறிய முடியாத இரகசியமான இடத்தில் அமைந்திருக்கின்றன. இவைகளை அமைத்த புத்த பிக்ஷுக்கள் தங்களைப் போன்றவர் கள் கண்டு களிப்பதற்கும், உணர்ச்சியற்ற மூடர்கள் அழித்து விடாமல் இருப்பதற்குமாக வேண்டி, இந்த இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கலைக்கோவில் கட்டி னார்கள் என்று கருதவேண்டி இருக்கின்றது. இயற் கையின் நிறைந்த அழகில் தங்கள் நெஞ்சை நிலைக்கச் செய்வதற்குரிய எழில் நிறைந்த இடத்தில், கலைக் கோவில் அமைத்தது, அவர்கள் அறிவு நுட்பத்திற்கோர் சான்றாகும்.

இந்தக் கலைக்கோவிலை இன்று இந்திய அரசாங் கம், காத்து வருவதோடு, இதை மக்கள் சென்று

பார்த்து மகிழ்வதற்கான வசதியும் செய்தமைத் திருக்கிறது. நாமும் இதனை ஒரு முறையாவது கண்டு களிப்போமாக.

**அரும்பொருள் :**—சின்னம் - அடையாளம். பிக்ஷு - சந்நியாசி. அணங்கு - தெய்வப் பெண். ஆர்வம் - ஆவல். எழில் - அழகு. சான்று - உதாரணம்.

## வினாக்கள்

1. பண்டைக் கலைகளின் சின்னங்கள் எங்கெங்கு காணப்படுகின்றன?
2. அஜந்தாச் சிற்பங்கள் எங்கு, எவ்வாறு அமைந்துள்ளன?
3. அஜந்தாவை அழகுபடுத்தும் நதி யாது?
4. புத்தபகவானின் திருவுருவ அமைப்பை விளக்குக.
5. போதி சத்துவரின் உருவ அமைப்பை விளக்குக.
6. மிருகங்களின் உணர்ச்சியைச் சித்திரித்திருப்ப தற்கு ஓர் உதாரணம் தருக.
7. அஜந்தாக் குகைகளை இரகசியமான இடத்தில் அமைக்கக் காரணம் என்ன?

## பயிற்சி

வாக்கியங்களில் அமைத்தெழுதுக:

அழியா அழகு, எடுத்துக்காட்டு, வரவேற்று, உரையாடல், பெருவியப்பு, எழில் நிறைந்த,

## இலக்கணம்

'அஜந்தாக் குகைகளை உலகமே புகழ்கின்றது' இவ்வாக்கியத்தில் உலகம் என்னும் இடப் பெயர், இடத்தைக்

குறியாது, அங்கு வசிக்கும் மக்களைக் குறிப்பிடுகின்றது. இம்மாதிரி ஒரு பொருளின் பெயர், அதனுடன் சம்பந்த முடைய வேறொரு பொருளை உணர்த்தித் தொன்று தொட்டு வழங்கி வருமாயின், அதற்கு ஆகுபெயர் என்று பெயர். இவ் வாகுபெயர், பொருளாகு பெயர், இடவாகு பெயர், காலவாகு பெயர், சினையாகு பெயர், குணவாகு பெயர், தொழிலாகு பெயர், உவமையாகு பெயர் முதலாகப் பலவகைப்படும்.

தாமரை முகம், தாமரை என்னும் முதற் பொருளின் பெயர் அதன் சினையாகிய பூவை மட்டும் குறிப்பதால், அது முதலாகு பெயர், அல்லது பொருளாகு பெயர் எனப்படும்.

ஊர் சிரித்தது - ஊர் என்னும் இடப்பெயர், அங்குள்ள மக்களுக்கு ஆகி வந்திருப்பதால், இடவாகு பெயர்.

கோடை விளைந்தது - கோடை என்னும் காலப்பெயர், அக்காலத்தில் விளையும் பொருளைக் குறிப்பதால், காலவாகு பெயர்.

தலைக்குப் பத்து ரூபாய் கொடு - தலை என்னும் சினைப் பெயர், ஒருவனை அல்லது ஒருத்தியை உணர்த்துவதால், சினையாகு பெயர்.

வெள்ளை அடித்தான் - வெள்ளை என்னும் குணப் பெயர், சுண்ணும்பைக் குறிப்பதால், குணவாகு பெயர்.

பொங்கல் உண்டான் - பொங்கல் என்னும் தொழிற் பெயர், பொங்கிய சோற்றை உணர்த்துவதால், தொழிலாகு பெயர்.

காளை வந்தான் - காளை என்னும் உவமையின் பெயர், காளை போன்ற ஆடவனைக் குறிப்பதால், உவமையாகு பெயர்.

# 8. புகழ்

[ வித்துவான், க. சிதம்பரதாணு ]

'தோன்றுவன யாவும் அழிவனவே' என்பர் சிலர். தோன்றி அழியாதனவும் உள. அவற்றுள் சிறந்தது புகழ்.

என்பு, தோல், நரம்பு, தசை, குருதியாகியவற்றாலான உடல், அழிந்து ஒழியும் தன்மையது. இன்று வாழ்வோர் நாளையும் வாழ்வார் என்றெண்ணுதற் கிடமில்லை.

" நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு "

எனில், புகழோ இன்றிருப்பது; என்றுமிருப்பது.

" இன்றுளார் நாளை மாள்வர்,
புகழுக்கு மிறுதி யுண்டோ "

என்பது கல்வியிற் சிறந்த கம்பன் வாக்கு.

" ஒன்றா வுலகத்(து) உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில் "

என்பது தமிழ் மறை.

உலகந் தோன்றிய நாள்முதல் இன்றுவரை பிறந்து, வளர்ந்து, வாழ்ந்து, வீழ்ந்தோர் எத்தனை பேர்? விண்ணில் மீனினை எண்ணினும், மண்ணில் மாண்டோர் தொகையை எண்ண வியலுமா? இயலாது; இயலாது. எண்ணிறந்த கோடிக்கணக்கி லிறந்த அவர்கள் வாழ்வு, பெயர், யாவும் அவர்களதூனுடல் அழிந்ததும் அழிந்தன. ஆனால், பன்னூறாண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த புலவர்கள், புரவலர்

கள் பெயர்களோ, அன்று முதல் இன்றளவும் நின்று நிலவுகின்றன. கம்பர், திருவள்ளுவர், இளங்கோ முதலிய புலவர்களையும், செங்குட்டுவன், கரிகாலன், சடையன் போன்ற புரவலர்களையும் தமிழருள் அறியாதார் அறியாதாரே. அவர்கள் எத்தனை எத்தனை ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்தவர்கள்! இன்றும் வாழ்கின்றனர்! அவர்கள் பெற்ற பேறே பேறு. அவர்தம் வாழ்வே வாழ்வு. அவர்களது ஊனுடல்கள் அன்றே அழிந்தன. எனினும், அவர்கள் புலமையாலும், வள்ளன்மையாலும், செங்கோலாட்சிச் சிறப்பாலும் பெற்ற சீரிய புகழுடல்கள் இன்றும் வாழ்கின்றன; என்றும் வாழ்வன.

இப் புகழைப் பெறாத மனிதன் இருந்தென்ன? இறந்தென்ன? விலங்கு, பறவை முதலியனவும் உலகில் தோன்றுகின்றன; வளர்கின்றன; உண்கின்றன; ஒழிகின்றன. அதைப்போன்றே அவனும் தோன்றுகின்றான்; வளர்கின்றான்; உண்கின்றான்; ஒழிகின்றான்.

"அரிதரிது மானிடராதலரிது" என்றார் ஔவை. இவ் வரிய பிறவி பெற்ற மனிதன், மனிதனாய் மட்டும் தோன்றுவதாற் பெறும் பேறென்ன? ஒன்றுமில்லை.

" தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று "

என்றார் திருவள்ளுவர்.

புகழ் எய்தி வாழும் புனித வாழ்வைப் புகழ்ந்து போற்றாத புலவரில்லை. தமிழிலக்கியப் பூங்காவில் புகுந்துலவும் பேறு பெற்றார் அனைவரும் இதனை நன்குணர்வர்.

இலங்கை வேந்தன் இராவணன், உலகையெலாம் தன் ஒரு குடையின்கீழ்க் கொண்டு அரசாண்டான். அவன் இளமைந்தன் அட்சகுமாரன், ஒப்பற்ற உடல் வலியும், உளவலியும் பெற்றோன். அவன், அனுமன் என்னும் வானர வீரனுடன் பொருது, தரையோடு தரையாய்த் தேய்ப்புண்டு மாண்டான். அச்செய்தி இலங்கை எங்கும் பரவிற்று; இராவணன் மூத்த மைந்தன், மேகநாதன் காதிலும் எட்டியது. எட்டியதும், உள்ளம் குமுறி நின்ற அவன்,

"எம்பியோ தேய்ந்தான்? எந்தை
புகழன்றோ தேய்ந்த தென்றான்"

புகழ் அழியாப் புனித வாழ்வில் மேகநாதற்கிருந்த மதிப்பை என்னென்பது!

இலக்குவனுடன் சண்டையிட்டு இளைப்புற்ற இந்திரசித்தன், தன் பகைவலியை நன்குணர்ந்தான்; மேலும் பொருதால் தனக்கும் தன்னைச் சார்ந்தோர்க்கும் அழிவு அடுப்பது உறுதி என்று அறிந்தான்; அந்த உண்மையை இராவணனிடத்தும் இயம்பினன். அது கேட்ட இராவணன்,

"வென்றிலேன் என்ற போதும்
வேதம் உள்ளளவும் யானும்
நின்றுளேன் அன்றோ, மற்றவ்
விராமன்பேர் நிற்கு மாயின்?
பொன்றுதல் ஒருகா லத்தும்
தவிருமோ? போதுமைத் தன்றோ?
இன்றுளார் நாளை மாள்வர்;
புகழுக்கும் இறுதி யுண்டோ!"

என்று பதிலுரைத்தான். இப் பதிலுரையின்வழிக்

கம்பர் உலக நிலையாமையையும், புகழின் அழியாமை யையும் அழகுற அருளிப் போந்தார். இவ்வாறே புகழேந்தி, வில்லி, திருத்தக்க தேவர் முதலிய பழந் தமிழ்ப் புலவர்கள், தந்தம் நூற்களில் புகழெய்தி வாழும் புனிதவாழ்வைப் புகழ்ந்து போற்றிய பாடல் கள் எத்தனை! எத்தனை!

புகழைப் பெறும் வழியாது? விரும்பும் பொருளை விலைகொடுத்துப் பெற்றுக்கொள்ளல் போல, எளிதில் பெறத் தக்க ஒன்றன்று புகழ். அஃது, மனிதனது அறிவாற்றல்களில், உயர் ஒழுக்கத்தில், அருள் நிறை வில், வீரவாழ்வில், இன்ன பிற பண்பாடுகளில் சுரப் பது. கொலை புரிதல், கள்ளுண்டல், களவு செய்தல், சூதாடல் முதலிய கொடுஞ் செயல்கள், மக்கள் வாழ் வைக் குலைத்துப் பெரும் பழியையும் நல்குவன. புகழ் பெற்று வாழும் புனிதவாழ்வை விரும்புவோர், இத் தீச் செயல்களைக் கனவிலுங் கருத லாகாது.

இந் நாளில், பலர், அறிஞர்களால் வெறுத் தொதுக்கப் பெற்ற செயல்கள் எத்தனை உண்டோ அத்தனையையும் கைக்கொண்டு, இழிநிலை யெய்திவரல் வெளிப்படை. பலர் இளம் பருவத்திலேயே சிகரெட், பீடி முதலிய தீய பொருள்களுடன் உறவுகொள்கின் றனர்; சீட்டாட்டம் முதலிய சூதாட்டங்களில் ஈடுபட் டுத் தம் அரிய பொழுதைப் பாழ் படுத்துகின்றனர்; அழுக்காறு, அவா, வெகுளி முதலியவற்றின் உறை விடமாய்த் தம் உள்ளத்தை யாக்கி, வாழ்நாளைப் பாழ் படுத்துகின்றனர். இவர்கள், பெறுதற்கரிய புகழைப் பெறத் தவறுவதோடு, அழியாப் பழிக்கும் அன்றோ ஆளாகின்றனர்.

பொய், களவு முதலிய புல்லொழுக்கங்களை மேற்கொள்ளாது, கற்கத் தக்கவற்றைக் கற்று, அருளின் உருவாய், உயர் ஒழுக்கத்தின் உறையுளாய்,

" மகன்தந்தைக் காற்று முதவி யிவன்தந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல் "

என்னும் பொய்யாமொழிக் கோர் இலக்கியமாய் வாழ்பவன் எவனோ, அவனே அழியாப் புகழ் எய்தல் உறுதி. அவனது ஊனுடல் அழியலாம்; ஆனால், அவனது புகழுடல் என்றும் அழிவதில்லை. சாகா வரம் பெற்றோன் அவனே. அவன் அமரன்; ஆம் அவனே அமரன்.

**அரும்பொருள்:**—என்பு - எலும்பு. குருதி - இரத்தம். நெருநல் - நேற்று. ஒன்றா - தனக்கு ஒப்பில்லாத. பொன்றாது - அழியாமல். பொன்றுதல் - இறத்தல். வள்ளன்மை - கொடைக்குணம். சீரிய - சிறந்த. விலங்கு - மிருகம். கா - சோலை. அழுக்காறு - பொறாமை. அவா - ஆசை. என்நோற்றான் - என்ன தவத்தைச் செய்தான். அமரன் - மரணம் இல்லாதவன்.

**வினாக்கள்**

1. புகழுடம்பு பெற்ற புலவர்கள், புரவலர்கள் சிலர் பெயர் கூறுக.

2. புகழைக் குறித்து வள்ளுவர் கூறிய இரண்டு குறள்கள் எழுதுக.

3. இராவணன் புகழைத் தன் உயிரினும் மேலாக மதித்தான் என்பதற்குச் சான்று தருக.

4. புகழைப் பெறுவது எங்ஙனம்?

5. அழியாப் பழிக்கு ஆளாவார் யாவர்?

6. அமரன் யாவன்?

## பயிற்சி

வாக்கியங்களில் அமைத்து எழுதுக:

தொன்று தொட்டு, ஒரு குடையின்கீழ், தரையோடு தரையாய், புனித வாழ்வு, புரவலர்கள், அமான்.

பதப் பிரிவு செய்து எழுதுக:

என்றெண்ணுதற்கில்லை, பன்னூறாண்டுகள், இன்றுளார், என்னேற்றான், அரிதரிது.

## இலக்கணம்

பெயர்ச்சொற்கள் பொதுப்பெயர், சிறப்புப் பெயர் என இரண்டு வகைப்படும்.

1. பொதுப்பெயர் :- பல பொருள்களுக்கும் பொதுவாக வரும் பெயர், பொதுப்பெயராகும்.

உதாரணம்: மரம் - இது தென்னை, பலா, ஆல், அரசு முதலிய எல்லா மரங்களுக்கும் பொதுவாக வழங்கும் பெயர். ஆதலால் பொதுப்பெயராகும்.

2. சிறப்புப்பெயர் : ஒரு பொருளுக்கே சிறப்பாக வழங்கும் பெயர், சிறப்புப்பெயராகும்.

உதாரணம்: பனை - இது ஒருவகை மரத்திற்கு மட்டும் சிறப்பாக வழங்கும் பெயர். ஆதலால், சிறப்புப் பெயர்.

இப் பாடத்திலிருந்து பொதுப் பெயர், சிறப்புப் பெயர்களுக்கு உதாரணம் எடுத்தெழுதுக.

## 9. வ. உ. சிதம்பரனார்

[ஈ. பண்டார நம்பியார்]

திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலிச் சீமை, வீரத்தின் விளைநிலமாகவும், புலமையின் பிறப்பிடமாகவும் விளங்குவது. வீர விளக்கான கட்டபொம்மனை ஈன்றளித்த பெருமை அந்நிலத்திற் குரியது. அருட் கவிஞர் பாரதியார், அந்நிலத்தில் தான் அவதரித்தார். இவர்களுக்குப் பிறப்பளித்த அந்த நாட்டிற்றான், 'வீரம்', 'தியாகம்' இவற்றின் உருவாய் விளங்கிய வ. உ. சிதம்பரனார் தோன்றினார்.

பெரியவர்கள், தங்களை வணங்கும் பெண்களுக்கு "நீ வீர மக்களைப் பெற்று வாழ்வாயாக" என்று ஆசி கூறுவது, தமிழகத்து வழக்கம். வீரர் என்பது, போர் முகத்துச் சென்று மார்பு காட்டிப் பொருது மடிவோரை மட்டும் குறிப்ப தன்று; நாட்டு நலத்திற்காக-சமூக வாழ்விற்காக-அரிய பெரிய தொண்டுகளைத் தன்னந் தனியாக நின்று செய்து முடிப்பவனே சிறந்த வீரனாவான். இத்தகைய வீரப் புதல்வனைப் பெறுவதைக் காட்டிலும், பெண்மக்கள் பெறும் பேறு, வேறொன்று மில்லை.

திருநெல்வேலிச் சீமையில், தூத்துக்குடி நகரை அடுத்த ஓட்டப்பிடாரம் என்னும் ஊரில், 1872-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 5-ஆம் நாளில் பரமாயி என்னும் அம்மையார் இந்தப் பாக்கியத்தைப் பெற்றார்கள். உலகநாத பிள்ளையும், பரமாயி அம்மையாரும் அருந்தவத்தால் பெற்றெடுத்த வீரர்தாம் வ. உ. சிதம்பரனார்.

சிதம்பரனார், இளமையில் அருந் தமிழையும், ஆங்கில மொழியையும் கற்றுத் தேர்ந்தார். அடிமையாக வாழ விரும்பவில்லை யாதலின், அவர், அரசாங்க அலுவலை விரும்பாது, வழக்கறிஞர் வாழ்க்கையை மேற் கொண்டார்; ஆனால், வழக்கறிஞர்களில் பெரும்பாலோர் கைக்கொள்ளாத வாய்மை யறத்தில் அவர் வழுவாது நின்றார்; நீதியை நிலை நாட்டுவதையே தம் வாழ்க்கை நெறியாகக் கொண்டார். அத் தொழிலில் அவருக்குப் போதிய வருவாய் வரவில்லை. வருவாய்க் குறைவின் காரணத்தை அவர் அறிந்திருந்தபோதிலும், பொருளுக்காக இலட்சியத்தை விற்க அவர் விரும்பினாரில்லை.



சிதம்பரனார் வக்கீலாக வாழ்ந்து வந்த காலத்தில் தான், சிவாஜிக்குப் பிறப்பளித்த மகாராஷ்டிர தேசத்தில் பிறந்த **பாலகங்காதர திலகர்**, 'சுயராஜ்யம் நமது பிறப்புரிமை' என்ற மந்திரத்தை முழக்கம் செய்து, மக்களிடையே விடுதலை உணர்ச்சியை ஊட்டி வந்தார். ஆங்கிலேயரிடம் அடிபணிந்து விடுதலை கேட்பது கூடாதென்றும், போராடியே உரிமைபெற வேண்டும் என்றும் அவர் வற்புறுத்தினார். திலகரின் போக்கு, வீர சிதம்பரனாரைக் கவர்ந்தது. தமிழ் வீர மரபில் தோன்றிய சிதம்பரனார், திலகரின் ஆசியைப் பெற்று அவர்வழி நின்று, தென்னாட்டு மக்களைத்

தட்டி எழுப்பி விடுதலைப் போருக்குத் தயாராக்க முன்வந்தார். அவர், வழக்கறிஞர் தொழிலை உதறி எறிந்துவிட்டு, தென்னாட்டுத் தளபதியாகத் தொண்டாற்றினார். மக்கள், உரிமையுணர்ச்சி கொண்டு எழுந்தார்கள்.

அக் காலத்தில், சிதம்பரனாரின் தமிழ் உள்ளம், பல கற்பனை செய்திருக்க வேண்டும். "திரைகடலோடித் திரவியம் தேடியவன் தமிழன்; முதலில் கடலைக் கடந்த தமிழன், தன்னால் கடக்கப் பட்டமையால் அன்றோ அதற்குக் கடல் என்று பெயர் அமைத்தான்; அதன் ஆழங்கண்டமையால் அன்றோ ஆழி என்று பெயரிட்டான். இன்று, அக் கடல், ஆங்கிலேயரின் ஏகபோக உரிமையாக இருக்கின்றதே! என்ன அநீதி! தமிழகத்திலிருந்து சிங்களம் செல்லவும்,அவர்களின் விடையை அன்றோ எதிர்பார்க்க வேண்டி இருக்கின்றது." என்று எண்ணிய சிதம்பரனார், தாம் கப்பல் ஓட்டுவதற்குக் கங்கணம் பூண்டார்.

எண்ணியதை எண்ணியவாறு முடிக்கும் திண்ணிய உள்ளம் படைத்த சிதம்பரனார், "சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி" என்ற ஒரு கப்பல் கம்பெனியை ஆரம்பித்தார்; 'லாவோ', 'காலியா' என்ற இரண்டு கப்பல்களை விலைக்கு வாங்கினார். தூத்துக்குடிக்கும் சிங்களத்திற்கும் சிதம்பரனாரின் கப்பல்கள் சென்று வந்தன. ஆங்கிலக் கப்பல் கம்பெனியார், சிதம்பரனாரின் முயற்சி வெற்றி பெற்றதைக் கண்டு திடுக்கிட்டார்கள்; தங்கள் கம்பெனிக்கு அழிவு நேருமோ என்று அஞ்சினார்கள்; ஆதலின், சிதம்பரனாரின் கப்பல் கம்பெனியை அழிப்பதற்கான

திட்ட மிட்டார்கள். ஆங்கில அரசாங்கம் அவர்களுக்குத் துணை நின்றது. ஆங்கில ஆலை முதலாளிகள், அவர்களுக்கு உதவ முன்வந்தனர். ஆதலின், போட்டி வளர்ந்தது. சிதம்பரனார் தன்னந் தனியாக நின்று, ஆங்கிலக் கப்பல் கம்பெனியாரையும், ஆலை முதலாளிகளையும், ஏகாதிபத்தியங்களுள் இமயம்போல் ஓங்கி நின்ற ஆங்கில அரசாங்கத்தையும் ஒருநிலையாக எதிர்த்து நின்றார் என்றால், அவரன்றோ வீரர்! மேலும் தமிழகம், ஒருமுகமாகச் சிதம்பரனாருக்கு ஆதரவு அளித்தது. அது கண்ட அரசாங்கம் அஞ்சியது.

சிதம்பரனாரை வெளியே விட்டுவைத்தால், ஆட்சிக்கு ஆபத்து விளைதல் கூடும் என்று கண்ட அரசாங்கம், அவரை 1908-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 12-ஆம் நாள் கைது செய்தது. விசாரணை நடத்திய நீதிபதி பின்ஹேறு, சிதம்பரனாரின் தேசபக்தியை வாயாரப் பாராட்டினார். "சிதம்பரனாரின் பேச்சைக் கேட்டால் பிணமும் உயிர் பெற்றெழும்; அடிமை நாடு ஐந்தே நிமிடங்களில் விடுதலை அடையும். தேச பக்தி சிதம்பரனாரின் எலும்பைப் பற்றி விட்டது" என்பது நீதிபதி பின்ஹேறுயின் வாக்கு. விசாரணை முடிவில், சிதம்பரனாருக்கு நாற்பது ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. சிதம்பரனார் சிறையில் பட்ட அல்லலுக்கு அளவில்லை.

அவர் சிறையில் செக்கிழுப்பதையும் கல்லுடைப்பதையும் அறிந்து, மக்கள் கொதித் தெழுந்தார்கள். அருட்கவிஞர் பாரதியார் ஆறாகக் கண்ணீர் வடித்தார். அவர் மனத்துயரம் கவிதைகளாக வெளிவந்தது.

"தண்ணீர்விட் டோவளர்த்தோம்?
சர்வேசா ! இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம் ;
கருகத் திருவுளமோ?
எண்ணமெலா நெய்யாக
எம்முயிரி னுள்வளர்ந்த
வண்ணவிளக் கிஃது
மடியத் திருவுளமோ?
ஓரா யிரவருடம்
ஓய்ந்து கிடந்தபின்
வாராது போலவந்த
மாமணியைத் தோற்போமோ?
மேலோர்கள் வெஞ்சிறையில்
வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில்
நோவதுவுங் கண்டிலையோ?"

என்பன போன்ற பல பாடல்களைப் பாரதியார் கல்லும் கரைந்துருகுமாறு பாடினார்.

சிதம்பரனாரின் சிறைத் தண்டனை, அப்பீல் மூலம் குறைவு செய்யப்பட்டது. ஆதலின், அவர், 1912-ம் ஆண்டு டிசம்பர் மாதம் வெளிவந்தார். அவர், சிறையில் இருந்த காலத்தில், தமிழ்ப்பணி புரிந்தார். பிற நாட்டு நல்லறிஞர் நூற்களைத் தமிழில் பெயர்த்தெழுத வேண்டும் என்பது அவரது அவா. ஆதலின், ஆங்கில நூற்கள் சிலவற்றை அவர் தமிழில் மொழிபெயர்த்தார்; திருக்குறள், தொல்காப்பியம் முதலிய நூற்களுக்குப் புத்துரை எழுதினார்; பலருக்குத் தமிழ் நூற்களைப் பாடஞ் சொன்னார்; துன்பம் நிறைந்த சிறை

வாழ்க்கையையும், தமிழ்ப்பணி புரிவதன் மூலம் இன்ப வாழ்க்கையாக நடத்தினர்.

சிதம்பரனர், தம் வாழ்நாள் முழுதும், தாய்நாட்டிற்காகவும், தாய்மொழிக்காகவும் உழைத்தார்; 1936-ம் ஆண்டு நவம்பர் மாதம் 18-ம் நாள், 'நாடு விடுதலை பெறவில்லையே' என்ற ஏக்கத்துடன் காலமானர். அவர் எதிர்பார்த்த விடுதலை 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ஆம் நாள் கிடைத்தது. அவர் ஆத்மா கண்டு களித்திருக்கும்.

சிதம்பரனரின் ஊனுடல் மறைந்தபோதிலும், அவரது புகழுடல் மறையவில்லை. 'வி. ஓ. சிதம்பரம்' என்ற கப்பலில் அவர் புகழுடல் காட்சி தருகின்றது. வ. உ. சி. கல்லூரியில் அவர் புகழ் உடல் பொருந்தியிருக்கின்றது. தமிழ் மக்கள் உள்ளங்களில் எல்லாம் அவர், 'கப்பலோட்டிய தமிழ'னுக வீற்றிருக்கிருர்.

**அரும்பொருள்** :-சீமை - தேசம். பேறு - வாய்ப்பு. அலுவல் - வேலை. வழக்கறிஞர் - வக்கீல். திரவியம் - செல்வம், வண்ணம் - அழகு.

## வினுக்கள்

1. திருநெல்வேலிச் சீமையின் பெருமையை எழுதுக.
2. சிறந்த வீரன் யார்?
3. திலகர் யார்? அவர் கொள்கை என்ன?
4. சிதம்பரனரின் தமிழ் உள்ளம், எவ்வாறு சிந்தித்திருக்க வேண்டும்?

5 நீதிபதி பின்ஹே சிதம்பரனாரைக் குறித்துக் கூறியது என்ன?

6. சிதம்பரனார் சிறையில் பட்ட துன்பத்தைக் கண்டு பாரதியார் பாடிய கவிதைகளைக் கூறுக.

7. சிதம்பரனார் சிறையில் செய்த தமிழ்த் தொண்டைக் கூறுக.

8. சிதம்பரனாரின் புகழுடல் எவ்வாறு காட்சி தருகிறது?

இலக்கணம்

1. பின்வரும் நேர்கூற்றுக்களை அயற்கூற்றுக்களாக மாற்றுக:

'நான் சொன்னபடி செய்' என்றான் முருகன்.
'என்னிடம் கொடு' என்றார் என் தந்தை.

2. கலவை வாக்கியமாக மாற்றுக:

கண்ணன் நன்றாகப் படித்தான். பரீட்சையில் தேறினான்.

3. செயப்பாட்டுவினை வாக்கியங்களாக மாற்றி எழுதுக:

கம்பர் இராமாயணம் பாடினார்.
இராமன் இராவணனை வென்றான்.
என் நண்பன் புத்தகங்களை வாங்கினான்.

கட்டுரை

சிதம்பரனாரின் நாட்டுப்பற்று, மொழிப்பற்று இவற்றை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.

# 10. நாகனாரும் வளவனும்

[ஈ. பண்டார நம்பியார்]

சோழ வள நாட்டில் வெள்ளைக்குடி என்னும் ஊர் ஒன்றுளது. அவ்வூர் வேளாண் குடியினர்க்கு நிலைக்களமாக விளங்கிற்று. அங்கு, உழவர் குலம் உய்யத் தோன்றினார், நாகனார் என்னும் நல்லிசைப் புலவர். அவர், இளமையிலேயே இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார்; சிறந்த கவிதைகள் புனைந்து வந்தார். அவர் கவிதைகளுக்கு நாடெங்கும் நல்ல வரவேற் பிருந்தது. என்றாலும், நாகனார், பரிசில் வாழ்க்கையை மேற்கொள்ளாது, தம் குலத்திற் குரிய உழவுத் தொழிலை மேற்கொண்டு வாழ்ந்து வந்தார். அவரால் வெள்ளைக்குடி என்னும் ஊர் விளக்கம் பெற்றமையால், எல்லோரும் அவரை ஊர்ப் பெயரோடு சேர்த்து, "வெள்ளைக்குடி நாகனார்" என்று அழைத்து வந்தனர்.

நாகனார் காலத்தில், சோழ நாட்டை ஆண்டுவந்த அரசன், கிள்ளிவளவன் என்னும் பெயரினன். அவன், குளமுற்றம் என்னும் இடத்தில் இறந்ததுபற்றி, 'குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்' என்று வழங்கப்பட்டான். அவன் செந்தமிழ்ப் புலவனாகவும் விளங்கினான். கோவூர் கிழார் போன்ற பெரும் புலவர்கள், அவன் அவைக்களத்தில் அமர்ந்திருந்தனர். அரசன், அவர்களோடு அளவளாவி, புலமை யின்பத்தில் பொழுதைப் போக்கி வந்தான். ஆதலின், நாட்டின் உயிர்நாடியான உழவுத் தொழில் தன்னாட்டில் உயர்வடைவதற்கான எவ்வித முயற்சியும் செய்

தானில்லை. நாளடைவில் உழவுத் தொழில் குன்றியது. வானம் பொய்த்தமையால் நாட்டில் வளங் குறைந்தது. வளவன் நாட்டிலும் வறுமை எட்டிப் பார்த்தது. உழவர்குலம் பட்ட அல்லலுக்கு அளவில்லை. மக்கள் பசிப்பிணியால் துன்புற்றார்கள்; மன்னனைக் கண்டு மனக் குறையை எடுத்துரைக்கும் வகை அறியாது வருந்தினார்கள். அரசனைக் காண்பது, அத்துணை அருமை யாயிற்று.

இந் நிலையில், உயிருக்கு இறுதி பயப்பினும் உண்மையை எடுத்துரைத்து, மன்னனை நல்வழிப் படுத்த உறுதிகொண்டார் நாகனார் என்னும் நல்லிசைப் புலவர். அவர் அரசனை நேரில் பார்ப்பதற்குரிய வழியை ஆராய்ந்தார்; வரி கொடாமையே அதற்குரிய வழியாகும் என்ற முடிவிற்கு வந்தார்; தமது நிலங்களுக்கு வரி கொடுப்பதை நிறுத்தினார். தண்டல்காரர்கள், அவரை அழைத்துச் சென்று, வளவன் முன் நிறுத்தினார்கள். தம் எண்ணம் நிறைவேறியது கண்டு மகிழ்ந்தார் புலவர்.

அரசன் புலவரை நோக்கி, "நீர் வரிப்பணம் செலுத்தாமையின் காரணம் என்ன?" என்று வினவினான். அப்பொழுது நாகனார், அரசனை நோக்கி, "மூவேந்தர்களுள்ளும் முதன்மை பெற்று விளங்கும் வளவர் பெருமானே! காவிரியாறு பாய்தலால் வேலி ஆயிரம் விளையும் விளையுளை யுடையது உனது சோழ நாடு. பொருந்திய செல்வம் மிக்க இந் நாட்டின் பீடுகெழு வேந்தே! நான் கூறுவன சில வுள. அவற்றைக் கேட்பாயாக. அரசே! எளிய குடி-

யானவர்கள், தங்கள் குறைகளைக் கூறுதற்கு இடங் கொடுத்து, அவர்கள் குறைகளை நீக்கி ஆளுவ தன்றோ காவலனான உனது கடமை? அத்தகைய அரசன் ஆளும் நாட்டில்தான், காலந் தவறாது மழை வளம் சுரக்கும் என்பதை நீ அறிந்துகொள்ளுதல் வேண்டும். அரசன் ஒருவன் செங்கோல் தாங்கி அரியாசனத்தில் அமர்ந்திருப்பது, தன் புகழைப் பரப்புவதற்காகவா? குடிகளைக் காப்பதற்காக வன்றோ? வெண் கொற்றக் குடை நிழற்றுவது வெயிலை மறைப்பதற்காகவா? குடிகளின் துன்பத் தைத் துடைப்பதற்காக வன்றோ? வளவ! நீ பகை வரை வெல்வது எதனால் என்று எண்ணுகின்றாய்? படை வலிமையினாலா? இல்லை; இல்லை. உழுகின்ற கலப்பை ஊன்று சாலிடத்து விளைவிக்கும் நெல் லின் வலிமையினால் என்பதை நீ அறிந்துகொள்வா யாக. நாட்டில் எவ்விதமான கேடு நேர்ந்தாலும், உலகம் மன்னனையே பழித்துரைக்கும். இதனை நீ நன்கு உணர்ந்தனையாயின், உழவர்குலம் உயர வழி வகுத்து, அதனால் பிற குடிகளையும் பாதுகாப்பாய். அப்பொழுது நின் அரசும் சிறக்கும்; நாடு நலம் பெறும்; பகைவரும் நின்னடி வணங்கி வாழ்த்துவர்" என்று மன்னன் மனங்கொள எடுத்துரைத்தனர்.

புலவர் மொழிகளை அமைதியாகக் கேட்ட அரசன், அறிவு விளக்கம் பெற்றான்; உழவர்க்கு நேர்ந்த குறையை உடனே நீக்கினான்; நாட்டிற் குழைத்த நாகனாரின் நல்லியல்பைப் பாராட்டி, அறம் உணர்த்திய அறிவுரைக்காக அவருக்கு நன்றி கூறி அனுப்பினான்.

அன்று முதல், சோழ வளநாடு வளம் சிறந்தது. மக்கள் பசியும் பிணியு மின்றி வாழ்ந்தனர். அரசனும் வளவன் என்னும் தன் பெயர் விளங்க வாழ்ந்தான்.

**அரும்பொருள் :-** உய்ய - ஈடேற. துஞ்சிய - இறந்த. அவை - சபை. வளவன் - வளமுடைய நாட்டை ஆண்ட சோழன். வேலி - ஒருவகை நிலத்தளவை. பீடு - பெருமை. காவலன் - அரசன். அரியாசனம் - சிங்காசனம். துடைப்பதற்கு - நீக்குவதற்கு. பிணி - நோய். சால் - உழவுசால்.

## வினாக்கள்

1. நாகனாருக்கு, வெள்ளைக்குடி நாகனார் என்று பெயர் வழங்கக் காரணம் என்ன ?

2. நாகனார் காலத்தில் சோழ நாட்டை ஆண்ட மன்னன் யாவன் ?

3. வளவன் உழவுத்தொழிலைக் கவனியாது வாழக் காரணம் என்ன ?

4. நாகனார் அரசனை நேரில் பார்ப்பதற்குச் செய்த சூழ்ச்சி யாது ?

5. புலவர் அரசனுக்குக் கூறிய அறிவுரையை உன் சொந்த நடையில் எழுதுக.

### பயிற்சி

ஒரே வாக்கியமாக எழுதுக :

1. அரசன் அறிவு விளக்கம் பெற்றான்.
2. அவன் உழவர் குறையை நீக்கினான்.
3. அவன் நாகனாரைப் பாராட்டினான்.
4. அவன் நாகனாருக்கு நன்றி கூறி அனுப்பினான்.

## இலக்கணம்

'செய்தான்' என்பது தானே செய்யும் வினை. இதனால் இதற்குத் தன்வினை என்று பெயர். இதனைப் பிறன் செய்யும் வினையாகக் கூறவேண்டுமாயின், 'செய்வித்தான்' என்று கூற வேண்டும். இது பிறவினை.

'செய்' என்னும் பகுதியுடன் 'வி' என்ற எழுத்தைச் சேர்த்தால், அது பிற வினையாக மாறும். இம் மாதிரி தன் வினையைப் பிற வினையாக்கும் விகுதிகள் இன்னும் சில உண்டு.

| தன்வினை | | பிறவினை | | விகுதி |
|---|---|---|---|---|
| வா | — | வருவி | — | வி |
| கல் | — | கற்பி | — | பி |
| போ | — | போக்கு | — | கு |
| பாய் | — | பாய்ச்சு | — | சு |
| உருள் | — | உருட்டு | — | டு |
| நட | — | நடத்து | — | து |
| எழு | — | எழுப்பு | — | பு |
| துயில் | — | துயிற்று | — | று |

வாழ்ந்தான், தேய்த்தான், மருண்டான், சென்றான், ஆழ்த்தினான், விடுவித்தான் — தன்வினைகளைப் பிறவினைகளாகவும், பிறவினைகளைத் தன்வினைகளாகவும் மாற்றுக.

## கட்டுரை

உழவின் சிறப்பை யாவது, மன்னனின் கடமையை யாவது பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

# 11. வானவூர்தி

[எஸ். குமாரவேல் M. A., L. T.]

பண்டைக் காலத்தில் நமது முன்னோர்கள் ஆகாய வழியேயும் பயணம் செய்துகொண் டிருந்தனர் என்பதற்கு ஆதாரங்கள் பல காணப்படுகின்றன. வாயு மைந்தனாகிய அநுமன், வானத்தை ஆறாகக் கொண்டு, ஆரியர்க்காக இலங்கை சென்றான். சீவகன் தாய், மயிற்பொறியின் மீது ஏறி ஆகாய வழியாகச் சென்று ஓர் இடத்தில் இறங்கினாள். இராமபிரான், இராவணனை வென்ற பின்பு, தேவியாரோடும் இலக்குவனோடும் அயோத்திக்கு விமானத்தில் பறந்து சென்றான். இவை போன்ற நிகழ்ச்சிகள் பல நமது இலக்கியங்களில் காணப்படினும், நம் மக்கள், 'இவை கவிஞர் கற்பனை' எனக்கொண்டு, இவற்றைமெய்ப்பிக்கும் முயற்சியில் தலைப்படாது காலத்தை வீணாக்கினர்.

மேனாட்டு மக்கள், பறவைகளோடு போட்டியிட்டு, 'ஆகாயத்தில் பறக்க வேண்டும்' என்ற ஆசையால், அத் துறையில் இடைவிடாது முயன்று வந்தனர். இத்தாலிய நாட்டில் லியோநார்டோ டி வின்சி என்பவர் ஆகாயத்தில் பறப்பதற்குரிய வழிகளை ஆராய்ந்து கொண்டிருந்தார். பிரான்சு தேசத்தைச் சார்ந்த மான்ட் கோல்வியர் என்பவருடைய பிள்ளைகள் புகைக்கூண்டு ஒன்று செய்து, அதில் ஆடு, கோழி முதலியவைகளை வைத்துக் கட்டிப் பறக்கவிட்டனர்.



புகைக் கூண்டு

எம். ரோஸியர் என்பவரும், மேஜர் ஆர். லாண்டி என்பவரும் புகைக் கூண்டில் 3000 அடி வரை உயரத்தில் பறந்தனர். 1783-ஆம் ஆண்டில் சார்லஸ் என்பவர், புகைக் கூண்டில் பறந்து சென்றார். இவ்வாறு பலரும் வானத்தில் பறப்பதற்கு முயன்றுவந்தபோதிலும், முழுவெற்றி ரைட் சகோதரர்களுக்கே கிடைத்தது.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் டெயிடன் (Dayton) என்னும் நகரில் ஓர்வில் ரைட், வில்பர் ரைட் என்ற



ரைட் சகோதரர்கள் செய்த விமானம்

இரு சகோதரர்கள் இருந்தார்கள். அவர்கள் விண்ணில் பறப்பதற் குரிய வழிகளைப் பொறுமையாக ஆராய்ந்துவந்தார்கள்; மூன்று ஆண்டுகள் இடைவிடாது உழைத்தார்கள். அவ் வுழைப்பின் பயனாக, அவர்கள் 1903-ஆம் ஆண்டு வானவூர்தி ஒன்றுசெய்து முடித்தார்கள். அது மணிக்கு முப்பது மைல் பறக்கக் கூடியதாக இருந்தது. ரைட் சகோதரர்களில் ஒருவர், முதன் முதலாகப் பறந்து காட்டினார். அவர்களது முயற்சியின் வெற்றிதான், இன்றையப் புதுமுறை வானவூர்திகளின் தோற்றத்திற்குக் காரணமாயிற்று. ரைட் சகோதரர்களும் புகழுடம்பு பெற்று விளங்குகிறார்கள். நம் முன்னோர்கள் கண்ட கனவை நனவாக்கும் பெருமை, மேனாட்டினருக்கு உரிய தாயிற்று.

அறிஞர்கள் பலரின் ஆராய்ச்சியின் பயனுய் வெளிவந்த வானவூர்தி, வானத்தில் பறந்து செல்லும் பறவைகளின் வடிவம் போன்றே அமைக்கப்பட்டிருக்கின்றது. வானத்தில் பறந்து செல்லும் வானவூர்தி யொன்றை, அதைப் பற்றி நன்குணராத இளைஞர்கள் பறவை ஒன்று பறப்பதாகவே கொள்வார்க



ஆகாய விமானம்

ளாயின், குறை கூறுவதற்கில்லை. பறவைக் கிருப்பது போன்று, அதற்கும் இரண்டு புறங்களிலும் இரண்டு இறக்கைகள் அமைந்துள்ளன. இறக்கைகளின் நடுவில், உடல் போன்று அமைக்கப்பட்டிருக்கும் உறுப்பில் பயணம் செய்வோர் இருப்பதற்கு இடம் அமைக்கப்பட்டிருக்கின்றது. பறவையின் அலகு போன்று முன்புறம் அமைக்கப்பட்டிருக்கும் விசிறி, வானவூர்தி பறக்கும் வேளையில், கறங்குபோன்று சுற்றிக் கொண்டே இருக்கின்றது. பின்பக்கம், பறவையின் வால் போன்று நீண்டிருக்கின்றது. கீழே

அமைக்கப்பட்டிருக்கும் சக்கரங்கள், பறவைகளின் கால்கள் போன்று, வானவூர்தி கீழே இறங்கும் பொழுதும், உயரக் கிளம்பும் பொழுதும், அதற்கென அமைக்கப்பட்டிருக்கும் தண்டவாளங்களின் வழிச் சிறிது தூரம் செல்வதற்கு உதவுகின்றன.

ஒரு நாட்டை ஆக்குவதற்கும், அழிப்பதற்கு முள்ள ஆற்றல், வானவூர்தியிடம் அமைந்திருக்கின்றது. ஒரு நாட்டின் படை வலிமையை நிச்சயிக்கின்றவற்றுள் முக்கியப் பங்கு இவ் வானவூர்திக்கு முண்டு. இரண்டாவது உலக யுத்தத்தில், வானவூர்தியின் வலிமை நன்கறியப்பட்டது. செலுத்துவோரின்றிச் சென்று, பகைவர் நாட்டைத் தாக்கின வானவூர்திகள். சமாதான காலத்தில் அதன் பொறுப்பு மகத்தானது. குறைந்த நேரத்திற்குள் நீண்ட தூரம் செல்வதற்குரிய சாதனம் அதைத் தவிர வேறில்லை. காலை உணவு கழிந்து திருவனந்தபுரத்திலிருந்து புறப்படும் ஒருவன், ஐந்நூறு மைல்களுக்கு அப்பாலுள்ள சென்னை வரையில் சென்றுவிட்டு, மத்தியான உணவிற்கே தன் வீடு வரமுடிகின்றது என்றால், அதன் சிறப்பு உங்களுக்கு அதிசயத்தைக் கொடுக்க வில்லையா?

**அரும்பொருள் :-** மயிற்பொறி - மயில் போல் செய்யப்பட்ட ஊர்தி. கற்பனை - புனைந்துரை, பொய். ஊர்தி - வாகனம், விமானம். ஆற்றல் - வன்மை. புகழுடம்பு பெறுதல் - இறத்தல். சாதனம் - கருவி.

## வினாக்கள்

1. மேனாட்டில் வானத்தில் பறக்கும் முயற்சியில் உழைத்தவர்கள் யாவர்?

2. அம் முயற்சியில் வெற்றி பெற்றவர் யாவர் ?
3. வான வூர்தியின் அமைப்பை விளக்குக.
. அதன் உபயோகங்களை எழுதுக.

பயிற்சி

எதிர் மொழி தருக :

கனவு, வட்டம், இறங்கு, செல்வதற்கு, ஆக்குதல், மேனாடு.

இலக்கணம்

'அறம் வாழ்க' அறம் என்ற சொல்லை வாழ்க என்ற சொல் தொடர்ந்து நிற்கின்றது. இதில் முதலில் நிற்கும் சொல்லுக்கு நிலை மொழி என்றும், பின்னால் வரும் சொல்லுக்கு வருமொழி என்றும் பெயர்.

நிலை மொழியின் இறுதியும் வருமொழியின் முதலும் இயல்பாகவோ, அன்றி விகாரமாகவோ சேர்வது புணர்ச்சி எனப்படும்.

மரம் + வளர்ந்தது — மரம் வளர்ந்தது — இயல்பு.
மண் + குடம்—மட்குடம்—விகாரம்.

இவ் விகாரம் தோன்றல், திரிதல், கெடுதல் என மூன்று வகைப்படும். வாழை + பழம் - வாழைப்பழம் - தோன்றல். உள் + பட்டு-உட்பட்டு - திரிதல். மரம் + வேர் - மரவேர் - கெடுதல்.

அறநெறி, வாச்சொல், மட்குடம், மனநிலை—இவற்றில் வந்துள்ள விகாரங்கள் யாவை ?

கட்டுரை

வான வூர்தியின் அமைப்பும், உதவியும் விளங்கும்படி ஒரு கட்டுரை எழுதுக.

## 12. குதிரைகள் புலம்பல்

[கவிமணி, சி. தேசிகவிநாயகம் பிள்ளை]

கற்றுத் தெளிந்தநல் மானிடரே !—எம்மைக்
காக்கப் பிறந்த பெரியாரே !
சற்றும் அறிவிலா எம்மொழிக்குச்—செவி
சாய்க்கத் திருவுளம் கொள்வீரே. 1

வளர்ந்து வரும்வாலை வெட்டி வெட்டித்—தேய்ந்த
மாறுபோ லாக்கிக் குறைத்திடும் நீர்
தளர்ந்த பொழுதெங்கள் ஈப்பகை—ஓட்டிடத்
தக்க உதவிகள் செய்வதுண்டோ ? 2

இரும்புக் கடிவாளம் மாட்டுவதேன் ?—வாயும்
ஈசன் படைத்த திதற்காமோ ?
பெரும்புவி மீதினில் உங்களுக்கும்—இந்தப்
பேதைகள் செய்த பிழைகளுண்டோ ? 3

வம்புகள் பேசிடும் வாயையன்றோ—பூட்டி
வைப்பது நீதி முறையாகும் ?
நம்பி இருப்போர்க்குத் துன்பம்—இழைப்பது
நல்லோர் பெரியோர் செயலாமோ ? 4

வெள்ளிப்பூண் கட்டிய சேணமிட்டால்—நெஞ்சு
வேதனை யில்லா திருந்திடுமோ ?
அள்ளி யிடும்பிடிப் புல்லுக்காக—எங்கள்
ஆவியைக் கொள்வ தழகாமோ ? 5

பக்கம் திரும்பியே பார்த்திடாமல்—எங்கள்
பார்வையைக் கட்டி மறைப்பதுமேன் ?
திக்கெலாம் தந்த பிரமனிலும்—நீவிர்
தீவிர புத்தி உடையவரோ ? 6

திண்ணிய லாடமும் கட்டுவதேன் ?—அதில்
தீமெழ எம்மையும் ஓட்டுவதேன் ?
புண்ணியம் நீர்செய்ய வேண்டாமையா—எம்மைப்
போக்கிலே விட்டிடில் போதுமையா. 7

எண்ணிக்கை யற்றதோல் பட்டைகளைக்—கட்டி
எம்மீ திறுக்கி முறுக்கி வைப்பீர் ;
கண்ணுக் கழகவை ஆயிடினும்—எங்கள்
கண்டம் நெரிவ தறியீரோ ? 8

பற்றி முதுகினில் ஏறிக்கொள்வீர் ;—எம்மைப்
பட்சிகள் போலப் பறக்கச் செய்வீர் ;
சற்றும் இரக்கம் இல்லாதவரே—நீங்கள்
சாத்திரம் கற்ற பயன் இதுவோ ? 9

சித்தம் இரங்கிட வேண்டுகின்றோம் ;—எம்மைச்
சேமமாய்க் காத்திடக் கெஞ்சுகின்றோம் ;
புத்த முனியருள் போதனையை—என்றும்
போற்றுதல் உங்கள் கடனுமே. 10

அரும்பொருள் :—மாறு - தடைப்பம். புவி - பூமி. ஈசன் - கடவுள். வம்பு - வீண். சேணம் - மெத்தை. ஆவி - உயிர். திக்கு - திசை. சித்தம் - மனம். போதனை - உபதேசம். போற்றுதல் - பின்பற்றி நடத்தல்.

பயிற்சி

குதிரைகள் புலம்பலை உன் சொந்த நடையில் எழுதுக.

இலக்கணம்

'சொல்வாய்' இவ் வினைச்சொல் கட்டளைப் பொருளில் வருகிறதல்லவா ? இதற்கு ஏவல் வினை என்று பெயர். இது முன்னிலையில் மட்டும் வரும் ; இது ஏவல் ஒருமை.

'சொல்வீர்' என்பது ஏவற் பன்மை. ஏவல் ஒருமைக்கு 'ஐ', 'ஆய்', 'இ' என்பன விகுதிகளாக வரும். பன்மைக்கு 'ஈர்', 'உம்', 'மின்' என்பன விகுதிகளாம். வருவை, வாராய், வருதி - ஏவலொருமை. வாரீர், வாரும், வம்மின் - ஏவற் பன்மை. ஏவல் வினைகள் முன்னிலையில் மட்டும் வரும்; கட்டளைப் பொருளை மட்டும் உணர்த்தும்; ஒருமைக்கும் பன்மைக்கும் வேறு வேறு விகுதிகளைப் பெற்று வரும்.

இன்னும் ஒருவகை ஏவல் உண்டு. அது வாழ்த்துதல், வேண்டுகோள், வசை முதலிய பொருள்களை உணர்த்துவதாய் மூவிடங்களுக்கும் பொதுவாய், ஒருமைக்கும் பன்மைக்கும் ஒரே விகுதியை உடையதாய் வரும். அதற்கு வியங்கோள் வினை என்று பெயர்.

உதாரணம்: வாழ்க, வருக, தருக.

கட்டுரை

யானைமாடு தன்குறைகளைக் கூறுவதுபோல ஒரு கட்டுரை எழுதுக.

# 13. எனது கடற்பிரயாணம்

சென்னை,
10—10—51

அன்புள்ள நண்ப! வணக்கம்

எனது அயல்நாட்டுப் பிரயாணத்தை முடித்து இன்றுதான் நான் ஊர் வந்து சேர்ந்தேன். இப் பிரயாணத்தால் நான் அடைந்த நன்மைகள் பல. நீயும் உலகத்தை ஒரு முறையாவது சுற்றிப் பார்க்க வேண்டுமென்பது எனது ஆசை. எனது பிரயாண அனுபவங்களை உனக்கு அறிவிப்பதின் மூலம், அந்த ஆசையை நான் நிறைவேற்றலாம் என்று நம்பு கிறேன். "உலகை ஒரு முறையாவது சுற்றிப் பாரா தவன் கிணற்றுத் தவளைக்குச் சமம்" என்று நம் முன்னோர்கள் கூறுவது முற்றிலும் உண்மை.

நான் சென்னைத் துறைமுகத்திலிருந்து ஒரு கப் பலில் புறப்பட்டு, நேர் கிழக்காகக் கடலில் பிரயாணம் செய்து, சில நாட்களில் பர்மா தேசத்தின் தலைநக ரான இரங்கூனை அடைந்தேன். நமக்கு அரிசி, தேக்கு, வைரம், மண்ணெண்ணெய் முதலியவற்றை அளித்து வருகின்ற நாடு பர்மா அல்லவா? அந்த நாட்டில் ஓடுகின்ற ஐராவதி நதியை நான் பார்த்தேன். அந் நதியின் கிளைகளுள் ஒன்றன் கரையில்தான், நான் சென்று சேர்ந்த இரங்கூன் நகர் அமைந்துள் ளது. பர்மாவில் பேர்போன மண்ணெண்ணெய்க் கிணறுகள் பார்க்கத் தக்கன. அவற்றில் ஆயிரக் கணக்கான மக்கள் வேலை செய்கின்றனர். பர்மியர் மிகவும் நற்குண முடையவர்களாகக் காணப்படுகின்

றனர். பல சாதிப் பிரிவுகள் அவர்களிடம் இல்லை. ஒரு தாய் வயிற்று மக்களைப் போல் அவர்கள் பழகுகின்றனர். அவர்களுக்கு விளையாட்டில் விருப்பம் அதிகம். பர்மியர் பல வர்ணமுள்ள பட்டாடைகளை அணிந்து கொண்டு, பலவித வர்ணக் குடைகளுடன் உல்லாசமாகக் காலங் கழிக்கின்றனர். ஆண்களுக்கும் பெண்களுக்கும் வேற்றுமை காண்பது அரிதாயிருக்கின்றது. அவர்கள் புத்தமதத்தைப் பின்பற்றுபவர். அவர்களுடைய பகோடா என்ற புத்த ஆலயத்தை நான் தரிசித்தேன்.

பிறகு நான் இரங்கூனிலிருந்து தெற்குநோக்கிச் சென்று, பினங்கை அடைந்தேன். இது ஒரு தீவில் இயற்கையாய் அமைந்த அழகிய துறைமுகப் பட்டினம். இங்கிருந்து தென்கிழக்காகச் சென்று நான் சிங்கப்பூரைச் சேர்ந்தேன். அங்குள்ள துறைமுகம் இயற்கையாகவே பல வசதிகள் வாய்ந்தது. பல பெரிய கப்பல்கள் அங்குத் தங்கி இருக்கின்றன. சிங்கப்பூரைச் சுற்றிப் பல தீவுகள் இருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவை சுமத்ரா, ஜாவா, போர்னியோ, செலிபிஸ் என்பன. இவற்றிற்குப் பொதுவாகக் கிழக்கிந்தியத் தீவுகள் என்று பெயர். இத் தீவுகளில் காடுகள் அதிகம். அதனால் மழையும் அதிகம். பூமி சதுப்பு நிலமாக இருப்பதால், அங்குள்ள மக்கள், மூங்கில்களை நட்டு அவற்றின் மீது வீடுகட்டி வாழ்கின்றனர். சிங்கப்பூர், தென்கிழக்கு ஆசியாவுக்கே மிக முக்கியமான துறைமுகம்.

சிங்கப்பூரிலிருந்து வடகிழக்காகப் பிரயாணம் செய்து, நான் ஹாங்ஹாங் என்னும் துறைமுகத்தை

அடைந்தேன். இதுவே சீனாவின் தெற்கு வாயிலாகக் கருதப்படுவது. சீனா, புராதன நாகரிக முள்ள நாடு. அதைப் பற்றி நீ தனியாகத் தெரிந்துகொள்ள வேண்டும். சீனர்களின் பழக்க வழக்கங்களும் விசித்திரமா யிருக்கின்றன. பொதுவாகச் சீனர்கள், அன்னியர்களை மரியாதையாக வரவேற்று உபசரிக்கின்றார்கள்.

சீனாவின் வடகிழக்கில் பிரயாணம் தொடங்கி, நான் ஒரு தீவுக் கூட்டத்தை அடைந்தேன். இத் தீவுக் கூட்டமே ஜப்பான் நாடு. ஜப்பான் என்பதற்குச் 'சூரியோதய பூமி' என்று பெயர். ஜப்பானியர்களும், பல அம்சங்களில், சீனர்களைப்போன்றே இருக்கின்றனர். இவர்கள் தங்கள் அரசரைத் தெய்வமெனக் கொண்டாடுகின்றார்கள். இவர்களும், அதிதிகளை உபசரிப்பதில் பெயர் பெற்றவர்கள்.

இந் நாட்டில், எரிமலைகள் அதிகம். அடிக்கடி நிலநடுக்கங்கள் நிகழும். இக் காரணத்தினால் இம் மக்கள் பெரும்பாலும் தங்கள் வீடுகளைக் காகிதம், அட்டை, மூங்கில் முதலியவற்றால் அமைத்துக்கொள்கின்றனர்; ஜப்பானியருடைய வீடுகள், பெரும்பாலும் ஒரு பெரிய அறையைக் கொண்டவையா யிருக்கும், இரவு நேரங்களில் தட்டிகளைக்கொண்டு அவர்கள் சிறு அறைகளாகத் தடுத்துக்கொள்வார்கள்; வீடுகளில், தரைகளின்மேல், பாய்களை விரித்து உட்காருவார்கள். இவர்களுக்குச் சித்திரங்களில் பிரியம் அதிகம். பாய்களிலும், திரைச் சீலைகளிலும், உணவுக் கலன்களிலும் சித்திர வேலைப்பாடுகள் காணப்படும். இவர்கள் நாகரிகமாக உடை யுடுத்துகின்றனர். இந்

நாட்டில் கைத்தொழில்களும் அதிகம். எங்கும் பற்பல கைத்தொழிற்சாலைகள் காணப்படும்.

நான் ஜப்பானிலிருந்து தென் கிழக்காகப் பிரயாணம் செய்து தென் அமெரிக்காவை அடைந்தேன். இதன் வடபாகத்தில், அமேஸான் என்ற ஒரு



அமேஸான் காடு

பெரிய நதி ஓடுகிறது. இந் நதியின் இரு கரைகளிலும், அடர்ந்த காடுகள் இருக்கின்றன. இவற்றில் பல கொடிய பிராணிகள் வசிக்கின்றன. இங்கு சுமார் ஒரு அடி நீளமுள்ள ஒருவகை எறும்புகளும், ஈக்கள், குரங்குகள், பலவிதப் பாம்புகள், பல வர்ணங்

கள் உள்ள பறவை வகைகளும் வசிக்கின்றன. இந் நாட்டின் தென் பாகத்தில், ஏராளமான புல்வெளி கள் காணப்படுகின்றன. இவற்றில் ஆடு மாடுகளும் குதிரைகளும் இலட்சக் கணக்கில் மேய்கின்றன. இங்குள்ள பிச்சைக்காரர்கள்கூடக் குதிரைகளின் மீது ஏறிச் சென்று பிச்சை எடுக்கின்றனர்.

பின், நான், தென்னமெரிக்காவிலிருந்து கிழக்கு நோக்கிச் சென்று, ஆப்பிரிக்காக் கண்டத்தை அடைந் தேன். இதன் வடபாகத்தில், சஹாரா என்ற ஓர் பெரிய பாலைவனம் இருக்கிறது. அதன் கிழக்குப் பாகத்தில் எகிப்து என்ற வளமுள்ள நாடு உள்ளது. இங்குப் பாயும் நைல் நதியின் வண்டல் மண்ணே இதைச் செழிப்பாகச் செய்துள்ளது. இங்கேதான், உலகப் புகழ் வாய்ந்த பிரமிட் என்னும் கற்கோபுரங் கள் இருக்கின்றன. அவை பெரும்பாலும் இறந்த அரசர்களின் சமாதிகளாகக் கட்டப்பட்டவைகளாம். அவற்றில் சில கோபுரங்களை நான் பார்த்தேன். அவற்றிற்குள்ளே போய்ப் பார்க்கவேண்டும் என்பது என் ஆசை. ஆனல், அதற்கு நேரமில்லை. வெளியி லிருந்தபடியே, நான் அவற்றின் அமைப்பைப் பார்த்து வியந்தேன். 'ஒவ்வொன்றும் எவ்வளவு பெரிய கற்களால் ஆனது! அவை கட்டிமுடிக்க எவ் வளவு காலம் ஆயிருக்கும்?' என்பவற்றை நினைக்கும் போது, அந்நாட்டு மக்களின் மனவுறுதியும், உழைப் பும் விளங்குகின்றன. ஆப்பிரிக்காவின் மத்தியி லுள்ள அடர்ந்த காடுகளில், பிக்மிகள் என்ற நாகரிக மற்ற முரட்டுக் கறுப்புக் குள்ளர்கள் வசிக்கின்றனர். இவர்கள் பார்ப்பதற்கே பயங்கரமாயிருக்கின்றனர்.

ஆப்பிரிக்காவிலிருந்து கிழக்கு நோக்கிச் சென்று, நான் ஆஸ்திரேலியாவை அடைந்தேன். இங்குள்ள பறவைகள், விலங்குகள், மரங்கள் முதலியன எல்லாம் விநோதமாகக் காணப்படுகின்றன. இதன் பழங் குடிகள் நாகரிகமற்றவர்கள். இப்பொழுது இங்கு ஆங்கிலேயர் அதிகமாகக் குடியேறியிருக்கின்றனர். ஆஸ்திரேலியாவிலிருந்து வடமேற்காகப் பிரயாணம் செய்து, மீண்டும் நான் சென்னையை வந்தடைந்தேன்.

நண்பனே! இக் கடற்பிரயாணத்தில், நான் எத்தனையோ விதமான மக்களைச் சந்தித்தேன்; அவர்களுடைய பேச்சுத் தெரியாமல் விழித்தேன்; ஆனால், ஆங்கிலத்தின் துணைகொண்டு ஒருவாறு சமாளித்தேன். நாடுகள், இயற்கை யமைப்பிலும், தட்ப வெப்ப நிலைகளிலும் ஒன்றுக்கொன்று எவ்வளவோ மாறுபட்டுக் காணப்படுகின்றன. ஆங்காங்குள்ள பிராணிகள், மரங்கள் முதலியவற்றின் தோற்றங்கள் மிகவும் அதிசயமானவை. இவற்றை யெல்லாம் நேரிற் காணாத ஒருவனுடைய அறிவு, மிகவும் அற்பமானதே. இத்தகைய உலகைப் படைத்த இறைவன் பெருமை அளவிடற்கரியது என்று கூறி இக் கடிதத்தை நான் முடிக்கின்றேன்.

இங்ஙனம்,

உன் அன்புள்ள நண்பன்,

உலகநாதன்.

**அரும்பொருள் :—** தரிசித்தேன் - பார்த்தேன். வாயில் - வழி, வாசல். புராதன - பழைய. அதிதிகள் - விருந்தினர். கலன் - பாத்திரம். சமாதி - பிணம் புதைக்குமிடம், இடுகாடு. குள்ளர் - குறுகிய உருவத்தினர். படைத்த - உண்டாக்கிய.

## வினாக்கள்

1. பர்மியர், ஜப்பானியர் இவர்களைப் பற்றி உலக நாதன் கூறுவன யாவை?

2. தென்னமெரிக்காவைப் பற்றி நீ இக் கடிதத்தால் அறிந்துகொண்டன யாவை?

3. இக் கடிதத்தால் நீ பெற்ற நன்மைகள் யாவை?

### பயிற்சி

தக்க சொற்கள் சேர்த்து முடிக்க:

ஜப்பானியருடைய வீடுகள், பெரும்பாலும், ———.

பல ஜாதிப் பிரிவுகள் அவர்களிடம் ———.

ஆங்காங்குள்ள பிராணிகள் மரங்கள் முதலியவற்றின் ———.

### இலக்கணம்

இனிய சொல், இன்சொல் - இவ் விரு தொடர்களில் இன்சொல் என்பது இனிமையாகிய சொல் என்றும்: 'ஆகிய' இடையில் தொக்கது. இவ்வாறு இடையில் உருபு தொகவரும் தொடர்கள் தொகை எனப்படும்.

| தொகை | — தொடர் |
|---|---|
| பாய் மா | —பாய்ந்த மா (வினைத்தொகை) |
| செந்தாமரை | —செம்மையாகிய தாமரை (பண்புத் தொகை) |
| பனை மரம் | —பனையாகிய மரம் (இரு பெயரொட்டுப் பண்புத் தொகை) |
| மலர்ப் பாதம் | —மலர்போன்ற பாதம் (உவமைத் தொகை) |
| நன்மை தீமைகள் | —நன்மையும் தீமையும் (உம்மைத்தொகை) |
| என் மாடு | —என்னுடைய மாடு (வேற்றுமைத் தொகை) |

### கட்டுரை

பல நாடுகளைக் கண்டு மீள்வதால் உண்டாகும் நன்மையைப் பற்றி உன் தோழனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

## 14. பயிற்சி (மௌனமாய் வாசி)

திருவிழாக் கூட்டத்தில் ஒரு திருடன் ஒருவருடைய பணப்பையைக் களவு செய்கிறான். பணப்பைக் குரியவர், சமயத்தில் பார்த்துவிடுகிறார். உடனே பெருங் கூச்சல் போடவே, திருடன் பையுடன் ஓடிப்போக முயல்கிறான். பக்கத்தி லிருந்தவர்கள் அவனைப் பிடித்து அடிக்கத் தொடங்குகிறார்கள். இச் சமயம் ஒரு போலீஸ்காரன் 'அதென்ன கூச்சல்' என்று கேட்டுக்கொண்டே வருகிறான். பணப்பைக் குரியவர் அவனைப் பார்த்து, "ஐயா, நான் திருவிழாக் காட்சியில் கவனமாயிருக்கும் பொழுது, இவன் என் பையில் கையைவிட்டு என் பணப்பையைத் திருடிவிட்டான். நல்ல சமயத்தில் பார்த்துவிட்டேன். இவன் ஓட யத்தனித்தான். உடனே பக்கத்திலிருந்த என் நண்பர் இவனைப் பிடித்துவிட்டார். இதோ இவன் கையிலிருப்பது என் பணப்பைதான்" என்கிறார். போலீஸ்காரன் திருடனைப் பார்த்து 'ஏய் திருடினாயா?' என்று கேட்கிறான்.

இக் கேள்விக்குத் திருடன் என்ன பதில் சொல்வான்? போலீஸ்காரன் தன் மேலதிகாரியிடம் இவ்விஷயத்தைத் தெரியப்படுத்தும் முறையில் எழுதுக.

இது பத்திரிகைகளில் எவ்வாறு வெளிவரும்?

இக் கதையைச் சம்பாஷணை வடிவமாக எழுதுக.

பணப்பையைப் பறிகொடுத்தவர் தம் நண்பன் ஒருவனுக்கு இதுபற்றிக் கடிதம் எழுதுவதுபோல் எழுதுக.

இந் நிகழ்ச்சியைப் பார்த்துக்கொண் டிருந்த வேறொருவன் கூறுவதுபோல் எழுதுக.

# 15. அகராதி தந்த அறிஞர்

[ வித்துவான், ஆ. பிறைசூடும்பெருமாள் பிள்ளை ]

அருஞ் சொற்களுக்கு பொருள் அறிய வேண்டு மானல், அகராதியைத் திருப்புகின்ருேம். அகராதி யில் சொற்கள் அகர வரிசைப்படி முறையாக அமைக் கப்பட்டிருப்பதால், எளிதில் பொருள் அறிய முடி கிறது. இந்த அகராதி முறை, தமிழில் அண்மையில் ஏற்பட்டதாகும். இதற்கு முன்பெல்லாம், நம் முன் ஞேர்கள், நிகண்டைக் கொண்டு பொருள் அறிந்து வந்தனர். நிகண்டில் அகராதி வரிசைப்படி சொற் களை அமைப்பதில்லை. தாமரை என்ற சொல்லை எடுத்துக் கொண்டால், தாமரையைக் குறிக்கின்ற சொற்கள் அனைத்தையும் ஒன்ருகத் திரட்டி, ஒரு செய்யுளாகப் பாடிவைத்திருப்பார்கள். இம் முறை யில் எல்லாச் சொற்களும் அமைந்திருக்கும். மனவலி படைத்த நமது முன்னேர்கள், நிகண்டுகளை மனப் பாடம் பண்ணி, அவர்களே அகராதிகளாக விளங் கினர். இக் காலத்தில், நிகண்டைக் கற்றுப் பொருள் அறிகிற முறை மறைந்தது. நமது குறையை அகராதி தோன்றி அகற்றியது. இந்த அகராதியைத் தமிழில் முதலாவது ஆக்கித்தந்த அறிஞரைப் பற்றி, நீங்கள் அறியவேண்டுவது அவசிய மல்லவா?

நமது தமிழ் மொழியின் வளர்ச்சிக்குத் தாய் நாட்டவர்களே யன்றிச் சேய் நாட்டவர்களான பெரி யார்கள் பலரும், அரும் பாடுபட்டு உழைத்திருக்கின் ருர்கள். அருளானந்தர் என்ற தத்துவ போதக சுவாமி யார், டாக்டர் ஜி. யூ. போப்பையர் முதலிய அறிஞர்கள்

பலரும் தமிழ்த் தாய்க்குப் புதிய அணிகள் செய்து அணிந்தவர்களாவார்கள். அவர்களுள் வீரமா முனிவர் என்பவர் தமிழ்ப் புலமையில் தலை சிறந்து விளங்கியவர்; அரிய நூல்கள் பல இயற்றிப் புகழ் பெற்றவர். அவரே தமிழ் மொழிக்கு அகராதி தந்த அறிஞராவார்.

வீரமாமுனிவர், இத்தாலிய நாட்டில் காஸ்திகிலியோனே என்னும் ஊரில் 1680-ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள் 8-ஆம் நாளில் பிறந்தார். இவரது பிள்ளைப் பெயர் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி (Constantine Joseph Beschi) என்பதாகும்.



'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதற்கேற்ப, இவர் பிற்காலத்தில் 'சான்றோராய் விளங்குவார்' என்பதற்குரிய அறிகுறிகள், இவரிடம் இளமையிலேயே காணப்பட்டன.

வீரமாமுனிவர், உரிய பருவத்தில் கல்வி கற்கலானார்; இளமையிலேயே கிறிஸ்து பெருமான் மீது பெரும் பற்றுக் கொண்டு ஒழுகினார்; மதச்சபையில் அடியாராகச் சேர்ந்து, மத நூல்களை மறவாமல் கற்று மாண்புற்றார். இவரது நுண்ணறிவைக் கண்ட கல்லூரித் தலைவர், இவரைக் 'கலைக்கடல்' என்று

போற்றினு ரென்ருள், இவர் பெருமைக்கு வேறு சான்று வேண்டுமோ?

வீரமாமுனிவரின் கல்வி யாற்றலேக் கண்ட சேசு சபைத் தலைவர், முனிவரை இந்தியாவிற்கு அனுப்பிவைத்தார். அவர் ஆணையைப் பெற்ற வீர மாமுனிவர், கடல் கடந்து போர்த்துக்கீசியருக்குத் தலைநகராய் விளங்கிய கோவா நகர் வந்து சேர்ந்தார்; தமக்குமுன்பு இருந்த குருக்களின் வழிநின்று கிறிஸ்து பெருமானின் போதனைகளைப் பரப்புவதற்கு முயன்ருர். அப்பொழுது, நாட்டுமொழி அறிவு அவசிய மென்பதை உணர்ந்த அடிகள், செந்தமிழ் மொழி யைக்கற்றுத் தேர்ந்து சிறந்த புலவராய் விளங்கினுர்.

அவர், நமது நாட்டு மத நூல்கள் பல வற்றையும் கற்றுத் தேர்ந்தார்; நமது நாட்டுத் துறவிகளைப் போல் உருக் கொண்டார்; அப்பொழுது தான், வீர மாமுனிவர் என்று தம் பெயரையும் மாற்றி யமைத்துக் கொண்டார். புலித்தோலில் அமர்வதும், சிவிகை ஏறி வெளிச் செல்வதும் அவர் வழக்கமாக இருந்தன. சுருங்கக் கூறினுல், அவர் ஒரு தமிழ்த் துறவியாகவே விளங்கினர். அவரது அறிவுரையால் பலர் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்தனர்.

அக் காலத்தில், திருச்சிராப் பள்ளியைச் சந்தா சாகிபு என்னும் மகமதிய மன்னன் ஆண்டு வந்தான். அவன் இவருடைய நுண்மதியைக் கண்டு வியந்து இவரைத் தனது திவானுக அமர்த்தினுன்; இவருக்கு இஸ்மாத்தி சந்நியாசி என்ற சிறப்புப் பெயரைக் கொடுத்தான்; இன்னும் பூக்குளம், மால்வை, அரசூர், நல்லூர் ஆகிய ஊர்களையும் உவந்தளித்தான்.

கி. பி. 1740-ஆம் ஆண்டு நாதர் சிங்கு என்பான் திருச்சிராப்பள்ளியின் மீது படை யெடுத்து, சந்தா சாகிப்பைக் கைதியாகப் பிடித்துச் சென்றான். அக் காலத்தில் நம் முனிவர், மணப்பாறை என்னும் இடத்தை அடைந்து, மதத் திருத்தொண்டில் ஈடு பட்டுக் காலங் கழித்தார். இவர் 1742-ஆம் ஆண்டு, மணப்பாறையை அடுத்த ஆவூரில் வைத்து இறைவன் திருவடி யடைந்தார்.

நம் முனிவர் பன்மொழிப் புலவராய் விளங்கினார். இவர், தம் தாய்மொழியாகிய இலத்தினைத் தவிர, எபிரேயம், கிரேக்கம், போர்த்துக்கீசியம், ஸ்பானியம், பிரெஞ்சு முதலிய மேல் நாட்டு மொழிகளிலும், சமஸ் கிருதம், தமிழ், தெலுங்கு, இந்துஸ்தானி, பெர்ஷியம் முதலிய இந்திய மொழிகளிலும் பெரும் புலவராய் விளங்கினார்.

என்றாலும், நம் முனிவர் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டு என்றும் மறக்க முடியாததாகும். இவர் ஆக்கித் தந்த சதுரகராதியே, தமிழில் ஏற்பட்ட முதல் அகராதியாகும். இன்னும் இவர் தேம்பாவணி, தொன்னூல் விளக்கம், திருக்காவலூர்க் கலம்பகம், வேத விளக்கம், வேதியர் ஒழுக்கம், அடைக்கல மாலை முதலிய பல நூல்களை இயற்றித் தமிழ்ப்பணி புரிந்திருக்கின்றார்.

இத்தகைய தமிழ்ப்பணி புரிந்த வீரமாமுனி வரைத் தமிழகம் என்றும் மறவாமல் போற்றும். இவர் புகழ் என்றும் நின்று நிலவும்.

அரும்பொருள்:— அண்மை - சமீபம். சேய் - தூரம். ஆணை - கட்டளை.

## வினாக்கள்

1. நம் முன்னோர்கள் சொற்களுக்கு எவ்வாறு பொருள் அறிந்து வந்தார்கள் ?
2. தமிழ்ப்பணி புரிந்த வெளிநாட்டவர்கள் யாவர் ?
3. வீரமாமுனிவர் பிறப்பிடம் எது ?
4. அவருக்குச் சந்தாசாகிபு செய்த சிறப்புக்கள் யாவை ?
5. அவர் கற்ற மொழிகள் யாவை ?
6. அவர் தமிழ் மொழியில் ஆக்கிய நூல்கள் யாவை?

## பயிற்சி

நுண்மதியை, ஆக்கித்தந்த, வரிசைப்படி, அரிய, அறிய- இவற்றை வாக்கியங்களில் வழங்கிக் காட்டுக.

## இலக்கணம்

நாட்டை ஆண்டான் என்பதை நாடாண்டான் என்றும் சொல்லலாம். முன்னதில் உருபு வெளிப்பட்டிருக்கின்றது. பின்னதில் உருபு மறைந்திருக்கிறது. உருபு வெளிப்பட்டிருப்பதற்கு வேற்றுமை விரி என்றும், உருபு மறைந்திருப்பதற்கு வேற்றுமைத் தொகை என்றும் பெயர்.

| விரி | — | தொகை |
|---|---|---|
| நாட்டை ஆண்டான் | — | நாடாண்டான் |
| கல்லால் எறிந்தான் | — | கல்லெறிந்தான் |
| கூலிக்கு வேலை | — | கூலிவேலை |
| மலையின்வீழருவி | — | மலைவீழருவி |
| எனது புத்தகம் | — | என்புத்தகம் |
| வீட்டில் புக்கான் | — | வீடுபுக்கான் |

## கட்டுரை

வீரமாமுனிவர் அல்லது அவர்போல் ஒரு புலவர் வரலாற்றைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

# 16. குடிசைத் தொழில்

மேல் நாடுகளான இங்கிலாந்து, ஜெர்மனி முதலிய தேசங்களில், நகரங்கள் மிகுந்து காணப் படுகின்றன. ஆனால், நமது இந்திய நாட்டில், கிராமங்களே அதிகமாக இருக்கின்றன. சுமார், ஏழு லட்சம் கிராமங்கள் இங்கு இருப்பதாகக் கணக்கிடப் பட்டிருக்கின்றன. இந்திய மக்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர், கிராமங்களில் வசிக்கின்றார்கள். உலக மக்கள் தொகையில் ஐந்தில் ஒரு பகுதியினர், இந்திய நாட்டிலுள்ள கிராமங்களில் வசிக்கின்றார்க ளென்றால், அது வியப்பேயல்லவா ?

ஒரு காலத்தில், கிராம மக்கள் தொழில் திறமை யுடையவர்களாகப் பலவிதக் கைத்தொழில்களைச் செய்து, எவ்விதக் குறைவுமின்றி, மன அமைதியுடன் வாழ்க்கை நடத்தி வந்தார்கள். அன்று, கிராமங்களி லுள்ள ஒவ்வொரு வீடும், ஒவ்வொரு தொழிற்சாலை யாக விளங்கிற்று. கிராம மக்கள் நூல் நூற்றல், கம்பளி, துப்பட்டி நெய்தல், விவசாயக் கருவிகள் செய்தல், சட்டி, பானை வனைதல், எண்ணெய் ஆட்டு தல், நெற் குற்றுதல், கயிறு முறுக்குதல் முதலிய பல தொழில்களைச் செய்து வந்தனர். சுமார் நூற்றைம் பது ஆண்டுகளுக்கு முன்பு கூட, ஒவ்வொரு வீட்டி லும் பெண்கள், ஆண்கள், குழந்தைகள் எல்லோ ரும் நூல் நூற்று வந்தனர். இன்று அவைகளெல் லாம் பழங்கதைகளாகிவிட்டன. அன்னிய ஆட்சியா லும், இயந்திரங்களின் போட்டியாலும் அத் தொழில் கள் அழிவுற்றன. அதனாற்றான் கொடிய வறுமையும்,

கடன் சுமையும் நாளுக்கு நாள் மிகுந்து, கிராம மக்களை வாட்டி வதைக்கின்றன.

நமது நாட்டுக் கிராமங்களில் பெரும்பாலோர், விவசாயத்தை முக்கியத் தொழிலாகக் கொண்டு உழைக்கின்றார்கள். விவசாயம் ஆண்டு முழுவதிலும் நடைபெறுவதில்லை. மற்றக் காலங்களில் அவர்கள், எத் தொழிலும் செய்யாது, சோம்பேறிகளாகக் காலம் கழிக்கின்றனர். அக் காலங்களில், அவர்கள் வேலை செய்து பொருள் ஈட்டக்கூடிய குடிசைத் தொழில்களையும், சிறு தொழில்களையும் ஏற்படுத்தி, அவர்கள் பொருளாதாரக் குறைவை நீக்குதல் அவசியமாகும். உள்ளூரில் கிடைக்கும் மூலப்பொருள் களைக் கொண்டு, அவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவு, உடை, விவசாயக் கருவிகள் முதலிய வற்றைத் தாங்களே தயாரித்துக் கொள்ள வசதி அளித்தல் வேண்டும்.

மறைந்துபோன குடிசைத் தொழில்களுக்குப் புத்துயிர் அளிப்பதன் மூலமாகவே, இந்தியக் கிராமங் களின் பொருளாதார நிலையைச் சீர்திருத்தி அமைக்க முடியும். அன்னிய ஆட்சியில் இத் தொழில்கள் அழி வுற்றன. சுதந்திர அரசாங்கம், இதனை நன்குணர்ந்து, இத் தொழில்களுக்கு உயிர் அளிக்க முன்வந்துள் ளது. குடிசைத் தொழில்களில் உற்பத்தி செய்யப் படும் பொருள்களுக்கு விற்பனை வசதி செய்து, பெரிய தொழில்களின் போட்டியினின்றும் பாதுகாத்து, அத் தொழில்களை வளர்ப்பதற்கான திட்டங்களை மத்திய அரசாங்கம் வகுத்துள்ளது. இதற்கென ராஜ்ய சர்க்

கார்களின் பிரதிநிதிகளும், குடிசைத் தொழில்களின் பிரதிநிதிகளும் அடங்கிய 'குடிசைத் தொழிற் குழு' ஒன்றை மத்திய சர்க்கார் ஏற்படுத்தி இருக்கின்றனர். இக் குழுவினர், குடிசைத் தொழில்களை ஏற்படுத்துவது, அவற்றை வளர்ப்பது போன்ற காரியங்களையும், இத் தொழில்களைப் பெரிய தொழில்களுடன் இணைத்து நடத்தும் முறையையும் பற்றி அரசாங்கத்திற்கு எடுத்துரைக்க வேண்டும்; மேலும், குடிசைத் தொழில்களின்மூலம் உற்பத்தியாகும் பொருள்களை விற்பனை செய்வதற்குரிய வழிகளையும், அரசாங்கத்திற்கு அறிவிக்க வேண்டும். இந்தக் குழுவின் ஆலோசனைகளை அமுலுக்குக் கொண்டு வருவது அரசாங்கத்தின் கடமையாகும்.

குடிசைத் தொழிற் பொருள்களை விற்பனை செய்வதற்கு 'மத்தியக் குடிசைத் தொழில் விற்பனை நிலையம்' ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. புது டில்லியிலுள்ள வெளிநாட்டுக் காரியாலயங்களைச் சேர்ந்தவர்கள் பலரும், அங்கு வந்து பலவகைப் பொருள்களைப் பார்வையிடுகின்றனர். பின்னும், வெளிநாட்டினர் பலரும் அங்கு அழைக்கப்படுகின்றனர். ஆதலால், குடிசைத் தொழிற் பொருள்கள் வெளிநாடுகளில் விளம்பரம் செய்யப்படுகின்றன. மேலும், குடிசைத் தொழிற் பொருள்களை, சில விமான நிலையங்களிலும், 'க்வீன் மேரி' கப்பலிலும் வெளிநாட்டு ஸ்தானிகர் காரியாலயங்களிலும் காட்சிக்கு வைத்து விளம்பரம் செய்கின்றனர். இப்பொழுது, ஒரு லட்ச ரூபாய் நிதியுடன் அமைக்கப்பட்ட குழு ஒன்று, இந்தியக் குடிசைத் தொழிலால்

செய்யப்படும் பொருள்களைக் கொள்முதல் செய்து, அமெரிக்காவில் விற்பனை செய்து வருகின்றது.

அரசாங்கம், குடிசைத் தொழில் வளர்ச்சிக்காக அரிய செயல்கள் பல செய்து வருகின்றது; தொழில் நுட்பத் தலைவர்கள் பலரை ஏற்படுத்தி யுள்ளது; ஜப்பானியக் குடிசைத் தொழில் முறைகளை நேரில் அறிந்து வருவதற்கும், சிறு இயந்திரங்கள் வாங்கு வதற்குமாகத் தூதுக் குழு ஒன்றை ஜப்பானுக்கு அனுப்பி யுள்ளது; இன்னும், குடிசைத் தொழில் வளர்ச்சியைக் கருதி, அலிகாருக்கு அருகில் 'ஹார் துவாகஞ்ச்' என்ற இடத்தில் 'மத்தியப் பயிற்சி ஆராய்ச்சிக் கழகம்' ஒன்றை அமைக்க ஏற்பாடு செய்துவருகின்றது.

அரசாங்கம், இம் முறையில் குடிசைத் தொழி லுக்குப் புத்துயிர் அளிப்பதோடு, நிதி யுதவவும் முன்வந்துள்ளது. கைத்தறித் தொழிலுக்கு மட்டும் ஒரு கோடி ரூபாய் நிதி ஏற்படுத்த வேண்டும் என்ற திட்டம் உருவாகி இருக்கிறது. சென்ற வருடம் பத்து லட்சம் ரூபாயில் கைத்தறித் தொழில் வளர்ச்சி நிதி யொன்று ஏற்படுத்தப்பட்டது. இதைத் தவிர, மற்றைக் குடிசைத் தொழில்களுக்காக மத்திய சர்க்கார் பதினாறு லட்சம் ரூபாய் ஒதுக்கி இருக்கின் றார்கள். இன்னும் குடிசைத் தொழில்களுக்கு வேண் டிய மூலப்பொருள்களை விவசாய இலாகா உதவி வரு கின்றது. போபால், குடகு, மத்தியப் பிரதேசம், கட்ச், மணிபுரி, திரிபுரா, பிலால்பூர், அஜ்மீர், டில்லி முதலிய இடங்களில் தொழில் ஆலோசனைக் குழு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அந்தக் குழுவின் சிபாரிசு

களின் பேரில், அரசாங்கம், தொழில் வளர்ச்சி கருதி, அவற்றிற்குக் கடனும் அளிக்க முன்வந்துள்ளது.

சுதந்திர இந்திய அரசாங்கம் குடிசைத் தொழில்களுக்குப் புத்துயிரளிக்கத் திட்டம் வகுத்து முயன்று வருவது பாராட்டத் தக்கதாகும். அரசாங்கத்தின் இம் முயற்சியால், நாட்டில் தொழில்வளம் பெருகிச் செல்வ நிலை உயர்வதோடு, சுதந்திர இந்தியா செழித்துத் தழைத்து வளரும் என்பதும் உறுதி.

**அரும்பொருள்** :— ஈட்டக்கூடிய - தேடக்கூடிய. உற்பத்தி - விளைவு. போட்டி - எதிர்ப்பு. திட்டம் - அமைப்பு.

## வினாக்கள்

1. முன்னாளில் கிராம மக்கள் அமைதியாக வாழ்க் காரணம் என்ன?

2. கிராம மக்களுக்குக் குடிசைத் தொழில் அவசியம். ஏன்?

3. குடிசைத் தொழிற் பொருள்கள் எவ்வாறு விளம்பரம் செய்யப்படுகின்றன?

## பயிற்சி

குடிசைத் தொழில் வளர்ச்சிக்கு அரசாங்கம் செய்துள்ள உதவிகளைத் தொகுத்து எழுதுக.

## இலக்கணம்

1. நட, வா, உண் - இவ் வினைப் பகுதிகளில் முக்கால இடை நிலைகளையும் சேர்த்து எழுதுக.

2. உடன்பாடு எதிர்மறைகளுக்கு உதாரணம் தருக.

## கட்டுரை

குடிசைத் தொழிலின் இன்றியமையாமையை விளக்கி உன் தோழனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

## 17. நமது சுதந்திரக் கொடி

[மு. சங்கரலிங்கம்]

ஒரு நாட்டின் கொடி, அந் நாட்டு ஆட்சியின் குறிக்கோள்களையும், அந் நாட்டு மக்களின் பண்பாட்டையும் எடுத்துரைக்கும் அறிகுறி யாகும். நம் பண்டைத் தமிழ் நாட்டில், ஆட்சிச் சின்னங்களாகிய கொடி, முடி, கோல் ஆகிய மூன்றிலும் கொடியே முதன்மை பெற்று விளங்கியது. நாட்டில் அமைதி நிலவிய காலத்திலும், போர் நடந்த காலத்திலும் மக்கள், அந் நாட்டுக் கொடியைப் போற்றிப் பணிந்து வந்தார்கள். நாட்டுக் கொடி தங்கு தடையின்றிப் பறந்து நிற்பதுதான், அந் நாட்டின் சுதந்திரத் தன்மையை உணர்த்திவந்தது.

வாணிபம் செய்ய வந்த ஆங்கிலேயர்கள், அன்று ஆண்டுவந்த மன்னர்களின் ஒற்றுமை யின்மை, பொறாமை முதலியவைகளைப் பயன்படுத்தி, இந் நாட்டையே தங்களுக்கு உரிமையாக்கிக் கொண்டார்கள். விக்டோரியா மகாராணியாரின் பிரகடனத்தோடு, இங்கிலாந்தின் கொடியாகிய 'யூனியன் ஜாக் கொடி' நம் நாட்டுக் கொடியாகத் திணிக்கப்பட்டது; வெள்ளைய ராட்சியை வெளியேற்றி, நம் நாட்டைச் சுதந்திர நாடாக்க வேண்டும் என்ற எண்ணம் நம்மவரிடையே எழுந்ததன் காரணமாக, காங்கிரசு மகா சபை தோன்றியது. காந்தியடிகள், அச் சபைக்குத் தலைமை தாங்கியபொழுது ஆரஞ்சு, வெள்ளை, பச்சை நிறங்க ளடங்கிய மூந்நிறக் கொடியைக் காங்கிரஸ் இயக்கத்தின் கொடியாக மாற்றினர். வெள்ளை

நிறத்தில் ராட்டின உருவம் பொறிக்கப்பட்டது. 'வெள்ளைய ராட்சி வெளியேற வேண்டும்; ஆடிப் பறக்கும் யூனியன் ஜாக் கொடி இறக்கப்பட்டு, அங்கெல்லாம் மூவர்ணக்கொடி பட்டொளி வீசிப் பறக்க வேண்டும்' என்பது காங்கிரசின் முக்கியக் கொள்கையாக இருந்தது. இக் கொள்கையை நிறைவேற்றுவதற்கு மகாத்மா காந்தியடிகளின் தலைமையில் பல போராட்டங்கள் நடைபெற்றன.

நாகபுரியில் நடந்த கொடிப் போராட்டம் குறிப்பிடத் தகுந்தது. நமது தாய்நாட்டுக் கொடிக்கு ஏற்பட்ட தடையை நீக்குவதற்காக, அந்தப் போராட்டம் நடைபெற்றது. பல தொண்டர்கள் தமது இன்னுயிரை ஈந்து நமது கொடியின் புகழைக் காத்தனர். "கையிலிருக்கும் மூந்நிறக் கொடியைத் தந்துவிடு; இல்லையேல் உன் உயிர் குண்டாந்தடிக்கு இரையாக்கப்படும்" என்று கூறியவிடத்து, தன் இன்னுயிரை ஈந்து கரத்திலேந்திய கொடியின் மானத்தைக் காத்தான் திருப்பூர்க் குமரன் என்னும் வீர வாலிபன். இவனைப் போன்ற எண்ணிறந்த வாலிபர்களது பணியாலும், தாய்மார்களின் தீர மிக்க செயல்களாலும், அண்ணல் காந்தியடிகளின் அரும் பெரும் உழைப்பாலும் நமது கொடி வானுற ஓங்கிப் பட்டொளி வீசிப் பறக்கின்றது. தடையிட்ட வைசிராயே நமது கொடிக்குத் தலைவணங்கிச் சென்ற காட்சி, நமது வெற்றியின் பெருமையைப் பாரறியச் செய்தது.

நமது கொடியி லமைந்துள்ள ஆரஞ்சு, வெள்ளை, பச்சை என்னும் மூன்று நிறங்களும் உயர்ந்த உண்மைகளை வலியுறுத்துகின்றன. ஆரஞ்சு நிறம், நமக்குள்ள

பலத்தையும், நாம் செய்த உயிர்த் தொண்டையும் குறிக்கின்றது. வெள்ளை நிறம், நாம் கடைப்பிடிக்க வேண்டிய சத்தியத்தையும், நாம் கைக்கொள்ள வேண்டிய அமைதியையும் குறிக்கின்றது. பச்சை நிறம் நம்பிக்கைக்கும், ஆற்றலுக்கும் அடையாளம்.

நாடு சுதந்திரம் அடைந்ததும், மூவர்ணக் கொடியில் முன்பு பொறிக்கப் பட்டிருந்த ராட்டைச் சின்னத்தை மாற்றி, அந்த இடத்தில் அசோக சக்கரத்தைப் பொறித்திருக்கிறார்கள். இதன் காரணத்தை அறிய நீங்கள் அவாவுறலாம். சாதாரணமாக, கொடியின் ஒரு புறத்தைப் போலவே மறுபுறமும் அமைய வேண்டும். ஆனால், ராட்டைச் சின்னத்தில் ஒரு புறம் சக்கரமும், மறுபுறம் கதிரும் இருந்தன. ஆகவே அதை மாற்றி இருபுறமும் அசோக சக்கரத்தைப் பொறிப்பதென முடிவு செய்யப்பட்டது. ஒரு நாட்டுக் கொடியில் பொறிக்கப்பட் டிருக்கும் சின்னத்தைப் பற்றி எவ்விதக் கருத்து வேற்றுமையும் இருக்கக் கூடாது. ராட்டையைப் பொறுத்த வரையில், கருத்து வேற்றுமை இருந்தது. ஆனால், அசோக சக்கரத்தைப் பொறுத்த வரையில், எவருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. மேலும், அசோக சக்கரம், இந்தியாவின் பழம் பெருமையை எடுத்துக் காட்டுவதோடு, அமைதியின் சின்னமாகவும் விளங்குகிறது. அன்றியும், அது தருமச் சக்கரமு மாகும். ராட்டையிலுள்ள சக்கரத்தைவிடத் தருமச் சக்கரமே சாலவும் சிறந்தது என்று கருதி அது மாற்றப் பட்டது.

பிற நாட்டுக் கொடிகளை விட, நமது தேசியக் கொடிக்குச் சமாதானச் சின்னம் பொறிக்கப்பட்டிருப்பது ஒரு தனிச் சிறப்பாகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த நமது கொடியைக் காப்பாற்றவேண்டிய பொறுப்பு, நம் ஒவ்வொருவரையும் சாரும். 'எங்கள் தாய்த் திருநாட்டின் தவமணிக் கொடிக்கு இன்னல் செய்ய எவர் நினைத்தாலும், இன்னுயிர் ஈந்தும் இடர்களைவோம்' என்று நாம் ஒவ்வொருவரும் சபதம் செய்துகொள்வோம்.

**அரும்பொருள்:—** பண்பாடு - நாகரிகம். சின்னம் - அறிகுறி. அண்ணல் - பெரியார். வைசிராய் - பிரதிநிதி. வலியுறுத்துகின்றன - உறுதிப்படுத்துகின்றன. பொறிக்க - வரைய, எழுத. அசோக சக்கரம் - அசோக மன்னன் ஏற்படுத்திய சக்கரம். சபதம் - உறுதி, சூளுறவு.

**வினாக்கள்**

1. முந்நிறங்களின் கருத்தை விளக்குக.
2. முன்பு பொறிக்கப்பட்டிருந்த கைராட்டையை நீக்கி, அசோக சக்கரத்தைப் பொறிக்கக் காரணம் என்ன?
3. நமது கொடியின் தனிச்சிறப்பு யாது?

பயிற்சி

தகுந்த சொற்களைச் சேர்த்து முடிக்க:

ஒரு நாட்டுக் கொடியில் ——— இருக்கும் ——— பற்றி எவ்விதக் கருத்து ——— ——— கூடாது.

அசோக சக்கரம், ——— பழம் பெருமையை எடுத்துக் காட்டுவதோடு, ——— ——— ———.

இலக்கணம்

தன்வினை தருக:

இறக்கினான், ஈட்டிய, பறப்பித்தனர், அமைத்து.

கட்டுரை

நமது சுதந்திரக் கொடியைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுக.

## 18. பயிற்சி (மௌன வாசிப்பு)

1. குணங்களை அறிந்து கூறுக:-கன்னன் தன்னிடம் வந்து யார் எதைக் கேட்டாலும் தடையின்றிக் கொடுத்துவிடுவான்; தன் உயிரைக் காக்கக்கூடிய கவசங்களையும் குண்டலங்களையும் இந்திரனுக்குக் கொடுத்தான்; தன் தாய் வந்து வேண்டியும், 'என்னைக் காப்பாற்றிய துரியோதனனை விட்டு வரமுடியாது' என்று சொல்லி அவன்பொருட்டு உயிர் விட்டான்.

ஈகை, செய்ந்நன்றியறிவு, தியாகம்,
நட்பு, அன்பு, இரக்கம்.

2. பின்வரும் வாக்கியங்களை முறைப்படுத்திக் கதையைச் சொல்க:

பொறாமையால் கரிகாற்சோழனின் தாயத்தார் அவனைச் சிறைப்படுத்தித் தீயும் வைத்தனர். பிறகு அரசுரிமையைக் கைக்கொண்டனன். இளஞ்சிங்கமாகிய கரிகாலன் சிறையினின்றும் தப்பிச் சென்றான்; நடுநிலை தவறாது நீதி செலுத்திப் பல நன்மைகளைச் செய்தான்; கால்கரிந்து போனமையால் கரிகாலன் என்று பெயர் பெற்றான். இரும்பிடர்த்தலையார் அவன் வெளிவருவதற்குத் துணைசெய்தார். அவன் பகைவரைப் போரில் வென்றான். சிறையிலிருந்து தப்பிய பொழுது கால் கரிந்து போயிற்று. சந்தேகம் கொண்ட இரண்டு கிழவர்களுடைய வழக்கை விசாரித்து நீதி வழங்கினான். அவன் நீதி வழங்குவதில் நிகரற்றவன்.

இக் கதைக்குப் பொருத்தமான பெயர் இடுக,

கரிகாலன் தான்பட்ட துன்பத்தைத் தானே சொல்வது போல் எழுதுக.

## 19. கூட்டுறவுச் சங்கம்

ஒரு நாட்டின் முன்னேற்றம், அந் நாட்டின் பொருளாதார நிலையைப் பொறுத்து அமைகிறது. நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் நல்ல முறையில் உண்டு, உடுத்து, மகிழ்ச்சியோடு வாழவேண்டும் என்பதே ஒரு நாட்டின் இலட்சியமாகும். அதற்கு ஒவ்வொருவருக்கும் போதுமான வருவாய் இருத்தல் வேண்டும். எல்லோரும் அத்தகைய வருவாய் உடைய வர்களாய் இருப்பதில்லை. சிலர், வருவாயினும் செலவு அதிக முடையவர்களாய்க் காணப்படுகின்றனர்கள். அவர்கள் கடன் தொல்லையால் அல்லற் படுவார்கள். கடன்பட்டார் கொள்ளும் கலக்கம் கடலினும் பெரிதன்றோ! அவர்கள் மானமழிந்து, மதி கெட்டுக் கதி கலங்குவார்கள். அவர்களுக்கு வாழ்க்கைச் செல விற்கும், தொழில்களைத் திறம்பட நடத்துவதற்கும் மேலும் கடன் வாங்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது.

இந் நிலையில் கடன் கொடுப்பவர்களோ, உதவி புரியும் எண்ணம் சிறிதும் இல்லாதவர்களாய், வட்டி வாங்கும் பேராசையால், அளவுக் கதிகமான வட்டி விதித்துக் கடன் கொடுத்து, அவர்களை ஓட்டாண்டிக ளாக்கி விடுகின்றனர்கள். இவ்வாறு கடன்பட்டுத் தம் விளை நிலங்களையும் விற்றுக் கொடுத்துக் கெட்ட வர்கள் எண்ணிலடங்கார். பொதுவாக இந்திய நாடு விவசாய நாடு. ஆதலால், விவசாயிகளிற் பெரும் பாலோர் கடன் பளுவைத் தாங்க முடியாது அல்ல லுறுவதை இன்றுங் காண்கின்றோம். இந்த ஏழை விவசாயிகளுக்கு உதவி, அவர்களைக் கைதூக்கி விடுவ தற்குப் பெருந்துணையாவது, கூட்டுறவுச் சங்கமாகும்.

**கூட்டுறவுச் சங்கம்** என்பது நல்லெண்ணமும் ஒற்றுமையும், ஒழுங்கும் உடையவர்கள் தாங்களாகவே விரும்பிப் பொருளாதார முறையில், ஒன்றுகூடி உறவுகொண்டு, காரியங்களை நடத்துவதற்கு ஏற்பட்டதாகும். இதில் சேர்கின்றவர்கள், தங்களிடமுள்ள சிறுதொகையை ஒரு நிதியாகச் சேர்த்துக் குறைந்த வட்டிக்குக் கொடுக்கல் வாங்கல் செய்து, பெருஞ் செல்வர்களைப்போன்ற செல்வாக்குடன் லாபத்தையும் சௌகரியத்தையும் அடையலாம். இதில் உறுப்பினர்களாகின்றவர்களுக்கிடையில் ஒற்றுமை யுணர்ச்சி நிலவும்; எவ்வித வேற்றுமை உணர்ச்சியும் இராது.

இச் சங்கம் முதலில் ஜெர்மனி நாட்டில் தோன்றியது. அக் காலத்தில் ஜெர்மனி நமது இந்திய நாட்டைப்போல் விவசாய நாடாக இருந்தது. அங்கு உழவர்கள் போதிய வருவாய் இன்றி வருந்தினார்கள்; தொழிலை நம்பிக் கடன்பட்டார்கள்; அறுவடைக் காலங்களில் விளைந்த தானியங்களை வட்டிக்காகக் கொடுத்துவிட்டு, அரை வயிற்றுக் கஞ்சிக்கும் வழி இன்றி வாடினார்கள். அவர்களின் நிலைக்கு இரங்கினார், அந் நாட்டுப் பெருஞ் செல்வரான **ரெய்பீசன்** என்பார். ஏழை மக்கள் கடன்பட்டுக் கலங்குவதைக் கண்டு அவர்கள் கவலையை நீக்குவதற்கு வழிகாண முயன்றார் அவர். அம் முயற்சியின் பலனாகத் தமது கிராமத்தில், குடியானவர்களை எல்லாம் ஒன்றுசேர்த்து, 1848-ஆம் ஆண்டு, ஒரு கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்தினார். அச் சங்கத்திற்குக் குறைந்த வட்டிக்குப் பணம் கொடுத்து வாங்குவதற்

கான சில ஏற்பாடுகளையும் அவர் செய்து உதவினார். அதனால் குடியானவர்களின் கடன்சுமை குறைந்தது. அவர்கள் செல்வ நிலை உயர்ந்தது. அவர்களிடம் சிக்கனமும், உழைப்பும் மிகுந்தன. இச் சங்கம் கொடுக்கல் வாங்கலோடு மட்டும் நிற்கவில்லை. அதனைச் சார்ந்து கூட்டுறவுப் பண்டகசாலை, கூட்டுறவுக் கைத்தொழிற்சாலை, கூட்டுறவுக் கல்விச்சாலை முதலியவைகளும் தோன்றின. அவை வாழ்க்கையில் பல துறைகளிலும் மக்கள் நன்மை அடைய உதவின. இதனால், அந் நாடு ஒற்றுமை, ஒருமை, பொருளாதாரம், கைத்தொழில், கல்வி முதலியவற்றில் சிறந்து விளங்கிற்று.

கூட்டுறவுச் சங்கத்தால் ஜெர்மனி அடைந்த நன்மைகளைக் கண்ட பிற நாட்டினர் தங்கள் நாடுகளிலும் இச் சங்கத்தை ஏற்படுத்த முன்வந்தனர். ஐரோப்பாவில் டென்மார்க் என்னும் ஒரு சிறிய நாடு உண்டு. அது வறுமை மிக்க நாடாக இருந்தது. அந் நாட்டினர் கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்திக் கொண்டனர். அவர்கள் கூட்டுறவு முறையில் பயிர்த் தொழில் செய்தல், ஆடு, மாடு, கோழி முதலியவைகளை வளர்த்தல், அவற்றின் பால், இறைச்சி, முட்டை முதலியவைகளை வெளிநாடுகளுக்கு அனுப்புதல் முதலிய பல முறைகளை மேற்கொண்டு உழைத்தனர். அதனால், நாட்டின் செல்வ நிலை உயர்ந்தது. ஒரு காலத்தில் மிகவும் எளிய நிலையில் இருந்த அந் நாட்டினர், இன்று தங்கட்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் கூட்டுறவு முறையில் பெற்றுப் பெரும் லாப மடைந்துவருகின்றனர். அந் நாட்டு

மாணவர்கட்கும் கூட்டுறவுச் சங்கத்தை நடத்துவதற்குரிய பயிற்சி அளிக்கப்பட்டு வருகின்றது. கூட்டுறவுச் சங்கத்தால் ஒரு நாடு உயர்நிலை அடையும் என்ற உண்மையை, டென்மார்க் தேசம் உலகிற்கு விளக்கிக் காட்டியுள்ளது.

இச் சங்கத்தால் விளையும் நன்மைகளைக் கண்ட நமது அரசியலார், 1904-ஆம் ஆண்டில் இச் சங்கங்களை நிறுவுவதற்கு ஒரு சட்டத்தை ஏற்படுத்தினார்கள்; சங்க முறைகளை மக்களுக்குத் தெரிவிப்பதற்குப் பல அதிகாரிகளை நியமித்தார்கள். இதனால், நமது நாட்டிலுள்ள கிராமங்களிலும் நகரங்களிலுமாக ஆயிரக் கணக்கான சங்கங்கள் தோன்றின. நமது நாட்டைப் பொறுத்த வரையில், விவசாயிகளின் கடன்பளுவைக் குறைப்பதற்கென்று, இச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. ஆகையாற்றான், நம் தேசத்தில் இச் சங்கங்கள், கடன் கொடுப்பதை முக்கிய நோக்கமாகக் கொண்டு நடைபெறுகின்றன. இச் சங்கத்தில், தங்கள் கூட்டுறவு மூலம் பெருந் தொகை கடன் வாங்கவும், அதனால் தங்கள் கடனைத் தீர்த்து விவசாயத்தைப் பெருக்கவும் வழி ஏற்பட்டது. இச் சங்கத்தை ஐக்கிய நாணயச் சங்கம் என்றும் கூறுவதுண்டு.

இச் சங்கத்தில் பல பிரிவுகள் இருக்கின்றன. அவை ஒவ்வொரு தேசத்தில், ஒவ்வொரு முறையில் தொண்டாற்றுகின்றன. இங்கிலாந்தில் இச் சங்கம் சாமான்களை மொத்தமாக வாங்கி உறுப்பினர்களுக்கு விற்று வருகிறது; இதனைக் கூட்டுறவு வாணிபச் சங்கம் என்று கூறலாம். இம் மாதிரியான

சங்கங்கள், நமது நாட்டிலும் பல இடங்களில் ஏற்பட்டுள்ளன. இத்தாலி தேசத்தில் தொழிலாளிகள், கூட்டுறவு முறையில் ஒன்றுகூடிப் பெரிய வேலைகளைக் 'கண்டிராக்டு' எடுத்து முடித்து, லாபத்தைப் பங்கிட்டுக்கொள்கின்றார்கள்.

இச் சங்கத்தை நமது ஊரில் ஏற்படுத்தவேண்டுமானால், நமது எண்ணத்தைக் கூட்டுறவுச் சங்க அதிகாரிக்குத் தெரிவிக்க வேண்டும். அதன்பின், தலைவர் ஒருவர் வந்து, அச் சங்கத்தால் ஏற்படும் நன்மைகளையும், அமைக்கவேண்டிய முறையையும் விளக்கிக் கூறுவார். பின் அதில் சேர விரும்புகின்றவர்கள் கையெழுத்திட்டுத் தலைவருக்கு விண்ணப்பம் செய்யவேண்டும். குறைந்தது பத்து உறுப்பினர்களாவது சேரவேண்டும். பின்னர், சங்கம் ஏற்படுத்தப்படும். இச் சங்கத்தில் உறுப்பினராவதற்கு ஒழுக்கமும், வாக்குறுதியும் வேண்டும். பதினெட்டு வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் அனைவரும் இதன் உறுப்பினராகலாம்.

நாட்டிற்குப் பலவகையிலும் நன்மை செய்யும் இச் சங்கங்கள் இன்னும் பலவாகப் பெருகுதல் வேண்டும். உழவர்களுக்கு வேண்டிய விதை, எரு, உழுதொழிற் கருவிகள் முதலியவற்றை மலிவான விலைக்கு வாங்கி, குறைந்த இலாபத்தில் கொடுத்து உதவும் சங்கங்கள், கிராமங்கள்தோறும் தோன்றுதல் வேண்டும். கூட்டுறவு முறையில் பாற் பண்ணை முதலியனவும் தோன்றுதல் வேண்டும். இன்னும், நகரங்களி லுள்ள தொழிலாளிகளுக்கும், வியாபாரிகளுக்கும் உதவுகின்ற முறையிலும் கூட்டுறவுச்

சங்கங்கள் தோன்றுதல் வேண்டும். அப்பொழுது தான், இந்திய நாடு இணையற்ற நாடாக விளங்கும்.

**அரும்பொருள்** :— வருவாய் - வருமானம். பளு - சுமை. நிறுவுதல் - ஏற்படுத்தல்.

## வினாக்கள்

1. ஒரு நாட்டின் இலட்சியம் யாது ?
2. கடன் படுவதனால் வரும் தீமைகள் யாவை ?
3. கூட்டுறவுச் சங்கம் முதன் முதல் யாரால், எங்கு, எதற்காக ஏற்படுத்தப்பட்டது ?
4. இச் சங்கத்தால் டென்மார்க் நாட்டினர் எவ்வாறு பயனடைந்தனர் ?
5. இச் சங்கம் நமது நாட்டில் எப்பொழுது ஏற்படுத் தப் பட்டது? இதனால் நம் நாடடைந்த நன்மைகள் யாவை?

## பயிற்சி

வாக்கியங்களில் அமைத் தெழுதுக :-

வருவாய், இலட்சியம், கொடுக்கல் வாங்கல், நிறுவினர்.

## இலக்கணம்

நிலைமொழியின் இறுதியில் நிற்கும் குற்றியலுகரத்தின் முன் உயிர் வந்தால், அக் குற்றியலுகரம் கெடும். சில முற்றியலுகரங்களும் அவ்வாறே உயிர் வரின் கெடும்.

கொள்வது + இல்லை = கொள்வதில்லை

அளவு + இட்டு = அளவிட்டு

நிலைமொழியின் இறுதியில் நிற்கும் மெய்யின் முன், வருமொழி முதலில் உயிர் வருமாயின், வந்தவுயிர் நின்ற மெய்யின் மேல் ஏறி, உயிர் மெய்யாகும்.

உடல் + அழகு = உடலழகு

## கட்டுரை

கூட்டுறவுச் சங்கத்தைப் பற்றி ஒருகட்டுரை வரைக.

## 20. குரு குதிரைமேலிருந்து விழுந்தது

[வீரமாமுனிவர்]

(இக் கதையை மௌனமாக வாசிக்கவும்)

எச்சரிக்கையோடு பலவூர்களுக்குப் போய்வந்தால் கையிற் பணம் கிடைக்குமே யொழிய, மடத்திலிருந்தால் அது கிடையாதென்று கருதி ஊரூராய்ச் சுற்றி வரக் குருவும் சீடர்களும் புறப்பட்டார்கள்.



எங்கும் போய்ச் சுற்றிக்கொண்டு ஒரு நாள் அவர்கள் மடத்துக்குத் திரும்பி வருகையில், குரு அசைந்தசைந்து குதிரைமேல் ஊசலாடிக்கொண்டு வரும்பொழுது, கீழே தொங்கின ஒரு மரக்கொம்பு பட, அவர் தலைப்பாகை பின்பக்கத்தில் விழுந்தது. அதைச் சீடர்கள் எடுத்தார்களென் றெண்ணிக் கொண்டு, ஒன்றும் பேசாமல் சும்மா வெகுதூரம்

சென்ற பின்பு அவர் “தலைப்பாகை எங்கே? தாருங்கள்” என்று கேட்டார். “அஃது அங்கே விழுந்த விடத்திலே கிடக்கும்” என்று அவர்கள் சொல்ல, அவர் கோபித்துக் கொண்டு, “விழுந்த வெல்லாம் எடுக்கத் தேவை யில்லையோ? நான் சொல்ல வேண்டுமோ?” என்றார். அந்த மட்டில் மடையன், அப்படியே அங்கே ஓடிப்போய் விழுந்த பாகையை எடுத்துக்கொண்டு வருகையில், அதற்குமுன் பெய்த மழையில் செழிப்பாய் வளர்ந்திருந்த புல்லை மேய்ந்து அன்றிராத்திரி குதிரை கழித்த இளகலாகிய லத்தியை அந்தத் தலைப்பாகையில் ஏந்திக்கொண்டு வந்து, பக்தியுடனே குருவின் கையில் ஒப்புவித்தான்.

அப்போது அவர், “சீ சீ” என்று வெகுவாய்க் கோபித்தார். அதற்கு எல்லாருங் கூடி, “இஃதேதையா! விழுகிறவை எல்லாவற்றையும் எடுக்கச் சொல்லி முன் கற்பித்தீ ரல்லவா? குருவார்த்தை கடக்கலாகாதென்று கற்பித்தபடி செய்தால், இப்பொழுது நீர் வருத்தப்படுவா னேன்?” என்றார்கள். குருவோ “அப்படியன்றே, எடுக்கத் தகுவதும், எடுக்கத் தகாதது முண்டு; எதையும் பகுத்தறிந்து செய்ய வேண்டும்” என்றார். “நாங்கள் அம்மாத்திரத்திற்குத் தக்க மனுஷரல்லேம்; எடுக்க வேண்டியதை மாத்திரம் இன்ன தென்பதாக வேறே எழுதித் தரவேண்டும்” என்று அவர்கள் கேட்டார்கள். அவரும் எழுதிக் கொடுத்தார்.

அப்புறம் போகையில், ஈரமாயிருந்த வழுக்கு நிலத்தில், தளர்ந்த நடையாய்ப் போகிற நொண்டிக் காற் குதிரை சறுக்கி விழுந்தது. அத் தருணத்தில்

அதன்மேலிருந்த குருவும், தவறி, அருகே யிருந்த குழியில் தலை கீழும், கால் மேலுமாக விழுந்து, ஒரு கால் அங்க படியில் மாட்டிக் கொண்டு எழுந்திருக்கக் கூடாமல் கோவென் றலறி, "அன்பான சீடர்களே! என்னை எடுக்க வாருங்கள்" என்று கூப்பிட்டார். சீடரும், சரேலென்று ஓடிவந்து, குரு முன்னே எழுதித் தந்த ஜாபிதாவை யெடுத்து, ஒருவனை வாசிக்கச் சொன்னார்கள். அதிலே "விழுந்த தலைப்பாகை எடுக்கவும், விழுந்த வேஷ்டி உத்திரிய மெடுக்கவும், விழுந்த சட்டை, குட்டை, உள்ளாடைகளை எடுக்கவும் வேண்டும்" என்று அவன் வாசித்தபடியே ஒவ்வொன்றாய் எல்லாவற்றையும் குருவிடத்தி லிருந்து கழற்றி எடுத்து அப்புறம் வைக்க, குருமாத்திரம் நிருவாணமாய் அங்கே கிடந்தார்.

அவரிப்படிக் குழியிற் கிடந்து தம்மையும் எடுக்கச் சொல்லி எவ்வளவு கெஞ்சினாலும், எவ்வளவு சலித்துக் கொண்டாலும், எவ்வளவு கடுஞ்சொற் சொன்னாலும் சீடர்கள் "இதுவும் முன்னமேதானே ஜாபிதாவில் எழுதாததனாலே நாங்கள் எடுக்க மாட்டோம்" என்று ஒரே பிடிவாதமாக நின்றார்கள். மேலும் அவர்கள், "ஐயா, குரு சிகாமணியே! எடுக்கவில்லை என்று வீணாய் எங்கள்மேல் கோபிக்கிறீரே; நல்லது, உம்மையும் எடுக்கும்படி எழுதினதெங்கே? காட்டும் பார்ப்போம். எழுதினபடி செய்வோமே ஒழிய, எழுதாததை, அப்படித் 'தடிக்கு மிஞ்சின மிடா' வைப்போல வரம்பு கடந்து ஒரு போதும் செய்ய உடன்பட மாட்டோம்" என்றார்கள். அவரும் இவர்கள் சாதனையைக் கண்டு தப்பும் வழி

வேறொன்றும் காணமையால், ஓலையும் எழுத்தாணி யும் வாங்கிக் கிடந்த விடத்திலேதானே "நான் விழுந் தாலும் எடுக்கக் கடவீர்கள்" என்று கைகால் நடுங்கிக் கொண்டே எழுதிக் கொடுத்தார்.

எழுதியதைக் கண்டு எல்லாரும் ஒருமிக்கப் போய் அவரை எடுத்தார்கள்; அவர் விழுந்த குழியிற் சேறிருந்த படியால், குரு வுடம்பெல்லாஞ் சேறுபட்டு அழுக்கான தென்று சமீபத்திலிருந்த தண்ணீரிலே குளிப்பாட்டினார்கள்; பின்பு பழையபடியே உடுப் பெல்லா முடுத்திக் குதிரைமே லேற்றி மடத்துக்குக் கொண்டுபோய் விட்டார்கள்.

அரும்பொருள் :— அங்கபடி - குதிரை யங்கவடி. உத் தரியம் - மேலாடை. சலித்து - இளைத்தோய்ந்து. சேறு - தொளி.

## வினாக்கள்

1. குருவும் சீடரும் பிரயாணம் செய்யக் காரணம் என்ன?

2. 'விழுந்த வெல்லாம் எடுக்க வேண்டும்' என்ற குருவின் கட்டளையை மடையன் எவ்வாறு நிறை வேற்றினன்?

3. சீடர்கள் குருவை நிருவாண மாக்கியது ஏன்?

4. சீடர்கள் குழியில் விழுந்த குருவை எடுப்பதற்கு மறுத்தது ஏன்?

5. பின் அவர்கள் குருவை எடுக்கக் காரணம் என்ன?

## பயிற்சி

வாக்கியத்தில் உபயோகித்துக் காட்டுக:

பகுத்தறிந்து, சலித்து, சாதனை, சறுக்கி.

## 21. பத்திரிகைச் செய்தி

### நோயற்ற வாழ்வு

[டாக்டர், எஸ். காந்திமதிநாத பிள்ளை அவர்கள்]

நம் மக்கள் நம் நாட்டில் நெடுங்காலமாகக் கையாண்டுவந்த வெந்நீர்ப் பழையதையும், நீர் ஆகாரத்தையும் நாம் காலை உண்டியாக வைத்துக் கொள்வது மிகவும் நல்லது. இந்த உணவில் பி. வைட்டமின் சத்து நிறைந்திருக்கிறது. நம் குழந்தைகளும், இளைஞர்களும் இவ்வுணவை உண்டு, உடல் வளர்ச்சி பெற்று மேம்படும்படி செய்ய வேண்டியது நமது இன்றியமையாத கடமையாகும். வயலில் வேலை செய்யும் பாட்டாளியும், மில்களில் வேலை செய்யும் உழைப்பாளியும் இந்த உணவை உண்டால், உழைப்பினால் ஏற்படும் களைப்பு நீங்கப்பெற்று, அதிக நேரம் வேலை செய்யும் திடமும், நல்ல ஆரோக்கியமும் அடைவார்கள்.

இதை விட்டுவிட்டுப் பலர் காப்பி, தேயிலை மயக்கத்தில் மூழ்கி, எலும்புருக்கி, சோகை முதலிய நோய்களுக்கு உள்ளாகிறார்கள். காப்பியும், தேயிலையும் உண்ட சிறிது நேரத்திற்கு ஒரு புதிய உணர்ச்சியையும், உற்சாகத்தையும் உண்டுபண்ணுகின்றன. ஆனால் அதற்குத் தக்கபடி நரம்புத் தளர்ச்சி பின்னால் ஏற்படுகிறது. காலையில் காப்பிக்குப் பதிலாகப் பால், மோர், அரிசிக் கஞ்சி, பாசிப் பயற்றுக் கஞ்சி இவற்றை இட்டிலி, தோசையுடன் உட்கொள்ளலாம். மாலையில் ஆரஞ்சு, தக்காளி, எலுமிச்சம் பழச் சாறு, நீர்மோர், முதலியவற்றை உட்கொள்வது நல்லது.

# 22. அசோகன் அமைதி

[ தே. ப. பெருமாள் ]

இடம் : போர்க்களம்.        பொழுது : பிற்பகல்.

உறுப்பினர் : அசோகன், படைத்தலைவன் வீரசேனன்.

அசோகன் : வீரசேனு! இது என்ன? எங்குப் பார்த்தாலும் இரத்தக் களமாக வன்றோ தோன்று கிறது! பிணங்கள் மலை மாதிரி குவிந்து கிடக்கின் றனவே! ஆ! என்ன கொடூரக் காட்சி!

வீரசேனன் : ஆம் மன்னவ! நமது படைக் குரிய அரிய ஆற்றலின் விளக்கம் இது. அவர்கள் காட்டிய வீரம், அவர்களது உள்ள உணர்ச்சியின் வெற்றிக் குறி இது.

அசோ : இது என்ன வெற்றி? இதனுல் நமக்கு மகிழ்ச்சியா?

வீர : ஏன் இல்லை, அரசே! இதற்குமுன் தமது படைகள் எத்தனையோ இடங்களில் போராடி இருக் கின்றன. ஆனுல் இவ்வளவு பெரிய எதிர்ப்பை எங்கும் அவை கண்டதில்லை. இத்தகைய துன்பத்தை அவை எவ்விடத்திலும் எய்தியதில்லை. இந்தப் போரில் மலையோடு மலை மூட்டியது. கடலோடு கடல் எதிர்த்தது. கலிங்கர்கள் மகா வீரர்கள்; உறுதி குலையாத உள்ளம் படைத்த தீரர்கள்; தங்கள் உயி ரையும் பொருட் படுத்தாமல் போர் செய்தார்கள்.

அசோ ; இதிலென்ன வியப்பிருக்கிறது? இது இயல்புதானே?

வீர: இயல்பா? வீரமும், போர்த்திறனும் கலிங்கருக்கு மட்டும்தான் சொந்தமா? தாங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே!

அசோ: வீரசேனு! நான் சொல்வதைக் கூர்ந்து கேள்.

வீர: என்ன?

அசோ: கலிங்கம் கலிங்கரின் தாய்நா டல்லவா? அது அவர்களின் போக பூமி யல்லவா?

வீர: ஆம்.

அசோ: அவர்கள் தங்கள் தாய்நாட்டை எப்படி இழப்பார்கள்? செழிப்பு மிகுந்து, செல்வம் கொழிக்கும் தங்கள் தாய்நாட்டை எவ்விதம் துறப்பார்கள்? அது பகைவர் கையில் பாழாகப் பார்த்து நிற்பார்களா? மாட்டார்கள். தங்கள் முன்னேயோரின் உழைப்பாலும், சிந்தனையாலும் தழைத்து எழில் பெற்றதல்லவா அது? அதை அவர்கள் தங்கள் உயிரைவிட மேலாகக் கருதுவது இயற்கைதானே! ஆனுல், உங்களுக்கு இவ் வுணர்ச்சி இருக்கவே இருக்காது. நீங்கள் அவர்களைவிட இதில் மிகவும் வேறுபட்டவர்கள்,

வீர: எங்களுக்கு உணர்ச்சியும், ஊக்கமும் இல்லாமலா இவ்வளவு வெற்றி கிடைத்தது?

அசோ: இதை வெற்றி என்று எண்ணுகிருய்? உண்மையில் இது நமக்கு வெற்றியில்லை. வெற்றி என்று தப்பாக எண்ணுகிருய். இந்தப் போரில் வெற்றிமாலை சூடியவர் கலிங்கரே.

வீர: அரசே! தாங்கள் பேசுவது வேடிக்கை யாக இருக்கிறதே!

அசோ: அமைதி கொள், வீரசேனா! உனது ஆணவ வெறியை விட்டு, உனது பேராசையை நீக்கி, நீ இதை எண்ணிப்பார். அப்போதுதான் இதன் உண்மை உனக்கு விளங்கும்.

வீர: தாங்கள் சொல்வது எனக்குப் புரிய வில்லையே!

அசோ: நாம் நாட்டாசையால் கலிங்கத்தின் மீது போர் தொடுத்தோம். ஆனால், கலிங்கர்கள் தங்கள் நாட்டை இழக்கக் கூடாது என்று உறுதி கொண்டி ருந்தார்கள்; இதனால், நேர்மையுடன் தங்கள் உயிர் போகும் வரை எதிர்த்தார்கள். நமது பெரும் படையை வெற்றி கொள்ள இயலாமல், போர் செய்து மடிந்தார்கள்; தங்கள் கடமையை நிறை வேற்றி னார்கள். இதில் அவர்கள் வெற்றியிலும் மேலான ஒரு சிறப்பை எய்திவிட்டார்கள்.

வீர: அரசே! அப்படியானால் நமது செயல் தவறு என்றா சொல்கிறீர்கள்?

அசோ: இதி லென்ன ஐய முளது? நமது செய்கை தவறேதான். நாம் நம்மை எதிர்த்தவர் களையா எதிர்த்தோம்? இல்லையே? நாம், பேராசை என்னும் மாயவலையில் சிக்கி, அறிவிழந்து விலங்காகி விட்டோம். நேர்மை ஒழுங்கை நிலை குலையச் செய் தோம். அழகு நிரம்பிய, அரும்பயன் மிக்க, அமைதி கொண்ட, ஒரு நாட்டை அலைத் தழித்தோம்; அதைச் சுடுகா டாக்கினோம்; மக்கள் அனைவரையும் கொன்று குவித்தோம்.

**வீர:** பெருந்தகையே! தாங்கள் இன்று பேசுவன வெல்லாம் புதுமையாகவே தோன்றுகின்றன.

**அசோ:** ஆம், புதுமையாகவேதான் தோன்றும். இன்று புதுமையில் தான் அசோகன் நிற்கின்றான்.

**வீர:** மன்னவ! தங்கள் ஆணைப்படிதானே நாங்கள் நடந்தோம்?

**அசோ:** உண்மைதான்; இதில் குற்றம் புரிந்தவர்கள் நீங்கள் அல்லீர். குற்றவாளி அசோகனே; இப்போது அந்த அசோகன் இல்லவே இல்லை. இப்போதுள்ள அசோகன் வேறு. இவனது உள்ள வானம் இருண்டிருக்க வில்லை. இவனது மனக் கடலில் கொந்தளிப்பு இல்லை. இவனது அறிவை மறைத்திருந்த திரை விலகி விட்டது. இவனைத் தெளிவும் அமைதியும் அணைந்துள்ளன. இவன், ஒரு பேரொளியைக் கண்டு, அதன் வழியே செல்கின்றான். வா, போகலாம்.

(இருவரும் செல்கின்றார்கள்)

## இரண்டாம் காட்சி

இடம் - அரச அவை. பொழுது: முற்பகல்.

உறுப்பினர்: அசோகன், சேனாதிபதி வீரசேனன், அமைச்சன் நிர்மலன், ஏனைய முக்கியஸ்தர்கள்.

**அசோ:** அமைச்சரே! கலிங்கப் போரில் மொத்தம் இறந்தோர் எத்தனை பேர்?

**நிர்மலன்:** அரசே! ஒரு இலட்சம் பேர்.

**அசோ:** இன்னும் ... ... ... ... ...

வீர: இதைப் பற்றி இன்னும் தெளிவான கணக்கு எடுத்து முடியவில்லை. ஆனால், நமது படையி லுள்ளவர்கள் பகைவரில் ஒரு இலட்சம் பேரைக் கொன்றிருக்கிறார்கள். இன்னும் இதைப் போல் பல மடங்கு, இந்தப் போரில் இறந்திருக்க வேண்டும்.

அசோ: அது எந்த முறையில்?

வீர: நமது படைவீரர்கள் வரும் வழியில் பலரைத் தாக்கிக் கொன்றதுண்டு.

அசோ: ஐயோ! மிகவும் கொடுமை. குற்ற மற்ற வர்களில் எத்தனை பேர் இறந்தார்களோ? கற்புடைய பெண்களும், பச்சைக் குழந்தைகளும் அநீதியாகக் கொல்லப்பட் டிருப்பார்கள். ஏன், அமைச்சரே! இந்தப் படைவீரர்களுக்கு உள்ளம் என்பதே கிடையாதா?

வீர: ஏன் கிடையாது? உள்ளம் உண்டு; உள்ளத்திலே தளராத ஊக்கமும் உறுதியும் உண்டு. ஓங்கி நிலைக்கும் உயரிய வீரம் உண்டு. இந்த உள்ளம் இல்லாவிட்டால், இத்தனை பேர்களையும் இவர்கள் எளிதில் கொன்று குவிக்க முடியுமா? உலகமே பாராட்டும் இந்த உயர்ந்த வெற்றியைத் தான் பெற்றிருக்க முடியுமா?

அசோ: இந்த வெற்றியை நீருமா புகழ்ந்து பாராட்டுகிறீர்? நல்லது, நாட்டைக் காக்கும் காவல னுக்கு நல்லறிவையும், உயர் வழியையும் காட்டவேண் டிய பொறுப்பு அமைச்சரைச் சார்ந்த தல்லவா?

வீர: ஆம், அரசே! அதற்கென்ன சந்தேகம்?

அசோ: அப்படியாகில், நீர் உமது கடமையில் தவறிவிட்டீரா?

நீர்: இல்லை, இல்லை. ஒருக்காலும் இல்லை. நிர்மலன் தனது கடமையிலிருந்து என்றும் தவறு வோன் அல்லன். அவன் தனது பொறுப்பைச் சிறப்பாக நிறைவேற்றி யுள்ளான். அதை எண்ணி அவன் உள்ளம், களிக்கடலில் துள்ளிக் குதிக்கிறது; மட்டற்ற மகிழ்ச்சியால் பெருமை எய்துகிறது.

அசோ: அப்படியானல், நிர்மலரின் அறிவு விளக்கு அணைந்திருக்க வேண்டும். நேர்மை யற்ற எண்ணப்புயல் இந்த அழிவைக் கொண்டுவந் திருக்க வேண்டும். அவரது விழிகள் ஒளியை இழந்ததால், அவர் குருட்டுப் பாதையைக் குற்றமில்லாத பாதை யாய்க் கொண்டிருக்கவேண்டும்.

நீர்: இல்லவே இல்லை. நிர்மலனின் அறிவு விளக்கு அணையவில்லை. ஆனல், அது ஆக்கவழியைத் தாவிச்சென்றது. நிர்மலனது விழிகள் கண்ட ஒளி மயமான நெடுவழியிலேயே அவன் சென்றிருக்கிறன்.

அசோ: அப்படியானல் அவர் உள்ளம் இரும் பாகிவிட்டதா?

நீர்: அவன் உள்ளம் இரும்பாகவில்லை. அது உணர்ச்சி, ஊக்கம், ஆற்றல் ஆகியவற்றல் புடம் வைக்கப்பட்டுப் பொன்னகிவிட்டது. அந்தப் பொன் னின் ஜோதி வீசிய வீச்சே, இந்த வெற்றியின் விளக் கம். விரும்பியது விரைவில் வந்திடக் காரணம்.

அசோ: நெருப்பைக் கக்கும் எரிமலை தனது செயலை எண்ணிச் சிந்தை மகிழ்வதுபோ லிருக்கிறது

உமது எண்ணம். அமைச்சரே! இனி நான் உம்மிடம் விளங்கச் சொல்லுகிறேன். நீர் என்னை ஆழம் காண முடியாத இருள் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கில் கொண்டு தள்ளிவிட்டீர்.

நீர் : இல்லை, அரசே! அதில் நான் மாறுபட்ட கருத்துடையவன். சரித்திர ஏட்டில் அறிவு மிக்க அமைச்சர்கள் செய்துள்ள அரும்பணியையே நானும் செய்துள்ளேன்.

அசோ : இல்லை, இல்லவே இல்லை.

நீர் : மத்திய ஆசியாவையும், வட இந்தியாவையும் தன்னகத்தில் கொண்டிருக்கும் நமது சாம்ராஜ்யத்தை இன்னும் விரிவுடைய தாக்கத் தாங்கள் எண்ணினீர்கள். தெற்கிலும், தென் கிழக்கிலும் உள்ள நாடுகளையும் இந்தச் சாம்ராஜ்யத்தோடு சேர்க்கத் தாங்கள் திட்டமிட் டிருந்தீர்கள். அதற்காக முதலில் கலிங்கப் போரை ஆரம்பிக்க ஆணையிட்டீர்கள். இதில் நான் செய்யவேண்டியது என்ன ?

அசோ : நீர்தான் சொல்லுமே.

நீர் : தங்களுக்குத் தோல்வி வராமல் வெற்றி கிடைக்க வேண்டிய வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டும். அதைத்தான் நான் செய்தேன்.

அசோ : நீர் செய்தது தவறு. நன்மை என்று எண்ணித் தீங்கைச் செய்தீர். அரசன் தவறான பாதையில் சென்றால், அவனைத் திருத்தும் பொறுப்பு அமைச்சரைச் சார்ந்ததல்லவா? நான் நல்லதை மறந்து நாட்டாசை கொண்டேன். அழிவுச் சமாதியில் அழகைக் காண முயன்றேன். கொலைக் காண்டத்தில் கொடியை உயர்த்த எண்ணினேன். நீர்

எனது எண்ணம் என்னும் நெருப்பிற்கு, உமது உடன்பாடு என்னும் நெய்யைச் சொரிந்தீர். எனது தீய கொள்கைக்கு உமது அறிவால் ஆக்கம் கொடுத்தீர்.

நீர் : இதை ஒப்புக் கொள்கிறேன். வேறு நான் என்ன செய்திருக்க வேண்டும் ?

அசோ : நீர் எனது நாட்டாசையை மாற்றி இருக்கவேண்டும். எனது அறிவை விளக்கப்படுத்தி இருக்கவேண்டும். உலகத்தில் சாந்தியும், சமாதானமும் நிலவ, நிர்மலரே! நீர் எனக்கு வழிகாட்டி இருக்க வேண்டாமா ?

நீர் : தங்கள் கருத்து இதுவாகில், இதில் நான் தவறியவனே.

அசோ : பாரும், அமைச்சரே! மக்களின் வாழ்வுக் காலம் மிகவும் குறுகியது. இந்தச் சிறுகாலம் முழுதும் அவர்கள் இன்பமாகவும், அமைதியாகவும் வாழ வேண்டாமா? தமது நாட்களை அமைதியாகக் கழித்துவந்தவர்களை வீணுகப் போரில் மாட்டிவிட்டோமே! கலிங்கப் போர்க் களத்தைப் பார்த்ததும், எனது நெஞ்சம் உருகி விட்டது. விழிகள் நீரைச் சிந்தின. எனது மடமை, எனது கண் முன்னே தோன்றி, உருக்கொண்டு கூத்தாடி என்னைப் பயமுறுத்தியது; பரிகசித்தது. இந்தப் போரில் இறந்தவர்களின் சந்ததிகள், எனது இந்த வெறியாட்டத்தைச் சபித்துக் கொண்டுதானே இருப்பார்கள்? அவர்கள் தம் நெஞ்சு தகர்ந்து புலம்பித் தவித்துக் கொண்டுதானே இருப்பார்கள் ?

நீர் : ஆம், இது உண்மைதான்.

**அசோ :** அசோகனின் இன்றைய புதிய அரசியற் கொள்கை என்னவென்று உமக்குத் தெரியுமா ?

**நிர் :** தெரியாது அரசே ! அது என்ன ?

**அசோ :** அசோகன் இனித் தனது வாழ்நாட்களில் போர் செய்வதே இல்லை. அவனைக் கண்டு இனி எந்தச் சிற்றரசரும், பேரரசரும் அஞ்ச வேண்டுவதில்லை. அவரெல்லாம் தங்கள் தங்கள் நாட்டிலுள்ள குடிமக்களுக்கு வேண்டிய நன்மைகளைச்செய்து ஆட்சி புரியலாம். எங்கும் அமைதியும் இன்பமும் நிலவ வேண்டும். இதுதான் அசோகனின் இன்றைய அரசியற் கொள்கை.

**நிர் :** அரசே ! தங்கள் குறிக்கோள் சிறந்தது; மிகப் புனிதம் வாய்ந்தது; நிலையாத உலகில் நிலைத்த இன்பம் பெருக்குவது.

**அசோ :** அமைச்சரே ! இதை உலகம் எங்கும் பறை சாற்றும். ஒவ்வொரு மன்னரும் இதை அறிய வேண்டிய ஏற்பாடுகள் செய்யும்.

**நிர் :** ஆகட்டும் அரசே ! இதோ போய், வேண்டிய ஏற்பாடுகள் செய்கிறேன்.

(நிர்மலன் போகின்றான் )

**அரும்பொருள் :—** ஆற்றல் - வலிமை. உறுதி - மனத் திட்பம். புரிய - விளங்க. பெருந்தகை - உயர்ந்த குணங்களை உடையவன். மடமை - அறியாமை. பரிகசித்தது - கேலிசெய்தது.

---

# குறிப்புரை

## I. வாழ்த்து

### 1. கடவுள்

கதிரவன் - சூரியன். புட்கள் - பறவைகள். தரு - மரம். பொதிஅலர் - தொகுதியாகிய மலர். ஏத்தும் - துதிக்கும். அகமே - மனமே.

### 2. கலைமகள்

ஆய - பொருந்திய. ஏய - தகுதியான. தூய - பரிசுத்தமான. உரு - திருமேனி. பளிங்கு - படிகம். இடர் - துன்பம்.

### 3. குடியரசு

ஆதிபகவன் - முதற்கடவுள். அறவாழி - தருமச் சக்கரம். அந்தணன் - அழகிய அருளை உடையவன். சந்ததம் - எப்பொழுதும்.

## II. நீதி

### 1. திருக்குறள்

1. நிலத்தியல்பால் - தான் சேர்ந்த நிலத்தின் தன்மைப் படி. அற்றாகும் - அந் நிலத்தின் தன்மைத் தாகும்.

2. கருமம் - காரியம். எண்ணி - ஆலோசித்து. துணிக - தொடங்குக. இழுக்கு - குற்றம்.

3. கட்டளைக்கல் - உரைகல். தத்தம் கருமமே - தாம் தாம் செய்யும் காரியமே.

4. நாண் - பழி பாவங்களுக்கு அஞ்சுதல். ஒப்புரவு - உதவி செய்தல். கண்ணோட்டம் - அருள்.

5. சுழன்றும் - பல தொழில்களைச் செய்து திரிந்தும். உழந்தும் - வருந்தியும்.

## 2. இனியவை நாற்பது

1. பிச்சைபுக்கு - பிச்சை எடுத்து. கை கொடுத்தல் - உதவுதல். சாலவும் - மிகவும். முன்னினிது - மிகவும் இனிது. ஏர் - அழகு. மூருவல் - பல். தெற்றவும் - தெளிவாக. மேலாயார்ச் சேர்வு - பெரியோருடன் சேர்க்கை.

2. வருவாய் - பொருள் வரவு வழங்கல் - கொடுத்தல். பங்கு - பக்கம். ஆகாத - சாராத. பெருவகைத்து - பெரும் பயனை உடையது. பெட்டவை - விரும்பியவை. திரிபு இன்றி - இயல்பில் வேறுபடாமல்.

3. கையிகந்து - நீக்கி. உயர்வு உள்ளி - மேன்மேலும் உயர் தலை எண்ணி. ஒளிபட - புகழுண்டாகும்படி.

4. வௌவான் - அபகரியாமல். அல்லவை - தீயவை. மாணு - மாட்சிமை யற்ற. மயரிகள் - அறிவில்லாதவர்கள். சேராத்திறம் - சேராத வழிகளை. தெரிந்து - ஆராய்ந்து.

5. தானம் - இருப்பிடம். ஊனம் - குற்றம்.

## 3. அறநெறிச் சாரம்

1. ஈதல் - கொடுத்தல். களைகட்டு - களைபிடுங்கி. அட்டி - இட்டு. பைங்கூழ் - பசிய பயிர். சிறுகாலை - இளமையில்.

2. வைகலும் - தினந்தோறும். சால - மிகவும். கீழ்கட்கு - கீழோருக்கு.

3. கரி - சாட்சி. குற்றேவல் - சிறு வேலை. பிடி - பெண் யானை. களிறு - ஆண் யானை.

4. இம்மை - இப் பிறப்பு. உம்மை - மறு பிறப்பு. பட்டாங்கு - உண்மை நூல். நட்டார் - சினேகிதர்.

5. தேம்படு - இனிமை பொருந்திய. ஓம்பல் - பாது காத்தல். களியாம் - மயக்கமாம். கடையாயார் - கீழ்ப் பட்டவர்.

## 4. திரிகடுகம்

1. கணக்காயர் - ஆசிரியர். பிணக்கு-வழக்கு. அவை - சபை. பாத்து - பகுத்து.

2 செரு - போர். நாடா - ஆராயாத. கோள் - கொள்கை. மாட்சி - பெருமை.

3 வியந்து - புகழ்ந்து. தருக்கல் - கர்வம் கோடல். கொன்னே - வீணாக முன்னிய - நினைத்த. வெஃகும் - விரும்பும். படை - கருவி.

4. கட்டி - வெல்லம். கைப்பு - கசப்பு.

5. பால் பற்றி - ஒருசார்பாக. தூஉயம் - தூய்மை உடையோம்.

## 5. ஆசாரக்கோவை

1. இன்னா - துன்பமானவைகளை. ஒப்புரவு - உதவி. நட்டல் - சிநேகித்தல்.

2. முந்தையோர் - முன்னோர்.

3. குறளை - புறங்கூறல். வௌவல் - களவு செய்தல். அழுக்காறு - பொறாமை. ஐயம் - சந்தேகம். நிரயம் - நரகம். செற்று - கோபித்து.

4. கிழக்குக்கண் - கிழக்குமுகமாக. துளங்காமை - அசையாமல். இரீஇ - இருந்து. உகாமை - சிந்தாமல்

5. கேள்வியவர் - நூற்கேள்வி உடையவர். இழியார் - இகழ்ந்து பேசார். நேர்ந்து - உடன்பட்டு. கரவார் - ஒளியார். எள்ளி - எளனம் பண்ணி.

## 6. திருவேங்கட சதகம்

ஈயென - கொடு என்று சொல்ல. தந்து மகிழும் தமையன் - இராமன். தபசு புரியும் தம்பி - பரதன். மதனி - இங்குச் சீதை. வனச மலர் - தாமரைப் பூ. வாவி - குளம்.

## III. கதை

### யானையை வென்ற முயல்

1. துன்னரும் - நெருங்குவதற்கரிய. அடவி - காடு. தும்பி - யானை. பன்னரும் - சொல்வதற்கரிய. இறை - அரச யானை. ஒற்றர் - வேவு பார்ப்பவர்.

2. சந்திர சரசு - சுனையின் பெயர். சிலீமுகன் - முயல் அரசின் பெயர். மந்திர - சூழ்ச்சியில் வல்ல.

3. புக்கால் - புகுந்தால். இவண் - இங்கு. உபாயம் - யோசனை.

4. ஞானம் - அறிவு. நனி - மிகவும்.

5. வீறு - உணர்ச்சி.

6. குவடு - உச்சி. களிறு - ஆண்யானை.

7. திங்கள் - சந்திரன். விளம்பு - சொல்வாய்.

8. சசி - சந்திரன். சலக்கிரீடை - நீர் விளையாட்டு. முயங்கி - செய்து.

9. தண்ணுறு - குளிர்ச்சி பொருந்திய. அண்ணலார் - பெருமை பொருந்தியவர். தடுத்தி - தடுப்பாய்.

10. துங்க - பரிசுத்தமான. கோதமாய் - மனவேறு பாட்டுடன். இகலினர் - பகைத்தவர். மூதறிவு - முதிர்ந்த அறிவு. முனியார் - கோபியார்.

11. ஆவிமுடிவுறார் - இறவார்.

12. மூவர்-அயன், அரி, அரன் என்போர். முதல்வன் - முதன்மையானவன். முனைவனார் - சிவனார். தேவன் - சந்திரன்.

13. திங்களம்பகவன் - சந்திரன். வெங்களிறு-கொடிய யானை. மீள்க - திரும்புக.

14. தந்தி - யானை. தேவு - கடவுள். குடைவது-நீராடுவது. போற்றி - பணிந்து. உய்ந்து - பிழைத்து.

15. புனல் - நீர். தடம் - இடம். புனல் தடம் - நீர்நிலை. ஒன்றிய - பொருந்திய. உடுக்கள் - நட்சத்திரங்கள். மாதர் - மனைவிமார்.

16. மதி - சந்திரன். கான் - காடு.

யானையையும், சந்திரனையும் குறிக்க வந்துள்ள சொற்களை எடுத்தெழுதுக.

---

## IV. பல்சுவை

1. தலைக்கடை - வாயிற்புறம். கோதை - மாலை.

2 மேதினி - பூமி எண்ணார் - மதிக்கமாட்டார். நுவல் - சொல்லப்படுகிற. மால் - திருமால். மகள் - இலக்குமி. ஆலாலம் - விடம். அரன் - சிவன்.

3. வண்டமிழ் - செழுந்தமிழ். வழுதி - பாண்டியன்.

4. இரந்துண்ணி - பிச்சை எடுத்து உண்பவன். மலைச்சீலி - மலையில் வாழும் குறத்தி.

5. வெள்ளைக் கவி - வெளிப்படையான பொருள் உள்ள கவி, பயனற்ற கவி. காளமேகம் - இருண்ட மேகம்.

6. செஞ்சுடரோன் மைந்தன் - சூரியன் மகனாகிய சுக்கிரீவன். தென்னிலங்கை வேந்தன் - வீடணன். பஞ்சவர்-பாண்டவர். பார்த்தன் - அர்ச்சுனன்.

7. செல் - மேகம். (போவாய்). நாமம் - பெயர். அல் - இருள். விண் - ஆகாயம்.

8. பரம்பொருள் - மேலான பொருள். பண் - இசை.

9. முகில் - மேகம்.